# ஸ்ரீஸத்குரு தியாகராஜ சுவாமி கீர்த்தனைகள்

(பொருள் விளக்கத்துடன்)



தமிழில்

முனைவர் த.சா. கிரிபிரகாஷ்

முனைவர் லக்ஷ்மீ பொதுவாள்

# ஸ்ரீ ஸத்குரு
# தியாகராஜ சுவாமி கீர்த்தனைகள்

(பொருள் விளக்கத்துடன்)

தமிழில்

முனைவர் **த.சா. கிரிபிரகாஷ்**

முனைவர் **லக்ஷ்மி பொதுவாள்**

**பிரகாஷ் பப்ளிகேஷன்ஸ்,**
பிளாட் எண். 29, மீனாட்சி நகர்,
பாரதியார் 7ஆவது தெரு,
எஸ்.எஸ். காலனி, அரசரடி,
மதுரை-10.

2001

Tamil

**SRI SADGURU THYAGARAJA SWAMY KIIRTHANAIGAL**

(Tamil word by word meaning with gist for Telugu Kiirthanas of
Sri Sadguru Thyagaraja Swamy)

***Authors***

Dr. ***T.S. Giriprakash,***
Prof. & Head,
Dept. of Telugu & Comparative literature
Madurai Kamaraj University, Madurai - 625 021. &

***Dr. Lakshmi Poduval***
Reader, Sri Sadguru Sangeetha Vidyalayam,
College of Music, Madurai -625 002.

1/8 Demmy Size

XVI + 208 Pages

1000 copies

First Edition January 2001

Copy right : Authors

Typeset by ***Perfect Computers,***
106-A, Palace Road, Madurai.1
✆ **739508**

**Prakash Publications,**
Plot No. 29, Meenakshi Nagar,
Bharathiyar 7th Street,
S.S. Colony, Madurai - 625 010.
✆ 0452 - 608338

Price - Rs. 80/- (Rupees Eighty only)

# பொருளடக்கம்

# ஒலிபெயர்ப்பு முறை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| க | - | ka | த4 | - | dha |
| க² | - | kha | ன/ந | - | na |
| க³ | - | ga | ப | - | pa |
| க⁴ | - | gha | ப2 | - | pha |
| ச | - | ca / śa | ப³ | - | ba |
| ச² | - | cha | ப⁴ | - | bha |
| ஜ | - | ja | ம | - | ma |
| ஜ² | - | jha | ய | - | ya |
| ட | - | Ta | ர | - | ra |
| ட² | - | Tha | ல | - | la |
| ட³ | - | Da | வ | - | va |
| ட⁴ | - | Dha | ஷ | - | sha |
| ண | - | Na | ஸ | - | sa |
| த | - | ta | ஹ | - | ha |
| த2 | - | tha | ள | - | La |
| க3 | - | da | க்ஷ | - | ksh |

# (முன்னுரை)

ஸ்ரீ சத்குரு தியாகராஜ சுவாமிகளின் தெலுங்கு கீர்த்தனைகளுக்கு உரிய பதவுரை பொழிப்புரைகள் தமிழில் தரவேண்டும் என்ற எண்ணத்தோடு ஒரு மொழிபெயர்ப்பு ஆய்வுத்திட்டத்தை மதுரை காமராசர் பல்கலைக்கழக தெலுங்குத்துறை வழியாக பல்கலைக்கழக மானியக் குழுவிற்கு 15 ஆண்டுகளுக்கு முன் அனுப்பி இருந்தோம். அக் குழு எங்கள் திட்டத்தைப் பரிசீலித்து ஆய்விற்கு அனுமதி தந்ததோடு நிதி உதவியும் நல்க முன்வந்தது. மானியக்குழுவின் அனுமதி கிடைத்தவுடன் எங்கள் பணியைத் தொடங்கி பதவுரை பொழிப்புரை எழுதி திட்டப்பணியை நிறைவு செய்தோம். பல ஆண்டுகள் கழித்து இதனை அச்சிட வேண்டும் என்ற எண்ணத்துடன் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தை அணுகினோம். அந் நிறுவனம் இதனைப்பதிப்பிக்க உடனே உதவி நல்கியது.

ஸ்ரீ சத்குரு தியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனைகளுக்கு இத்தகைய ஒரு பதவுரையும் பொழிப்புரையும் தரும் முயற்சி, எங்களுக்கு தெரிந்த வரை இதுதான் முதன்முறை என்று கருது கிறோம். ஸ்ரீ ஸத்குரு தியாகாராஜ சுவாமியின் 100 தெலுங்குக் கீர்த்தனைகளை அகரவரிசைப் படுத்தி தமிழ் எழுத்து வடிவத்தில் முதலில் தந்து அதற்குக் கீழே பதவுரையும் பொழிப்புரையும் கொடுத்துள்ளோம். இதில் ஏதேனும் குறைகள் இருப்பின் எங்களுக்குத் தெரிவியுங்கள். அடுத்த பதிப்பில் அவற்றைத் திருத்திக் கொள்ளுவோம்.

இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய *மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர்* பேராசிரியர் மு. சாலிகு அவர்களுக்கும், சிறப்பான தொரு அணிந்துரை அளித்திருக்கும் *மதுரை ஸ்ரீ சத்குரு சங்கீத வித்யாலயம், இசைக்கல்லூரி முதல்வர் (பொறுப்பு)* முனைவர் இரா.மைதிலி அவர்களுக்கும்,

இந்நூலுக்கு அருளுரை நல்கிய **வி.என். நாகராஜ பாகவதர்,** மதுரை அவர்களுக்கும் எங்களது பணிவான வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி மிகக் கூர்மையாக அச்சுப்பிரதியைச் சரிபார்த்துக் கொடுத்த தமிழ்ப் பேராசிரியை. **முனைவர் பொன்னம்மாள்** *(ஸ்ரீ சத்குரு சங்கீத வித்யாலயம், மதுரை)* அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது. நூலாக்கத்தின் போது பல வகையில் உதவி புரிந்த **முனைவர் பா.ஆனந்தகுமார்** *(தமிழ்த்துறை, காந்திகிராமப் பல்கலைக்கழகம்)* அவர்களுக்கும் சிறப்பான முறையில் கணிப்பொறி அச்சாக்கம் செய்து கொடுத்த மதுரை **பெர்ஃபெக்ட் கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தின் உரிமையாளர் **திரு கா.சங்கர்** மற்றும் கணிப்பொறியச்சு வடிவமைப்பாளர் **திரு நீ.சு.பாலாஜி** ஆகியோருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். இந்த நூலினைத் தமிழன்பர்கள் ஆதரிப்பார்கள் என்று நம்புகிறோம்.

முனைவர் **த.சா. கிரிபிரகாஷ்**

முனைவர் **லக்ஷ்மி பொதுவாள்**

பேராசிரியர் மு.சாலிகு
**துணைவேந்தர்,**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
பல்கலைநகர், மதுரை-21.

## வாழ்த்துரை

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தெலுங்கு மற்றும் ஒப்பிலக்கியத் துறை பல வருடங்களாக பல்வேறு மொழி பெயர்ப்புகளில் ஈடுபட்டு வருகின்றது.

மொழிபெயர்ப்பு ஒரு கலை. மொழிபெயர்ப்பில் தான் ஒரு மொழியில் இருக்கின்ற கருத்துக்களை மற்றொரு மொழிக்குக் கொண்டு செல்ல முடியும். மொழிபெயர்ப்பில்தான் ஒரு மொழியில் இருக்கின்ற கலாச்சாரத்தை மற்றொரு மொழியினருக்குத் தெரிவிக்க இயலும். இக்கால கட்டத்தில் இத்தகைய மொழிபெயர்ப்பு என்பது பண்பாட்டு ஒற்றுமைக்கும் மிகச் சிறப்பாக அமையும்.

பல்கலைக்கழக மானியக்குழுவின் ஆராய்ச்சித் திட்டத்தைப் பெற்று அதில் மிக்க ஆர்வத்தோடு பணியாற்றி திருமலை திருப்பதி தேவஸ்தான நிறுவனத்திலிருந்து இந்நூலுக்குப் பண உதவியும் பெற்று இந்நூலைப் பதிப்பித்த மதுரை காமராசர் பல்கலைக்கழக தெலுங்கு மற்றும் ஒப்பிலக்கியத்துறை தலைவர், பேராசிரியர் முனைவர் **த.சா.கிரிபிரகாஷ்** அவர்கள் மற்றும் ஸ்ரீ சத்குரு ஸங்கீத வித்யாலய இணைப்பேராசிரியர், முனைவர் **லக்ஷ்மி** பொதுவாள் அவர்களும் இணைந்து ஒரு நல்ல ஆராய்ச்சிப் பணி செய்தமைக்கு என்னுடைய வாழ்த்துகளைத் தெரிவித்து இன்னும் ஸ்ரீ சத்குரு தியாகராஜ சுவாமி அவர்களின் மற்ற கீர்த்தனைகளையும் மொழிபெயர்த்து நூல் வடிவங்களில் கொண்டு வரவேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

(மு. சாலிகு)

மதுரை
22-1-2001

*கானகலாசிரோன்மணி, இராமநாதபுரம்,*
**ஸ்ரீ வி.என்.நாகராஜ பாகவதர்,**
மதுரை.

## அருளுரை

ஸ்ரீராமசந்திரபிரபுவின் குணங்களைத் துதித்து, கீர்த்தனைகளை இயற்றிய, சங்கீத வாக்கேயகாரர்களில் முதலிடத்தைப் பெற்றவர் ஸ்ரீ சத்குரு தியாகராஜ சுவாமிகள் ஆவார். ராமர் மீது இத்தனை கீர்த்தனைகளை எழுதியவர் யாரும் இல்லையென்று கூறினால் தவறாகாது. சில இடங்களில் பணிவோடும், மற்ற சில இடங்களில் கூர்மையாகவும் கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அனைத்திலும் பக்திதான் மூலம் என்று கூறலாம்.

தியாகராஜ கீர்த்தனைகள் பாடுவதற்கு சுலபமாகவும் இயல்பாகவும் இருக்கும். மேலும் சிறிய சொற்களில் பெரிய பொருளை அடக்கி இருப்பதனாலும் அவருடைய கீர்த்தனைகள் பெரும்புகழ் பெற்றது எனக்கூறினால் அது மிகையாகாது. சுவாமிகளின் கீர்த்தனைகள் காதிற்கு இனிமையாக இருந்தாலும் அவற்றை எல்லோரும் புரிந்துகொள்வது கடினம் ஆகும். சுவாமிகள் இராமாயணத்தை மிகத் தெளிவாக அறிந்து கொண்டவர். ஆதலால் அவர்களுடைய கீர்த்தனைகளில் இராமாயணத்தில் காணப்படுகின்ற பல விசேஷ செய்திகளும், நாம் அறிந்திராத இரகசிய செய்திகளும் காணப்படுகின்றன.

உண்மையில் தியகாராஜ சுவாமிகளின் கீர்த்தனைகளுக்கு பக்தி ரசம் முதுகெலும்பாகத் திகழ்கிறது எனக் கூறலாம். பக்தி இல்லாத சங்கீத ஞானம் பயன் அற்றது என்று அவரே கூறியிருக்கிறார். பக்திதான் முக்திக்குப் பாதை என்று மிக தெளிவாகத் தெரிவித்து

இருக்கின்றார். இதை அடிப்படையாக கொண்டுதான் சுவாமிகளின் கீர்த்தனைகளை இப்பொழுதும் எல்லோரும் பக்தி பாவத்தோடு பாடுகிறார்கள், கேட்கிறார்கள்.

இந்த நோக்கத்தோடு பேராசிரியர் முனைவர் த.சா. கிரிபிரகாஷ் அவர்களும் முனைவர் லக்ஷ்மி பொதுவாள் அவர்களும், ஸ்ரீ சத்குரு தியாகராஜ சுவாமிகளின் கீர்த்தனைகளில் கிட்டத்தட்ட 100 கீர்த்தனைகளுக்குப் பதவுரை, பொழிப்புரை ஆகியவற்றைத் தமிழில் கூறி, சுவாமிகளின் பக்தி பாவத்தை சங்கீதப்பிரியர்களின் இதயங்களில் நிலைக்கின்ற அளவுக்கு மிக நன்றாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இந்தவிதமாகவே சத்குரு தியாகராஜ சுவாமிகளின் அனைத்து கீர்த்தனைகளின் பொருளையும் விளக்கத்தையும் (பதவுரை, பொழிப்புரை) அனைத்துத்தரப்பு மக்களுக்கும் தெரிவிக்கவேண்டுமென ஆசிர்வதிக்கின்றேன்.

மதுரை
24-1-2001

V. N. Bhagavathar

வி.என்.நாகராஜ பாகவதர்

முனைவர் **இரா.மைதிலி**, M.Music.,Ph.D.
**முதல்வர்** (பொறுப்பு)
ஸ்ரீ சத்குரு ஸங்கீத வித்யாலயம்
(இசைக் கல்லூரி)
மதுரை - 2.

# அணிந்துரை

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தெலுங்கு மற்றும் ஒப்பிலக்கியத் துறை பேராசிரியர், முனைவர் **த.சா.கிரிபிரகாஷ்** அவர்களும் எங்களது ஸ்ரீ சத்குரு ஸங்கீத வித்யாலய இணைப்பேராசிரியர், முனைவர் **லக்ஷ்மி பொதுவாள் அவர்களும்** இணைந்து ஸ்ரீ தியாகராஜ கீர்த்தனைகளைத் தமிழில் மொழி பெயர்த்து ஒவ்வொரு வார்த்தைக்கும், பொருள் (அர்த்தம்) கூறியிருப்பது மிகவும் போற்றுதலுக்கு உரியதாகும். தெலுங்கு தெரியாதவர்களும் புரிந்து கொள்ளும் வகையில் நூல் அமைந்துள்ளது மிகவும் பாராட்டுதலுக்கு உரியது. பொதுவாக எந்தப் பாடல் ஆனாலும் பொருள் புரிந்து பாடினால் தான் பாவம் கிடைக்கும். ("பாவ ராகத்தோடு பாடப்படுவது தான் சங்கீதம், பாவத்தோடு ஆடப்படுவது தான் நாட்டியம்") இசைக் கலைஞர்களுக்கும், ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் இந்த மொழி பெயர்ப்பு நூல் மிகவும் உதவியாகவும், பயன்படும் வகையிலும் அமைந்துள்ளது. இவர்கள் எல்லா தியாகராஜ கீர்த்தனைகளையும் இம்மாதிரி மொழிபெயர்த்து புத்தகமாக வெளியிட வேண்டுமென, எல்லாம்வல்ல இறைவனை வேண்டிக் கொள்கிறேன்.

மதுரை
10-1-2001

இரா. மைதிலி

# கீர்த்தனைப் பட்டியல்

## 1. ஸௌராஷ்டிரம் - ஆதி$^{3}$

**பல்லவி**

*ஸ்ரீ க$^{3}$ணபதினி ஸேவிம்பராரே ஸ்ரீதமானவுலாரா! (ஸ்ரீ)*

**அனுபல்லவி**

*வாக$^{3}$ாதி$^{4}$பதி ஸுபூஜல ஜேகொனி*
*பா$^{3}$க நடிம்புசனு வெட$^{3}$லின (ஸ்ரீ)*

**சரணம்**

*பனஸ நாரிகேளாதி$^{3}$ ஜம்பூ$^{3}$ ப$^{2}$லமுலநாரகி$^{3}$ஞ்சி*
*க$^{4}$னதரம்பு$^{3}$ க$^{3}$னு மஹிபை பத$^{3}$முலு*
*க$^{4}$ல்லு க$^{4}$ல்லன நுஞ்சி*
*அனயமு ஹரிசரண யுக$^{3}$முலனு*
*ஹ்ருத$^{3}$யாம்பு$^{3}$ஜமுன நுஞ்சி*
*வினயமுனனு த்யாக$^{3}$ராஜ வினுதுடு$^{3}$*
*விவித$^{4}$க$^{3}$துல தி$^{4}$த்தளாங்கு மனிவெட$^{3}$லின (ஸ்ரீ)*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஸ்ரீதமானவுலாரா | - | அடியார்களே! |
| ஸ்ரீகணபதினி | - | சிறந்த கணபதியை |
| ஸேவிம்பராரே | - | சேவிக்க வாரீர் |
| வாகாதிபதி | - | பிரமன் |
| ஸுபூஜல ஜேகொனி | - | செய்யும் நல்ல பூஜையை ஏற்று |
| பாக நடிம்புசனுவெடலின | - | எழிலாக நடனமாடி எழுந்தருளிய |
| பனஸ நாரி கேளாதி | - | பலா, தேங்காய், நாவல்பழம் |

| | |
|---|---|
| ஜம்பூபலமுலனாரகிஞ்சி | ஆகியவற்றை அமுது செய்து |
| கனதரம்புகனு | பெருமையோடு |
| மஹிபை | புவியின் மீது |
| பதமுலு | திருவடிகளை |
| கல்லு கல்லன நுஞ்சி | ‘கல்’‘கல்’ என ஒலிக்க ஊன்றி |
| அனயமு | எல்லாமும் |
| ஹரிசரணயுகமுல | ஹரியின் திருவடியிணைகள் |
| ஹ்ருதயாம்புஜமுனநுஞ்சி | ஹ்ருதயத்தில் கொண்டு |
| வினயமுனனு | பணிவோடு |
| த்யாகராஜ வினுதுடு | தியாகராசனால் |
| | வணங்கப்படும் |
| விவிதகதுல | பலவிதமான தாள நடைகளில் |
| தித்தளாங்குஅனி | ‘தித்தளாங்கு’ என்று |
| வெடலின | ஆடி எழுந்தருளிய. |

## பொழிப்புரை

மெய்யடியார்களே! பிரமன் முதலியோர் செய்யும் பூஜையை ஏற்று எழிலாக நடனமாடி எழுந்தருளிய சிறந்த கணபதியை சேவிக்கவாரீர்! பலாப்பழம், தேங்காய், நாவல் பழம் ஆகியவற்றை அமுது செய்து, தரையின் மீது ‘கல்’ ‘கல்’ என ஒலிக்கத்திருவடிகளை ஊன்றி எப்போதும் ஹரியின் திருவடியிணைகளை இதயத்தில் பதித்து, பணிவோடு தியாகராஜனால் வணங்கப்பெறும், ‘தித்தளாங்கு’ என பலவிதமான தாள நடைகளில் ஆடிடும் ஸ்ரீ கணபதியை சேவிக்க வாரீர்.



## 2. அட$^{2}$ாண - ஆதி$^{3}$

**பல்லவி**

*அட்ட பலுகுது$^{3}$ விட்ட பலுகுது$^{3}$*
*வந்து$^{3}$கேமி ஸேது ராம? நீ* ''வ''

**அனுபல்லவி**

*தொட்லநர்ப$^{4}$குல நூதுவு; மரி மரி*
*தோசிநட்லு கில்லுதுவு; ஸ்ரீராம! நீ* ''வ''

**சரணம்**

*ஜீவுல சிக்ஷின்சக$^{3}$ நேர்துவு, சிரஞ்*
*ஜீவுலுக$^{3}$ா ஜேயநேர்துவுரா;*
*ப$^{4}$ாவமெரிகி ப்ரோதுவு; ஸத்ப$^{4}$க்த*
*ப$^{4}$ாகதே$^{4}$ய! ஸ்ரீ த்யாகராஜ விநுத!* ''வ''

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ராம | - | ஓ இராமா! |
| நீவு | - | நீ |
| அட்ட | - | அவ்விதம் |
| பலுகுதுவு | - | பேசுவாய் |
| அந்துகு+ஏமி | - | அதற்கு என்ன |
| ஸேது | - | செய்வேன்? |
| தொட்லன் | - | தொட்டில்களில் |
| அர்பகுல | - | குழந்தைகளை |
| நூதுவு | - | ஆட்டுவாய் |
| மரிமரி | - | மேன்மேலும் |
| தோசி நட்லு | - | தோன்றுவது போல் |
| கில்லுதுவு | - | கிள்ளிவிடுவாய் |

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ராம | - | மங்களகரமன இராமனே! |
| நீவு | - | நீ |
| ஜீவுல | - | உலகத்துள்ள உயிர்களுக்கு |
| சிக்ஷின்சக | - | தண்டனைவிதிக்க |
| நேர்குவு | - | (நீ) அறிவாய் |
| சிரஞ்ஜிவுலுகா | - | சிரஞ்சீவிகளாக |
| சேய | - | செய்ய |
| நேர்துவுரா | - | அறிவாய் ஐயனே! |
| பாவமு எரிகி | - | மானிடர் உள்ளமறிந்து |
| ப்ரோதுவு | - | காத்தருள்வாய் |
| ஸத்பக்த | - | மெய்யான பக்தரின் |
| பாகதேய | - | நற்பேறு |
| ஸ்ரீ த்யாகராஜவிநுத | - | மங்களகரமான தியாகராசனால் போற்றி வழிபடப்படுபவனே! |

## பொழிப்புரை

ஓ இராமா! நீ அவ்விதமும் பேசுவாய். இவ்விதமும் பேசுவாய். அதற்கு நான் என்ன செய்வேன்? மங்களம் நல்கும் இராமனே! நீ தொட்டிலில் குழந்தைகளைப் போட்டு ஆட்டிடுவாய். பின்பு மேன்மேலும் உனக்குத் தோன்றும் பொழுதெல்லாம் கிள்ளுவாய். நீ இவ்வுலக உயிர்களைத் தண்டிக்கவும் அறிவாய். அவ்வுயிர்களை என்றும் நிலைபெறும்படி சிரஞ்சீவிகளாக்கவும் நீ அறிவாய் ஐயனே! மனிதர்களின் உள்மனதை அறிந்த அவர்களைக் காத்தருள்வாய். மெய்யான பக்தர்களுக்கு கிடைத்தற்கரிய நற்பேறு அல்லவா நீ! மங்களகரமான தியாகராசனால் போற்றித் துதிக்கப்படுபவனே! இராமா! நீ அவ்விதமும் பேசுவாய்; இவ்விதமும் பேசுவாய்.

***

## 3. யது$^3$குல காம்போ$^4$ஜி - ஆதி$^3$

**பல்லவி**

*அதி$^3$காது$^3$ ப$^4$ஜன; மனஸா!* "அ"

**அனுபல்லவி**

*எத$^3$லோ நெஞ்சுன தோ$^3$கடி*
*பய்யெத$^3$ க$^3$ல்கி$^3$னசோ நோகடி* "அ"

**சரணம்**

*கொ$^3$ப்ப தனமுனகை யாஸ*
*குச்சி$^2$த விஷய பிபாஸ*
*மெப்புலகை பஹு வேஸமிடி$^3$*
*உப்பதில்லெத$^3$ரு; த்யாக$^3$ராஜ வினுத!* "அ"

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மனஸா | - | ஓ மனமே! |
| பஜன | - | பஜனை |
| அதிகாது | - | அதுவல்ல |
| எதலோன் | - | உள்ளத்தில் |
| எஞ்சுனதி | - | எண்ணுவது |
| ஒகடி | - | ஒன்று |
| பய்யெதலோ | - | புறத்தில் |
| கல்கின சோன் | - | செய்யப்படும் செயல்கள் |
| ஒகடி | - | (மற்ற)ஒன்று |
| கொப்பதனமுனகை | - | பெருந்தன்மைக்கு |
| ஆஸ | - | ஆசை |
| குச்சித விஷய | - | தீயசெயல்களில் |
| பிபாஸ | - | ஆர்வங்கொண்டு |
| மெப்புலகை | - | புகழுக்காக |

| | |
|---|---|
| பஹு வேஸமிடி | - பல வேடங்கள் கொண்டு |
| உப்பதில்லெதரு | - உலகையடைவார்கள் |
| த்யாகராஜவித | - தியாகராஜனால் வணங்கப்படுபவனே! |

### பொழிப்புரை

ஓ மனமே! பஜனை என்பது அதுவல்ல. உள்ளத்தே எண்ணுவது ஒன்றாகவும் புறத்தே செய்யப்படும் செயல்கள் வேறொன்றாகவும் இருந்து விரும்பத்தகாத கெட்ட செயல்களில் ஆர்வங்கொண்டும் புகழடைவதற்குப் பல வேடங்கள் ஏற்றும் உலகை அடைவார்கள். அதுவல்ல (உண்மை) வழிபாடு.

***

## 4. ஜிங்ளா - ஆதி$^{3}$

**பல்லவி**

*அநாது$^{2}$ட$^{3}$னு க$^{3}$ானு; ராம நே!* "ந"..

**அனுபல்லவி**

*அநாது$^{2}$ட$^{3}$வு நீவனி நிக$^{3}$மக்ஞுல*
*ஸநாதனுலமாட வின்னானு; நே* "ந"..

**சரணம்**

*நிராத$^{3}$ரவு ஜூசி, ஈகவி*
*நராத$^{4}$மு லநெத$^{3}$ரு*
*புராணபுருஷ! புராரிபுநுத! நா*
*க$^{3}$ராட்சயன! த்யாகராஜநுத! நே* "ந"..

| | |
|---|---|
| ராம | - ஓ இராமா! |
| நேனு | - நான் |
| அநாதுடனு காநு | - அனாதையல்ல |
| அநாதுடவு | - அனாதை |
| நீவு அனி | - நீயென்று |
| நிகமஜ்ஞுல | - வேத இரகசியங்களை அறிந்தவர்கள் |
| ஸநாதனுல | - ஞானிகள் |
| மாட | - சொல்வது |
| வின்னானு | - கேட்டிருக்கிறேன் |
| நிராதரவு | - ஆதரவில்லாத்தன்மை |
| ஜூசி | - பார்த்து |
| ஈகலி | - இக்கலிகால(த்தில்) |
| நர+அதமுலு+அநெதரு | - கீழ்மக்கள் கூறுகிறார்கள் |
| புராண புருஷ | - புராணத் தலைவனே! |
| புராரிநுத | - திரிபுரமெரித்த சிவனால் வணங்கப்படுபவனே! |
| நாகராட்சயன | - ஆதிசேடனாகிய பாம்பணையில் பள்ளி கொண்டவனே |
| த்யாகராஜநுத | - தியாகராசனால் போற்றி வழிபடப்படுபவனே! |

## பொழிப்புரை

ஓ இராமா! நான் அனாதை அல்லன். அநாதன் நீயே என்று வேதங்களைக் கற்றுணர்ந்த நற்பெரும் மக்கள் நவிலக் கேட்டிருக்கிறேன். என்னுடைய ஆதரவற்ற நிலைமையைப் பார்த்து இக்கலியுக இழிந்த மானிடர்கள் என்னை கதியற்றவன் எனச் சொல்கிறார்கள். புராணத் தலைவா! திரிபுரம் எரித்த சிவனால் தொழப்பட்டவனே! ஆதிசேடன்மீது பள்ளி கொண்டவனே! இத்தியாகராசனால் துதிக்கப்படுபவனே! இராமா! நான் கதியற்றவன் அல்லன். எனக்கு நீயே கதி

***

## 5. பந்துவராளி - ரூபகம்

**பல்லவி**

*அப்பராம ப$^{4}$க்தி யெந்தோ கெ$^{4}$ாப்பரா; மா* "ய"

**அநுபல்லவி**

*த்ரிப்படலனு தீ$^{3}$ர்சி கண்டிரெப்பவலேனு காசுனா மா* "ய"

**சரணம்**

*லக்ஷ்மீதே$^{3}$வி வலசுனா? லக்ஷ்மணுண்டு$^{4}$ கொலுசுனா?*
*ஸூக்ஷமபு$^{3}$த்தி$^{4}$க$^{3}$ல ப$^{4}$ரதுடு$^{3}$ சூசிசூசி ஸொலஸுனா? மா* "ய".

*சப$^{3}$ரி யெங்கி$^{3}$லிச்சுனா? சந்த்$^{3}$ரத$^{4}$ருடு$^{3}$ மெச்சுனா?*
*அப$^{3}$ல ஸ்வயம்ப்ரப$^{4}$கு தை$^{3}$வமசல பத$^{3}$வி நிச்சுனா? மா* "ய".

*கபிவாரிதி$^{4}$ தா$^{3}$டுனா? கலிகி ரோட கட்டுனா?*
*அபராதி$^{4}$ த்யாக$^{3}$ராஜு காளந்த$^{3}$மு சாலுனா? மா* "ய".

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மா அப்ப | - | எம் அப்பனே! |
| ராம பக்தி | - | இராமபக்தி |
| எந்தோ | - | எவ்வளவோ |
| கொப்பரா | - | சிறந்தது ஐயா! |
| த்ரிப்படலனு | - | அலைச்சல்களை |
| தீர்சி | - | தீர்த்து |
| கண்டிரெப்ப வலெனு | - | கண்ணிமைபோல |
| காசு | - | காக்கும் |
| மா | - | எமது |
| லக்ஷ்மீதேவி | - | இலக்குமிதேவி |
| வலசுனா | - | நேசிப்பாளா? |
| லக்ஷ்மணுன்டு | - | இலக்குவன் |

| | | |
|---|---|---|
| கொலுசுனா | - | சேவை செய்வானா? |
| ஸூக்ஷ்ம புத்திகல | - | கூர்மையான அறிவுள்ள |
| பரதுடு | - | பரதன் |
| சூசி சூசி | - | பார்த்துப் பார்த்து |
| ஸொலஸுனா | - | மயங்குவானா? |
| மா | - | எம் |
| சபரி | - | சபரி |
| எங்கிலி+இச்சுனா | - | எச்சில்படுத்தியதைக் கொடுப்பாளா? |
| சந்த்ர தருடு | - | பிறையணிந்த சிவன் |
| மெச்சுனா | - | மெச்சிக்கொள்வானா? |
| அபல | - | பெண்மணியான |
| ஸ்வயம்ப்ரபகு | - | சுயம்பிரபைக்கு |
| தைவமு | - | கடவுள் |
| அசல பதவி | - | வீடுபேறாகிய பதவி |
| இச்சுனா | - | கொடுப்பானா? |
| மா | - | எம் |
| கபி | - | அனுமன் |
| வாரிதி | - | பெருங்கடல் |
| தாடுனா | - | தாண்டுவானா? |
| கலிகி | - | யசோதையானவள் |
| ரோடன் | - | உரலுடன் |
| கட்டுனா | - | கட்டுவாளா? |
| அபராதி | - | குற்றங்கள் புரிந்தவனான |
| த்யாகராஜுகு | - | தியாகராஜனுக்கு |
| ஆனந்தமு | - | பேரின்பம் |
| சாலுனா | - | போதுமானதா? |
| மா | - | எம் |

## *பொழிப்புரை*

எம் அப்பனே! இராமபக்தி எவ்வளவோ சிறந்தது ஐயனே. இராம பக்தியே, வீண்(மன) அலைச்சல்களைத் தீர்த்து கண்ணிமைகளைப் போல் காக்க வல்லது. எம் அப்பனே! அதனால் அன்றோ இலக்குமிதேவி பகவானையே நேசிக்கிறாள். இல்லையெனில் நேசிப்பாளா? இலக்குவன்தான் தொண்டு புரிந்திடுவானா? கூர்மையான புத்தியுள்ள பரதன்

(உன்னைப்) பார்த்துப் பார்த்து மயங்குவானா? சபரி, தான் உண்ட எச்சிலை உன்னிடம் கொடுப்பாளா? பிறையணிந்த சிவன்(உன்னைப்) புகழ்வானா? பெண்மணியான சுயம்பிரபைக்கு பகவான் வீடு பேறாகிய நிலைத்த பதவியைக் கொடுப்பானா? அனுமன் பெருங்கடலைத் தாண்டியிருப்பானா? அசோதை உரலுடன் கண்ணனைக் கட்டுவாளா? குற்றங்கள் பல புரிந்தவனான இத் தியாகராசனுக்குப் பேரின்பம் போதுமா? எம் அப்பனே! இராமபக்தி எவ்வளவோ சிறப்பானதன்றோ!

* * *

## 6. மத்[4]யமாவதி - ரூபகம்

**பல்லவி**

*அலக லல்லாட[3]க[3] க[3]நி-யா*
*ராண்முனி எடு பொங்கெ[3]னோ?* "*அல*"..

**அனுபல்லவி**

*செலுவு மீரக[3]னு மாரீசுனி மத[3]மணசே வேள* "*அல*"..

**சரணம்**

*முனி கனுஸைக[3] தெ[3]லிஸி சிவத[4]னுவுனு விரிசே ஸமய*
*முன த்யாக[3]ராஜ வினுதுனி மோமுன ரஞ்ஜில்லு* "*அல*"..

**பதவுரை**

அலகலு - சுருண்ட குழல்
அல்லலாடக - அசைந்தாட

| | | |
|---|---|---|
| கநி | - | கண்டு |
| ஆ | - | அந்த |
| ராஜ்முனி | - | இராஜ ரிஷியான விசுவாமித்திரர் |
| எடு | - | எவ்வாறு |
| பொங்கெனோ | - | மகிழ்ந்தாரோ |
| செலுவு மீரகனு | - | எல்லையில்லா பொலிவு தோன்ற |
| மாரிசுனி | - | மாரீசனின் |
| மதமு அணசே | - | கொழுப்பை அடக்கும் |
| வேள | - | வேளையிலும் |
| முனி கனுஸைக | - | முனிவரின் கண்ஜாடை |
| தெலிஸி | - | அறிந்து |
| சிவதனுவுனு | - | சிவபெருமானின் வில்லை |
| விரிசே | - | முறிக்கும் |
| ஸமயமுன | - | பொழுது |
| த்யாகராஜ வினுதுனி | - | தியாகராசனால் போற்றப்படுபவனின் |
| மோமுன | - | முகத்தில் |
| ரஞ்ஜில்லு | - | விளங்கும் |

**பொழிப்புரை**

சுருண்ட குழல் நெற்றியில் தவழும் அழகைக் கண்டு அந்த இராஜரிஷியான விசுவாமித்திரர் எங்ஙனம் மகிழ்ந்தாரோ! எல்லையில்லாத் தோற்றப் பொலிவுடன் மாரீசனுடைய கொழுப்பை அடக்கும் வேளையிலும்; அம்முனிவரின் கண்களின் குறிப்பை அறிந்து கொண்டு சிவபெருமானின் வில்லை முறிக்கும் பொழுதிலும் தியாகராசனால் போற்றி வணங்கப்படுபவனின் (இராமனின்) திருமுகத்தில் விளங்கும் சுருண்ட தலைமுடி அசைந்தாடக் கண்ட இராஜ ரிஷியானவர் எப்படி மகிழ்ச்சி அடைந்தாரோ!.

* * *

# 7. காபி - ஆதி$^{3}$

**பல்லவி**

*அன்யாயமு ஸேயகுரா ராம! ந*
*னன்யுனிகா$^{3}$ கூட$^{3}$குரா; நாயெட$^{3}$னு ராம; "அ" ..*

**அனுபல்லவி**

*என்னோ தப்புலு கலவாரினி, ரா*
*ஜன்ய ! நீவு ப்$^{3}$ரோசினாவு க$^{3}$னுகனு "அ" ..*

**சரணம்**

*ஜட$^{3}$ப$^{4}$ரதுடு$^{3}$ ஜிங்க சிசுவு நெத்தி-ப$^{3}$ட$^{3}$லிக தீர்சக$^{3}$*
*லேத$^{3}$ா கட$^{3}$லினி முனிகி$^{3}$ன நொக-கூர்மமு காபாட$^{3}$க$^{3}$ லேத$^{3}$ா "அ" .*

*புட$^{3}$மினி பாண்ட$^{3}$வ த்$^{3}$ரோஹினி த$^{4}$ர்மபுத்ருடு$^{3}$ ப்$^{3}$ரோவக லேதா$^{3}$*
*நடி$^{3}$மி ப்ராயமுன த்யாக$^{3}$ராஜனுத! நா பூர்வஜுல ப$^{3}$ாத$^{4}$ தீ$^{3}$ர்பலேத$^{3}$ா "அ"*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ராமா | - | ஓ இராமனே! |
| அந்யாயமு | - | அநியாயம் |
| ஸேயகுரா | - | செய்யாதே ஐயனே! |
| அன்யுனிகா | - | வேற்றுமனிதனாக |
| நாயெட | - | என்னை |
| கூடகுரா | - | கருதாதே! பார்க்காதே ஐயா! |
| ராஜன்ய | - | பேரரசனே! |
| என்னோ | - | எத்தனையோ |
| தப்புலு | - | தவறுகள் |
| கலவாரினி | - | உள்ளவர்களை |
| நீவு | - | நீ |
| ப்ரோசினாவு | - | காத்தருளினாய் |

| | |
|---|---|
| கனுகனு | ஆகையால் |
| ஜடபரதுடு | ஜடபரதமுனிவர் |
| ஜிங்கசிசுவுனு | மான்குட்டியை |
| எத்தி | எடுத்து |
| படலிக | களைப்பை |
| தீர்சக | தீர்க்கவில்லையா? |
| கடலினி | கடலில் |
| முனிகினன் | மூழ்கியதை |
| ஒக | ஒரு |
| கூர்மமு | ஆமை |
| காபாடக லேதா | காப்பாற்றவில்லையா? |
| புடமினி | பூமியில் |
| பாண்டவத்ரோஹினி | பாண்டவர்களின் துரோகியானவனை |
| தர்மபுத்ருடு | தர்மபுத்திரன்/தருமன் |
| ப்ரோவக லேதா | காத்தருளவில்லையா? |
| நடிமி ப்ராயமுன | நடுவயதில் |
| நா | என் |
| பூர்வஜு | அண்ணனின் |
| பாத | துன்பத்தை |
| தீர்பலேவா | தீர்ப்பதற்கு முடியாதா? |
| த்யாகராஜநுத | தியாகராஜனால் வணங்கப்படுபவனே! |

## பொழிப்புரை

ஓ இராமா! அநியாயம் செய்யாதே ஐயா! என்னை வேற்று மனிதனாக எண்ணிப் பார்க்காதே. பேரரசனே! எத்தனையோ தவறுகளுள்ளவர்களையும் நீ காத்தருளினாய் அல்லவா! ஆகையால் நீ என்னிடத்தில் அநியாயம் செய்யாதே. ஜடபரத முனிவர் இள மான்குட்டியை எடுத்து அதன் களைப்பை நீக்கிடவில்லையா? பாற்கடலில் மூழ்கி (மந்தர மலையை) ஆமை உருவெடுத்து காக்கவில்லையா? பூமியில் பாண்டவர்களின் துரோகியான துரியோதனனை தருமர் காத்தருளி மன்னிக்கவில்லையா? நடுவயதில் என் அண்ணனின்

துன்பங்களைத் தீர்க்க இயலாதா? அநியாயம் செய்யாதே! இத் தியாகராசனால் வணங்கப்படுபவனே! இராமா என்னை வேற்று மனிதனாக எண்ணிடாதே.

* * *

## 8. நாராயணகௌ3ள-சாபு

**பல்லவி**

*இந்நாள்ளு த3யராகுன்ன வைனமேமி? சாலு*
*இபுடை3ன தெலு3பவய்யா!* "இ"..

**அனுபல்லவி**

*சின்னனாட நுண்டி3 நின்னேகா3னி நே*
*னன்யு நம்மிதினா? ஓ ராம!* "இ"..

**சரணம்**

*அலநாடு3 தரணி ஸுதார்தி2னி தீ3ர்பனு*
*வெலஸி நில்வக3 லேத3ா அதி3யுகா3க*
*ப3லமு ஜூபலேத3ா? வானி நேர*
*முலனு தாளுகொனி செலமிஜேஸி பத3*
*முல பக்தினிய்யக3 லேத3ா நாயந்து3 நீ* "இ"

*த3ன க3ஜாஸ்வமுலு தனகு த3யஜேயு*
*மனி னே நின்னடி3கி3னானா? இங்க நே*
*கனக மிம்மனினானா! ஸ்ரீராம! நா*
*மனஸுன நினு குலத3னமுக3 ஸம்ர*
*க்ஷணமு சேஸிதிகா3னி மரசிதினா?* "இ"

தல்லி தண்ட்$^3$ரு லன்னத$^3$ம்முலு நீவனி
யுல்லமு ரஞ்ஜில்ல பெத்த$^3$லதோனு
கல்லலாட$^3$க$^3$ மொல்ல ஸூமமுல நீ
சல்லனி பத$^3$மு கெ$^3$ால்லலாட$^3$க வெத
ஜல்விதிகா$^3$னி; த்யாக$^3$ராஜுனிபை நீ "இ"

## பதவுரை

| | | |
|---|---|---|
| ஓ ராம! | - | ஓ இராமா! |
| இந்நாள்ளு | - | இத்தனை நாட்கள் |
| தயராகுன்ன | - | தயை வராமலிருந்த |
| வைனமு ஏமி? | - | காரணம் என்ன |
| இபுடைன | - | இப்பொழுதாகினும் |
| தெலுபவய்ய | - | தெரிவிப்பாய் ஐயா |
| சின்ன நாடனுண்டி | - | சிறுவயதிலிருந்து |
| நின்னே கானி | - | உன்னையன்றி |
| நேனு | - | நான் |
| அன்யுல | - | மற்றவர்களை |
| நம்மிதினா | - | நம்பினேனா? |
| அலனாடு | - | அந்நாள் |
| தரணிஸூத | - | சூரிய மைந்தனான சுக்கிரீவனின் |
| ஆர்தினி | - | துன்பத்தை |
| தீர்பனு | - | தீர்ப்பதற்காக |
| வெலஸி | - | விளங்கி (கருணையுடன்) |
| நில்வகலேதா? | - | நிற்கவில்லையா? |
| அதியுகாக | - | அதுவும் இல்லாமல் |
| பலமு | - | வலிமையை |
| சூபலேதா | - | காட்டவில்லையா? |
| வானி | - | அவனது |
| நேரமுலனு | - | குற்றங்களை |
| தாளுகொனி | - | பொறுத்துக் கொண்டு |
| செலிமி ஜேஸி | - | நட்பு செய்து |
| பதமு பக்தி | - | திருவடிகளின் பக்தியை |

ஈயகலேதா - கொடுக்கவில்லையா?
ாயெந்து - என்னிடம்
கு - உனக்கு
தன கஜ அஸ்வமுலு - செல்வங்கள், யானைகள் குதிரைகள்
தனகு - எனக்கு/தனக்கு
தயஸேயுமு+அனி - தயவு செய்! என்று
நேனு - நான்
நின்னு - உன்னை
அடிகினானா - கேட்டேனா?
இங்க - இன்னும்
நே - நான்
கனகமு - தங்கம்
இம்மு - கொடு
அனினானா - என்றேனா?
ஸ்ரீராமா - சீர்மிகு இராமா!
நா மனஸுன - என் உள்ளத்தில்
நின்னு - உன்னை
குலதனமுக - (என்)குலச் செல்வமாக
ஸம்ரக்ஷணமு - பாதுகாத்தல்
சேஸிதிகானி - செய்தேனே தவிர
மரசினானா - மறந்தேனா
தல்லி தண்ட்ருலு - தாய் தந்தையர்
அன்ன தம்முலு - அண்ணன் தம்பியர்
நீவு அனி - நீயென்று
உல்லமு - உள்ளம்
ரஞ்ஜில்ல - மகிழ்ச்சிப் பெருங்கடல்
பெத்தலதோனு - பெரியோர்களுடன்
கல்லலு+ஆடக - பொய்ப்பேச்சுகள் பேசாமல்
மொல்ல ஸுமமுல - முல்லைப் பூக்களால்
நீ - உன்
சல்லனி பதமு - குளிர்ந்த திருவடிகளில்
கொல்லலாடக - எப்பொழுதும் பூசனை செய்து

| | | |
|---|---|---|
| வெதஜல்விதிகானி | - | நன்றாக அருச்சித்தேனேயன்றி |
| த்யாகராஜுனிபை | - | இத் தியாகராசனிடம் |
| நீகு | - | உனக்கு |

## பொழிப்புரை

ஓ இராமா! இத்தனை நாட்கள் உன் தயை வராமலிருந்ததன் காரணம் என்ன? இப்பொழுதாகினும் தெரிவிப்பாய் ஐயா! சிறுவயதிலிருந்து உன்னையன்றி நான் எவரையேனும் நம்பினேனா? இல்லையே! அப்படியிருக்க உனக்கு ஏன் என்னிடத்தில் தயை உண்டாகாமல் இருக்கிறது? அன்றொரு நாள் சூரிய மைந்தனான சுக்கிரீவனின் துன்பத்தைத் தீர்ப்பதற்காக நீ (கருணையுடன்) விளங்கி நிற்கவில்லையா? அதுவுமின்றி உரிமையைக் காட்டவில்லையோ? (மேலும்) அவனுடைய குற்றங்களைப் பொறுத்துக் கொண்டு நட்புறவு செய்து உன் திருவடி பக்தியை அவனுக்கு அளித்திட வில்லையா? அவ்வாறிருக்க என்னிடம் மட்டும் உன் தயை வராமலிருப்பதன் காரணம் என்ன? செல்வங்களையும், யானைகளையும், குதிரைகளையும் எனக்குக் கொடுக்க வேண்டுமென உன்னை நான் கேட்டேனா? அன்றியும் பொன்கொடு என்று கேட்டேனா? *சீர்மிகு* இராமா! என் உள்ளத்தில் உன்னை எனது குலச் செல்வமாகப் பாதுகாத்து வந்தேனே ஒழிய உன்னை மறந்தேனா? தாய் தந்தையரும் அண்ணன் தம்பியரும் நீயே என்று உள்ளம் மகிழ்வுடன் இருந்து பெரியோர்களிடத்துக்குப் பொய்ப் பேச்சுகளைப் பேசாமலும் முல்லைப் பூக்களால் உனது (கருணை நிரம்பிய) குளிர்ச்சி பொருந்திய திருவடிகளில் மிக்க இன்பமுடன் நினைந்துருகி மலர்களைச் சொரிந்து பூசித்தேனே அல்லாமல் வேறில்லை. அப்படியிருக்க இத்தியாகராசனிடம் உன் தயை வராமலிருப்பதன் காரணம் என்ன?

***

# 9. பை$^{4}$ரவி - ரூபகம்

**பல்லவி**

*உபசாரமு சேஸேவாருன்னாரனி மரவகுர "உ"..*

**அநுபல்லவி**

*க்ருபகாவலெனனி நே நீகீர்தினி பல்குசு நுண்ட$^{3}$க$^{3}$ "உ"*

**சரணம்**

*வாகிடனே பதி$^{3}$லம்பு$^{3}$க$^{3}$ வாதாத்மஜூடு$^{3}$ன்னாட$^{3}$னி*
*ஸ்ரீகருலகு$^{3}$ நீ தம்முலு சேரியுன்னாரனி*
*ஏகாந்தமுனனு ஜானகி ஏர்படி$^{3}$யுன்னத$^{3}$னி*
*ஸ்ரீகாந்த! பருலேலனி, ஸ்ரீ த்யாக$^{3}$ராஜவினுத "உ".*

**பதவுரை**

| | |
|---|---|
| உபசாரமு | - விருந்தோம்பல் |
| சேஸேவாரு | - செய்பவர்கள் |
| உன்னாரு+அனி | - உள்ளனர் என்று |
| மரசிதிவோ | - (என்னை) மறந்தனையோ? |
| க்ருப காவலெனு+அனி | - அருள் வேண்டுமென்று |
| நே | - நான் |
| நீ கீர்தினி | - உன் புகழை |
| பல்குசுனுண்டக | - பாடிக்கொண்டிருக்கும் பொழுது |
| வாகிடனே | - வாசற்படியிலேயே |
| பதிலம்புக | - (மன) உறுதியுடன் |
| வாதாத்மஜூடு | - அனுமன் |
| உன்னாடு+அனி | - இருக்கிறான் என்று |
| ஸ்ரீகருலகு | - மங்களகரமான |
| நீதம்முலு | - உன் தம்பிகள் |

| | | |
|---|---|---|
| சேரி உன்னாரு+அனி | - | சேர்ந்துள்ளனர் என்று |
| ஏகாந்தமுனனு | - | (நீ) தனித்திருக்கையில் |
| ஜானகி | - | ஜானகி (*சீதை*) |
| ஏர்படி உன்னதி+அனி | - | அமர்ந்துள்ளாள் என்று |
| ஸ்ரீகாந்த | - | இலக்குமியின் தலைவனே! |
| ஸ்ரீ த்யாகராசவினுத | - | மங்களகரமான தியாகராசனால் போற்றப்படுபவனே! |
| பருலு ஏல+அனி | - | ஏனையோர் எதற்கு என்று |

## *பொழிப்புரை*

திருமகளின் தலைவனே! உனக்கு விருந்தோம்பல் புரிகின்றவர்கள் உள்ளனர் என்று என்னை மறந்து விட்டாயோ? உன் அருளே (கிருபை) வேண்டுமென விரும்பிக் காத்திருக்கும் நான் உனது புகழையே பாடிக் கொண்டிருக்க, நீ உன்னை உபசரிப்பவர்கள் உள்ளனர் என்று என்னை மறந்தனையோ? உன் வாசலில் அனுமன் மனவுறுதியுடன் இருக்கிறான் என்பதாலும், திருவுடைய உன் தம்பிமார் உன்னைச் சேர்ந்திருக்கின்றனர் என்பதாலும், உனது தனிமை வேளைகளில் *சீ*தாபிராட்டி உன்னருகில் அமர்ந்திருக்கிறாள் என்பதாலும் மற்றவர்கள் எதற்கென என்னை நீ மறந்தனையோ? மங்களகரமான தியாகராசனால் துதிக்கப் படுபவனே! உன் அருள் வேண்டி உனது புகழையே பாடிக்கொண்டிருக்கும் என்னை மறக்கலாமோ?



# 10. வராளி-சாபு

**பல்லவி**

*ஏடி ஜன்மமிதி[3] ஹா! ஓ ராம* "ஏடி"..

**அனுபல்லவி**

*ஏடி ஜன்மமிதி[3] எந்து[3]கு கலிகெ[3]னோ*
*எந்தனி ஸைரிந்து ஹா! ஓ ராம* "ஏடி"..

**சரணம்**

*ஸாடிலேனி மாரகோடி லாவண்யுனி*
*மாடிமாடிகி ஜூசி மாடலாட[3]னி தன* "கே"..

*ஸாரெகு முத்யால ஹாரமுரமு பாலு*
*காரு மோமு கன்னுலார ஜூட[3]நிதன* "கே"..

*இங்கி[3]த மெரிகி[3]ன ஸங்கீத லோலுனி*
*பொங்குசு தனிவார கௌக[3]லிஞ்சனிதன* "கே"..

*ஸாக[3]ரசயனுனி த்யாக[3]ராஜநுதுனி*
*வேக[3]மே ஜூட[3]கலேனு நேனு ஹ்ருத[3]யமுன* "ஏ"..

**பதவுரை**

| | |
|---|---|
| ஓ ராம | - ஓ இராமனே! |
| ஏடி | - என்ன |
| ஜன்மமிதி | - பிறப்பு(ஜன்மம்)இது |
| ஹா | - அந்தோ |
| ஏடி ஜன்மமிதி | - என்ன பிறப்பிது |
| எந்துகு | - எதற்கு/ஏன் |
| கலிகெனோ | - ஏற்பட்டதோ |
| எந்த+அனி | - எவ்வளவென்று |
| ஸைரிந்து | - பொறுப்பேன் |
| ஹா | - அந்தோ |
| ஓ ராம | - ஓ இராமா! |

| | | |
|---|---|---|
| ஸாடிலேனி | - | நிகரில்லாத |
| மாரகோடி | - | கோடி மன்மதனின் |
| லாவண்யுனி | - | அழகுள்ளவனை |
| மாடி மாடிகி | - | மீண்டும் மீண்டும் |
| ஜூசி | - | கண்டு |
| மாடலாடனி | - | உரையாட இயலாத |
| தனகு | - | தனக்கு (எனக்கு) |
| ஸாரெகு | - | அசையும் |
| முத்தியால ஹாரமு | - | முத்து மாலைகள் |
| உரமு | - | திருமார்பில் (வைத்து) |
| பாலுகாரு | - | களங்கமில்லாத |
| மோமுனு | - | (திரு) முகத்தை |
| கன்னுலார ஜூடனி | - | கண்ணாரக் காண முடியாத |
| தனகு | - | எனக்கு |
| இங்கிதமு | - | இங்கிதம் |
| எரிகின | - | அறிந்த |
| ஸங்கீத | - | சங்கீத |
| லோலுனி | - | ஈடுபாடுள்ளவனை |
| பொங்குசு | - | பொங்கும் |
| தனிவார | - | ஆசையோடு |
| கௌகலிஞ்சனி | - | அணைத்துக்கொள்ள இயலாத |
| தனகு | - | எனக்குப் |
| ஸாகர சயனுனி | - | பாற்கடலில் பள்ளிகொண்டவனை |
| த்யாகராஜனுதுனி | - | தியாகராசனால் வணங்கப்படுபவனை |
| நேனு | - | நான் |
| ஹ்ருதயமுன | - | இதயத்தில் |
| வேகமே | - | விரைவாகக் |
| ஜூடக | - | காண்பதற்கு |
| லேனு | - | (என்னால்) இயலவில்லை |

## பொழிப்புரை

ஓ இராமனே! என்ன பிறப்பு இது. அந்தோ! ஏன் இப்பிறப்பெடுத்தேன்? எவ்வளவுதான் பொறுப்பேன்? கோடி

மன்மதன்களின் நிகரில்லா அழகு பொருந்திய இராமனை இடையிடையே கண்டு உரையாட இயலாத பிறப்பு, என்ன பிறப்பிது? அந்தோ! அசைந்திலங்கும் முத்து மாலைகளைக் கொண்ட திருமார்பையும், களங்கமில்லாத திருமுகத்தையும் கண்ணாரக் காணமுடியாத எனக்கு இப்பிறப்பு ஏன்? இங்கிதம் அறிந்து கொண்ட சங்கீத ஈடுபாடு உள்ளவனை (இராமனை) பொங்கும் என் விருப்பத்தால் கட்டித்தழுவிக் கொள்ள இயலாத எனக்கு அந்தோ! என்ன பிறப்பிது? பாற்கடலில் துயில்பவனை, தியாகராசனால் வணங்கப்படுபவனை தாமதமின்றி விரைவில் காண்பதற்கு இதயம் ஏங்குகின்றது. (இராமனைக் காணாத பிறவி வீணே!)

***

## 11. தோடி$^{3}$ - ஆதி$^{3}$

**பல்லவி**

*ஏமனி மாடாடி$^{3}$திவோ? ராம!*
*யெவரி மனஸுயேவித$^{4}$மோ தெலிஸி "ஏ"*

**அனுபல்லவி**

*மாமா, மறது$^{3}$லனுஜுலு, தலிதண்ட்$^{3}$ருலு*
*ப$^{4}$ாமலு பரிஜனுலு ஸ்வவசமௌட "ஏ"*

**சரணம்**

*ராஜுலு, முனுலு, ஸுராஸுருலு, வரதி$^{3}$*
*க்ராஜுலு மறிகூருலு சசித$^{4}$ர தி$^{3}$ன*
*ராஜுலு லோ$^{3}$ப$^{3}$டி$^{3}$ நட$^{3}$வனு த்யாக$^{3}$ராஜ*
*வினுத! நய பயமுக$^{3}$ முத்துக$^{3}$ "ஏ"*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ராம | - | ஓ இராமனே! |
| ஏமி+அனி | - | எவ்வாறு |
| மாடாடிதிவோ | - | பேசினாயோ? |
| எவரி மனஸு | - | யாருடைய உள்ளம் |
| ஏவிதமோ | - | எவ்விதமோ |
| தெலிஸி | - | அறிந்து கொண்டு |
| மாம | - | மாமனார் |
| மரதுலு | - | மைத்துனர்கள் |
| அனுஜுலு | - | தம்பிமார் |
| தலிதண்ட்ருலு | - | தாய் தந்தையர்கள் |
| பாமலு | - | பெண்கள் |
| பரிஜனுலு | - | பணியாளர்கள் |
| ஸ்வவசமு | - | தன்வசம் |
| நீகு | - | உனக்கு |
| ஔடகு | - | ஆவதற்கு |
| ராஜுலு | - | அரசர்கள் |
| முனுலு | - | முனிவர்கள் |
| ஸுராஸுருலு | - | தேவர்களும் அசுரர்களும் |
| வர | - | சிறப்பிக்க |
| த்க்ராஜுலு | - | திக்குபாலகர்கள் |
| மரிசூருலு | - | மேலும் சூரர்கள் |
| சசிதர | - | சிவன் |
| தின | - | சூரியன் |
| ராஜுலு | - | சந்திரர்கள் |
| லோபடி | - | (உனக்கு) அடங்கி |
| நடவனு | - | நடக்குமாறு |
| த்யாகராஜவினுத | - | தியாகராசனால் போற்றித் துதிக்கப்படுபவனே |
| நய | - | நயமாகவும் |
| பயமுக | - | பயத்திலும் |
| முத்துக | - | செல்லமாகவும் |

பொழிப்புரை

ஓ இராமனே! எவ்வாறு பேசினாயோ? எவர் உள்ளம் எத்தகையது என்பதை அறிந்து பேசினாயோ? மாமனார், மைத்துனர்கள், தம்பியர்கள், தாய் தந்தையர்கள், பெண்கள், பணியாளர்கள் இராமா! உன் வசம் ஆவதற்கு எப்படிப் பேசினாயோ? அரசர்கள், முனிவர்கள், தேவர்கள், அசுரர்கள், சிறப்புடைய திக்கு பாலகர்கள், மேலும் சூரர்கள், சிவன், சூரியன், சந்திரன் முதலியோர் உனக்கு அடங்கி நடக்குமாறு எவ்விதம் பேசினாயோ? தியாகராசனால் போற்றி வணங்கப் பெறும் தெய்வமே! நயமாகவும், பயமாகவும், இனிமையாகவும் என்னவென்று பேசினாயோ?

***

## 12. தோடி$^{3}$ - சாபு

பல்லவி

*ஏமி சேஸிதே னேமி? ஸ்ரீராம*
*ஸ்வாமி கருணலேனி வாரிலலோ* "நே"

அனுபல்லவி

*காம மோஹ தா$^{3}$ஸுலை ஸ்ரீராமுனி*
*கட்டு தெலிய லேநி வாரிலலோ* "நே"

சரணம்

*ஸவமு சேஸிதேநேமி? கலிமிகி புத்ரோ*
*த்ஸவமு கல்கி$^{3}$தே னேமி? பு$^{4}$விலோ*
*நந்யபீ$^{3}$ஜ ஜனிதுனி கொ$^{3}$னியேமி?*
*சிவகர ஸ்ரீராமுனி த$^{3}$யலேனி வாரிலலோ* "நே"

மேட$^3$கட்டினனேமி அந்துன லாந்தர்
ஜோடு$^3$க$^3$ட்டின னேமி?
சேடி$^3$யலனு மெப்பிஞ்ச தெலிஸிதே னேமி?
ஈடு$^3$லேனி ராமுனி த$^3$யலேனி வாரிலலோ "நே".

இம்முகலிகி$^3$ன னேமி? இல்லாலிகி
ஸொம்மு பெட்டினனேமி?
கம்மவில்து கேளினி தெலிஸி ஏமி
தம்மிகண்டிவானி கருணலேனி வாரிலலோ "நே"..

ராஜ்யமேலின னேமி? ப$^3$ஹுஜனுலலோ
பூஜ்யுலைன னேமி?
ஆஜ்ய பிரவாஹமுதோ நன்னமிடி$^3$ன னேமி?
பூஜ்யுடை$^3$ன ராமுனித$^3$யலேனி வாரிலலோ "நே"..

கு$^3$ருவுதானைனனேமி? கண்டிகி மேனு
கு$^3$ருவை தோசினனேமி?
வரமந்த்ர மந்யுல குபதே$^3$ஸிஞ்சின னேமி?
வரத்யாக$^3$ராஜ நுதுனி த$^3$யலேனி வாரிலலோ "நே"..

பதவுரை

| | | |
|---|---|---|
| ஸ்ரீராம | - | ஓ இராம! |
| ஏமி | - | என்ன |
| சேஸிதேனு | - | செய்தாலும் |
| ஏமி | - | என்ன? |
| ஸ்ரீராமஸ்வாமி | - | திரு இராமசுவாமியின் |
| கருணலேனிவாரு | - | கருணை கிடைக்கப் பெறாதவர்கள் |
| இலலோ | - | புவியில் |
| காமமோஹதாஸுலை | - | காம, மோக தாசர்கள் ஆகி |
| ஸ்ரீராமுனி | - | ஸ்ரீ இராமனுடைய |
| கட்டு | - | மனநிலையை |
| தெலியலேனிவாரு | - | தெரிந்து கொள்ளாதவர்கள் |
| இலலோ | - | இப்புவியில் |
| ஸவமு | - | வேள்வி |

| | | |
|---|---|---|
| செஸிதேனு | - | செய்தாலும் |
| ஏமி | - | என்ன? |
| கலிமிகி | - | செல்வந்தர்களுக்கு |
| புத்ரோத்ஸவமு | - | புதல்வன் பிறந்த விழா |
| கலிகிதேனு | - | உண்டானாலும் |
| ஏமி | - | என்ன? |
| புவிலோனு | - | பூவுலகில் |
| அன்ய பீஜஜனிதுனி கோனி | - | தத்தெடுத்துக் கொண்டு |
| ஏமி | - | என்ன? |
| சிவகர | - | சிவனுக்குப்பிரியமான |
| ஸ்ரீராமுனி | - | ஸ்ரீ இராமனின் |
| தயலேனிவாரு | - | தயவுகிடைக்கப் பெறாதவர்கள் |
| இலலோ | - | இப்புவியில் |
| மேட | - | மாளிகை |
| கட்டினனு | - | கட்டினாலும் |
| ஏமி | - | என்ன? |
| அந்துன | - | (அதில்), அதனுள் |
| லாந்தர்ஜோடு | - | இரட்டை லாந்தர் விளக்குகள் |
| கட்டினனு | - | தொங்கவைத்தாலும் |
| ஏமி | - | என்ன? |
| சேடியலனு | - | மகளிரை |
| மெப்பிஞ்ச | - | வசப்படுத்துவதற்கு |
| தெலிஸினனு | - | தெரிந்திருந்தாலும் |
| ஏமி | - | என்ன? |
| ஈடுலேனி | - | ஈடில்லாத |
| ராமுனி | - | இராமனுடைய |
| தயலேனிவாரு | - | தயவுஇல்லாதவர்கள் |
| இம்மு | - | இன்பம் |
| கல்கிதேனு | - | இருப்பினும் |
| ஏமி | - | என்ன? |
| இல்லாலிகி | - | இல்லாளுக்கு |
| ஸொம்மு | - | ஆபரணங்கள் |
| பெட்டினனு | - | அணியச்செய்து |
| ஏமி | - | என்ன |

| | | |
|---|---|---|
| கம்மவில்து | - | மன்மதனின் |
| கேளினி | - | விளையாட்டை |
| தெலிஸி | - | அறிந்து |
| ஏமி | - | என்ன? |
| தம்மிகண்டிவானி | - | தாமரைக் கண்ணனின் |
| கருணலேனிவாரு | - | கருணையைப் பெறாதவர்கள் |
| இலலோ | - | புவியில் |
| ராஜ்யமு | - | நாட்டை |
| ஏலிதேனு | - | ஆட்சிபுரிந்து |
| ஏமி | - | என்ன? |
| பஹுஜனுலலோ | - | மக்கள் பலரில் |
| பூஜ்யுலு | - | போற்றப்பட்டவர்கள் |
| அயிதேனு | - | ஆனாலும் |
| ஏமி | - | என்ன? |
| ஆஜ்ய ப்ரவாஹமுதோனு | - | நெய்வழிந்தோடுமாறும் |
| அன்னமு | - | அன்னம் |
| இடிதேனு | - | இட்டாலும் |
| பூஜ்யுடு+அயின | - | போற்றப்பட்டவனான |
| ராமுனி | - | இராமனின் |
| தயலேனிவாரு | - | தயவில்லாதவர்கள் |
| இலலோ | - | இப்புவியில் |
| குருவு | - | ஆசான் |
| தானு+அயி | - | தானாகி |
| ஏமி | - | என்ன |
| கண்டிகி | - | கண்ணுக்கு |
| மேனு | - | உடம்பு (மேனி) |
| குருவு+அயி | - | குருவாகி |
| தோசிதேனு | - | தோன்றினாலும் |
| ஏமி | - | என்ன? |
| வர | - | சிறப்புடைய |
| மந்த்ரமு | - | மந்திரத்தை |
| அந்யுலகு | - | பிறருக்கு |
| உபதேசிஞ்சிதேனு | - | உபதேசித்தாலும் |
| ஏமி | - | என்ன |

வர த்யாகராஜநுதுனி - தியாகராசனால் போற்றப்பட்டவனின்

தயலேனிவாரு - தயவு இல்லாதவர்கள்

இலலோ - பூமியில்

*பொழிப்புரை*

ஓ இராமா! என்ன செய்தாலென்ன? மங்களகரமான இராமசுவாமியின் கருணை கிடைக்கப் பெறாதார் இப்புவியில் என்ன செய்தாலும் என்ன பயன்? காமம், மோகம் முதலியவற்றிற்கு அடிமையாகி இருப்பவர்கள், ஸ்ரீ இராமனின் மனப்போக்கை அறிந்துகொள்ளாதவர்கள் பூமியில் வேள்விகள் புரிந்தென்ன? செல்வந்தர்களுக்கு மக்கட் பேறுண்டானால் என்ன? தத்தெடுத்துக் கொண்டென்ன பயன்? சிவனுக்குப் பிரியமான ஸ்ரீஇராமனின் தயவு கிடைக்கப் பெறாதவர்கள் பூவுலகில் என்ன செய்து என்ன பயன்? மாளிகையில் இரட்டை லாந்தர் விளக்குகளைத் தொங்க விட்டாலென்ன? மகளிரை வசப்படுத்துவதற்குத் தெரிந்திருந் தென்ன? ஈடிணையில்லாத இராமனுடைய தயவில்லாதவர்கள் என்ன செய்தென்ன? இன்பம் இருப்பினும் என்ன? இல்லாளுக்கு ஆபரணங்களை அணியச் செய்தென்ன? மன்மதனின் விளையாட்டை அறிந்தென்ன? தாமரைக் கண்ணனுடைய கருணையைப் பெற்றுக் கொள்ளாதவர்கள் பூமியில் என்ன செய்தென்ன? நாட்டை ஆட்சிபுரிந்தென்ன? மக்கள் பலரால் போற்றப்பட்டவர்களானாலும் என்ன? ஆடம்பரமாய் நெய் வழிந்தோட அன்னமிட்டால் என்ன? போற்றுதலுக்குரிய இராமனின் தயவில்லாதவர்கள் இப்புவியில் என்ன செய்தும் பயனில்லை. தானே ஆசானாகியும் தன் கண்ணுக்குத் தன்னுடம்பே குருவாகித் தோன்றினாலும் பயன் என்ன? சிறப்பான மந்திரங்களைப் பிறருக்கு உபதேசித்தாலும், இத்தியாகராசனின் போற்றுதலுக்கு உரியவனின் தயவில்லாதார் இப்புவியில் என்ன செய்து என்ன பயன்?

***

## 13. கல்யாணி - ரூபகம்

**பல்லவி**

*ஏவர மடு3கு3து3ரா ஸ்ரீராம நின் "நே*

**அனுபல்லவி**

*பாவனமௌ நீ பாத3 ப4ஜன ஸேயுடகை*
*தே ாவலே வரமைனதி3; தேவரா! இந்து3னனே "ஏ".*

**சரணம்**

*ஸ்ரீரகு4வர! ஸகலாத4ாரக! நீ மனஸுன*
*கோரின பனுலனு பத3ஸாரஸமுல நாமன*
*ஸாரக3 விட3வனுனே, ஸாரதர! வைராக்3யமு*
*ஸாரெகு ஸதத்க3தி குமாருனி பாலைனதி3 "ஏ"*

*நீலக4நாப4! ஸதா3காலமு நீ பக்த*
*ஜாலமுலனுக3னி பரிபாலன சேயுக, நீ*
*போலிகக3ாஜஒசே மேலுவக3ல ஸௌக்2யமு*
*பா3லுட3கு3 ரிபுக்4னுனி பாலையுண்ட3க3 நின் "ன்நே"*

*நீமஹிமல வினகா3 நாமமுனு த3லசக3ா*
*பூ4மினி பத3ரேக2ல நேமரகனு கனகா3*
*தாமரஸநயன! குணதா4ம! மநஸுகரகே3*
*ப்ரேமரஸமு ப4ரத ஸ்வாமி பாலையுண்ட3க3 "ன்நே"*

*வாரமு நீது மநஸுத3ாரினனுஸரிஞ்சக*
*நேரமு லேகனு யாஹார ஸுஷுப்துலனு நி*
*வாரணசேயு பரிசாரக ப4ாக்யமுனு லங்*
*காரியகு ஸுமித்ர குமாருனி பாலையுண்ட3க3 "ன்நே".*

*ஸ்ரீ ஹரி! ப4ரிதசர ஸமூஹ! ஸதா3 நினு ஹருத்*
*கே3ஹமுனனு க3னி து3ர்தா3ஹமுலனு ரோஸி வி*

*வாஹனுட3 நீவனு மோஹம்பு3னனு மரசி*
*ஸோஹமனு ஸுக2மு வைதே3ஹி பாலையுண்ட3க3* ஏ'

*ஈஜகதிநிக3ல ஸுக2ராஜினி மரிநிர்ஜர*
*ராஜ பத3ம்பு3ல நே நீ ஐந்மமுனடுக3னு*
*ராஜவத3ன! த்யாக3ராஜுனி மதி3 கெப்புடு3*
*ராஜபத2மு லைன ஐயமௌக3ானி* "ஏ'

## பதவுரை

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ராம | - | மங்களகரமான இராமனே! |
| நின்னு | - | உன்னை |
| ஏவரமு | - | எந்த வரம் |
| அடுகுதுரா | - | கேட்பேன் ஐயனே |
| பாவனமு+ஔ | - | தூய்மையான |
| நீ | - | உனது |
| பாத | - | திருவடிகளில் |
| பஜன ஸேயுடகை | - | பஜனை செய்து கொண்டு இருக்க |
| தோவலே | - | பாதை |
| வரமு | - | வீணாக |
| அயினதி | - | ஆகிவிட்டது |
| தேவரா | - | தேவாதிதேவனே |
| இந்து | - | இதில் |
| நேனு | - | நான் |
| ஸ்ரீரகுவர | - | ஸ்ரீரகுகுல வீரனே |
| ஸகல ஆதாரக | - | அனைத்திற்கும் ஆதாரமாயிருப்பவனே |
| நீ மனஸுன | - | உன் மனதில் |
| கோரின வரமுலனு | - | விரும்பிய எண்ணங்களை |
| பதஸாரஸமுல | - | திருவடித்தாமரைகளை |
| நா மனஸாரக | - | என் மனமார |
| விடுவனு | - | விடமாட்டேன் |
| நே | - | நான் |
| ஸாரதர வைராக்யமு | - | சிறந்த மனத்திண்மை |

| | |
|---|---|
| ஸாரெகு | எப்பொழுதும் |
| ஸததகதி குமாருனி | வாயுகுமாரனான அனுமனின் |
| பாலு அயினதி | உரிமை ஆயிற்று |
| நீலகநாப | நீலமணிவண்ணா |
| ஸதா காலமு | எக்காலமும் |
| நீ பக்துல | உன் பக்தர்களின் |
| ஜாலமுலனு | செயல்களைக் |
| கனி | கண்டு |
| பரிபாலன சேயுசு | காத்தருளி |
| நீவு | நீ |
| போலிககா | ஒய்யாரமாகப் |
| சூசே | பார்க்கும் |
| மேலுவகல | உயர்ந்திருக்கின்ற |
| ஸௌக்யமு | சுகம் |
| பாலுடு+அகு | சிறுவனான |
| ரிபுக்னுனி | சத்ருக்களின் |
| பாலையுண்டக | சொந்தமாயிருக்க |
| நேனு | நான் |
| நீ | உன் |
| மஹிமல | மகிமைகளைக் |
| வினகா | கேட்கவும் |
| நாமமுனு தலசகா | திருப்பெயரைச் சிந்திக்கவும் |
| பூமினி | பூமியில் |
| பதரேகலனு | பாதுகைகளை |
| ஏமரகனு | மறக்காமல் |
| கனகா | பார்ப்பதற்கு |
| தாமரஸ நயன | தாமரையை ஒத்த கண்களைஉடையவனே |
| குணதாமா | நற்குணமுடையவனே |
| மநஸுகரகே | சிந்தையுருக்கும் |
| ப்ரேமரஸமு | அன்பை |
| பரத சுவாமி | பரத சுவாமியின் |
| பாலு+அயி+உண்டக | உரிமையாகிருக்க |
| நேனு | நான் |
| வாரமு | கிழமைதோறும் |
| நீது | உனது |

| | | |
|---|---|---|
| மனஸுதாரின் | - | மனப்போக்கை |
| அநுஸரிஞ்சுசு | - | பின்பற்றி |
| நேரமு லேகனு | - | குறையேதும் இல்லாமல் |
| ஆஹார ஸுஷுப்துலனு | - | ஊன், உறக்கத்தை |
| நிவாரண சேயு | - | தவிர்த்து |
| பரிசாரக | - | தொண்டரின் |
| பாக்யமு | - | பெருமை |
| அலங்காரியகு | - | அலங்கரிக்கும் |
| ஸுமித்ரகுமாருனி | - | சுமித்திரையின் குமாரனான இலக்குவனின் |
| பாலையுண்டக | - | சொந்தமானது |
| நின்னு | - | உன்னை |
| ஸ்ரீஹரி | - | ஸ்ரீஹரி |
| பரிதசர ஸமுஹ | - | சிறப்பான கண்களைப் பெற்றவனே |
| ஸதா | - | எப்பொழுதும் |
| நினு | - | உன்னை |
| ஹ்ருத்கேஹமுனனு | - | இதயமாகிய இல்லத்தில் |
| துர்தாஹமுலனு | - | கெட்ட எண்ணங்களை |
| ரோஸி | - | நீக்கி |
| விவாஹனுடு | - | கருடனை ஊர்தியாகக் கொண்டவன் |
| நீவு+அனு | - | நீ என்ற |
| மோஹம்புனனு | - | ஆசையில் |
| மரசி | - | மறந்து |
| ஸோஹமு+அனு | - | அவனே நான் என்ற |
| ஸுகமு | - | சுக அனுபவம் |
| வைதேஹி | - | சீதையின் |
| பாலையுண்டக | - | வசமிருக்க |
| நினு | - | உன்னை |
| ஈ ஜகதினி | - | இந்த உலகில் |
| கல | - | உள்ள |
| ஸுகராஜினி | - | இன்ப நிலைகளையும் |
| மரி | - | மேலும் |
| நிர்ஜர | - | மறுபிறவி இல்லாத |
| ராஜபதமு | - | இராசபதவி |

| | | |
|---|---|---|
| ஈஜன்மமுன | - | இப்பிறவியில் |
| அடுகனு | - | கேட்க மாட்டேன் |
| ராஜவதன | - | நிலாமுகம் உடையவனே |
| த்யாகராஜுனி | - | தியாகராசனின் |
| மதிகி | - | மனதிற்கு |
| எப்புடு | - | எப்பொழுதும் |
| ராஜபதமுலு+அயிதே | - | இராஜயோகம் கிடைத்தால் |
| ஜயமு+ஔகானி | - | வெற்றியாகுமே தவிர |

## பொழிப்புரை

மங்களகரமான இராமனே! உன்னிடம் எந்த வரத்தைக் கேட்பேன் ஐயனே! தூய்மையான உனது திருவடிகளில் பஜனை செய்து கொண்டிருக்க வழியில்லாது ஆகிவிட்டதே! தேவாதிதேவனே! இதில் நான் எந்த வரத்தை உன்னிடம் கேட்பேன்? ஸ்ரீ இரகுகுல வீரனே! அனைத்திற்கும் ஆதாரமாய் விளங்குபவனே! நீ, உன் மனதில் விரும்பிய எண்ணங்களை நிறைவேற்றி உனது திருவடித் தாமரைகளை என் மனமார என்றும் விட்டுவிட மாட்டேன் என்ற மிகச் சிறந்த மனத்திண்மை, எப்பொழுதும் உனது பக்தர்களாகிய தொண்டர்களின் செயல்களைக் கண்டு காத்தருளி நீ ஒய்யாரமாய்ப் பார்க்கும் உனது பார்வையால் உயர்ந்து விளங்கும் இன்பம், சிறுவனான சத்ருக்கனனின் சொந்தமாக இருக்கும்பொழுது நான் உன்னிடம் எந்த வரம் கேட்பேன்? உனது பெருமைகளைக் கேட்கவும் உன் திருப்பெயரைச் சிந்திக்கவும் புவியில் உனது பாதுகைகளை மறவாது பார்ப்பதற்குமான சிந்தையுருக்கும் பக்திரசமானது, பரதசுவாமியிடம் சொந்தமாகி இருக்க, தாமரையொத்த கண்களைக் கொண்டவனே! நற்குணமுடையவனே! நான் உன்னிடம் என்ன வரம் கேட்பேன் ஸ்ரீ ஹரி! சிறப்புமிக்க கண்களைப் பெற்றவனே! எக்காலமும் உன்னை இதயமெனும் இல்லத்தில்வைத்து கொடிய எண்ணங்களையெல்லாம் ஒழித்து கருடனை ஊர்தியாகக் கொண்டவன் நீ என்பதை ஆசையால் மறந்து அவனே நான் என்ற சுக அனுபவம் சீதாப்பிராட்டியின் வசமிருக்க, உன்னிடம் நான் எவ்வரம் கேட்பேன். இவ்வுலகில் உள்ள இன்ப நிலைகளையும் மேலும் மறுபிறவியில்லாத

அரசபதவியினையும் இப்பிறவியில் நான் வேண்டேனா?. சந்திரனைப் போன்ற முகமுடையவனே! இத்தியாகராசனினா? உள்ளத்திற்கு பக்தி என்னும் இராஜயோகம் கிடைத்தால் வெற்றியாகுமே தவிர வேறில்லை. உன்னிடம் நான் எந்த வரம் கேட்பேன்?.

***

## 14. முகா$^{2}$ரி - ஆதி$^{3}$

**பல்லவி**

*ஏலாவதார மெத்திகொண்டிவோ? ஏமி காரணமோ ராமுடை$^{3}$*
*"ஏ"*

**அனுபல்லவி**

*ஆலமு ஸேயுடகா அயோத்$^{4}$ய பாலன ஸேயுடகா ஓ ராக$^{4}$வ!*
*"ஏ"*

**சரணம்**

*யோகு$^{3}$லனு ஜூசுடகா ப$^{4}$வ*
*ரோகு$^{3}$லனு ப்ரோசுடகா? சத*
*ராகரத்$^{3}$ன மாலிகனு ரசிஞ்சின*
*த்யாக$^{3}$ராஜுநகு வர மொஸகு$^{3}$டகா? "ஏ"*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஓ ராகவ | - | ஓ இராகவா! |
| ராமுடை | - | இராமனாய் |
| ஏல | - | எதற்கு |
| அவதாரமு | - | அவதாரம் |

எத்துக்கொண்டிவோ - எடுத்துக்கொண்டாயோ?
ஏமி காரணமோ - என்ன காரணமோ?
ஆலமு - போர்
ஸேயுடகா - செய்வதற்கா?
அயோத்ய பாலன - அயோத்தியை ஆட்சி
ஸேயுடகா - செய்வதற்கா?
யோகுலனு - யோகிகளை
ஜூசுடகா - பார்ப்பதற்கா?
பவரோகுலனு - (சம்சாரக்கடலெனும்) நோயால் பீடிக்கப்பட்டவர்களைக்
ப்ரோசுடகா - காப்பதற்கா?
சத - நூறு
ராக - இராகங்கள்
ரத்னமாலிகனு - இரத்தினக்கீர்த்தனை மாலையை
ரசிஞ்சின - இயற்றிய
த்யாகராஜுனகு - தியாகராசனுக்கு
வரமு+ஒஸகுடகா - வரம்கொடுப்பதற்காகவா

## பொழிப்புரை

ஓ இராகவா? நீ இராமனாய் அவதாரம் எதற்கு எடுத்துக்கொண்டனையோ? என்ன காரணமோ! அரக்கருடன் போரிடுவதற்காகவா? அயோத்தியை ஆட்சி புரிவதற்கா? இல்லை, யோகிகளைத் தரிசித்துக் கொள்வதற்கா? அன்றி சம்சாரக்கடலென்னும் தீராநோயால் பீடிக்கப்பட்டவர்களைப் பாதுகாப்பதற்காகவா? நூற்றுக்கணக்கான இராகங்களில் இரத்தின மணிகளைப் போன்ற கீர்த்தன மாலையினை இயற்றிய இத்தியாகராசனுக்கு வரம் நல்கவா? எதற்கு இராம அவதாரம் எடுத்தனையோ!

***

# 15. கன்னட$^3$கௌ$^3$ள - தே$^3$சாதி$^3$

### பல்லவி

*ஓர சூபு சூசேதி$^3$ ந்யாயமா*
*ஓ! ரகூ$^4$த்தமா நீவண்டி வானிகி "ஓர"..*

### அனுபல்லவி

*நீரஜாக்ஷ!முனு நீ தா$^3$ஸுலகு நீ*
*கேடி வாவுலு? தெல்பவே "ஓர"..*

### சரணம்

*மான மிஞ்சுகைன நீகு தோசலேக போ*
*யினவைனமேமி? புண்யரூபமா*
*தீ$^3$னரக்ஷகா!ச்ரித மானவ ஸந்*
*தான! கானலோல! த்யாக$^3$ராஜனுத! "ஓர'*

பதவுரை

| | | |
|---|---|---|
| நீராஜாக்ஷ | - | தாமரைக் கண்ணனே! |
| முனு | - | முன்பு |
| நீ தாஸுலகு | - | உனது அடியவர்களுக்கு(ம்) |
| நீகு+ஏடி | - | உனக்கு என்ன |
| வாவுலு | - | தொடர்பு |
| தெல்பவே | - | கூறு |
| மானமு+இஞ்சுக | - | அன்புபாராட்டலின் சிறிதளவு |
| அயின | - | ஆவதும் |
| நீகு | - | உனக்குத் |
| தோசலேகபோயின | - | தோன்றாமல் போனதன் |
| வைனமு | | காரணம் |
| ஏமி | - | என்ன? |
| புண்யரூபமா | - | புண்ணியவடிவானவனே! |

| | | |
|---|---|---|
| தீனரக்ஷகா | - | எளியோரைக் காத்தருள்வோனே! |
| ஆச்ரிதமானவ ஸந்தான | - | மக்களின் அடைக்கலமானவனே! |
| கானலோல | - | இசையில் விருப்பமுடையானே! |
| ஓரகுபு | - | கடைக்கண்ணால் |
| சூசேதி | - | பார்ப்பது |
| ந்யாயமா | - | முறையா? |
| ஓ!ரகூத்தமா | - | ஓ! ரகு குல உத்தமனே! |
| நீ வண்டிவானிகி | - | உன் போன்றவனுக்கு |

## பொழிப்புரை

ஓ! இரகுகுல உத்தமனே! உன் போன்றவனுக்கு என்னைக் கடைக்கண்ணால் மட்டும் காண்பது முறையாகுமா? தாமரைக் கண்ணனே! உனது அடியவர்களுக்கும் உனக்கும் முன்பு என்ன தொடர்பு என்பதைத் தெரியப்படுத்து. என்மீது உனக்குச் சிறிதளவேனும் அன்பு தோன்றாமல் போனதன் காரணம் என்ன? புண்ணிய வடிவினனே! எளியோரைக் காத்தருள்வோனே! எளியோரின் காவலனே! இசையில் விருப்பமுடையானே! தியாகராசனால் வணங்கப்படுவோனே! கடைக் கண்ணால் காண்பது உன் போன்றவனுக்கு முறையாகுமா?



# 16. தோடி$^3$ - ஆதி$^3$

### பல்லவி

*கத்த$^3$னே வாரிகி கத்து$^3$கத்த$^3$னி மொரலனிடு$^3$ கத்து$^3$*
*பெத்த$^3$ல மாடலு நேட$^3$ப$^3$த்த$^4$ மௌனோ*

### அனுபல்லவி

*அத்$^3$த$^3$ம்பு செக்கிள்ளசே முத்$^3$துகாரு$^3$ மோமுஜூட$^3$*
*பு$^3$த்தி$^4$ கல்கினட்டி மாவத்த$^3$ ரா வதே$^3$மிரா கத்து$^3$*

### சரணம்

*நித்து$^3$ர நிராகரிஞ்சி முத்து$^3$கா$^3$ தம்பு$^3$ர பட்டி*
*சுத்த$^4$மைன மனஸூசே ஸூஸ்வரமுதோ*
*பத்து$^3$ தப்பக ப$^4$ஜியிஞ்சே பக்தபாலனமு ஸேயு*
*சத்யசாலிவி நீவே; த்யாகராஜ ஸன்னுத கத்து$^3$*

### பதவுரை

| | | |
|---|---|---|
| கத்து | - | உண்டு |
| அனுவாரிகி | - | என்று கூறுபவர்களுக்கு |
| கத்து கத்து+அனி | - | உண்டு உண்டு என்று |
| மொரலனு+இடு | - | முறையிடும் |
| பெத்தலமாடலு | - | பெரியோர்களின் பேச்சுகள் |
| நேடு | - | இன்று |
| அபத்தமு+அவுனோ | - | பொய்யாகி விட்டனவோ? |
| அத்தம்புசெக்கிள்ளசே | - | கண்ணாடிபோன்ற கன்னங்களுடன் |
| முத்துகாரு | - | எழில் ததும்பும் |
| மோமு ஜூட | - | திருமுகம் பார்க்க |
| புத்திகல்கிநட்டி | - | எண்ணம்கொண்டுள்ள |
| மாவத்தராவு | - | எமது அருகில் வராதது |

அதேமிரா - அது ஏன் ஐயா?
நித்துர - உறக்கம்
நிராகரிஞ்சி - புறக்கணித்து
முத்துகா - அழகுடன்
தம்புரபட்டி - தம்பூராவை கையில் பிடித்து
சுத்தமைன - தூய்மையான
மனஸுசே - உள்ளத்தால்
ஸுஸ்வரமுதோ - நல்ல சுரத்துடன்
பத்து தப்பக - முறை தவறாமல்
பஜியிஞ்செ - பஜனை செய்யும்
பக்தபாலனமு ஸேயு - பக்தர்களைக்காத்தருளும்
சத்தயசாலிவி - சத்யசீலனும்
நீவே - நீயே!
த்யாகராஜ ஸன்னுத - தியாகராசனால் போற்றித் தொழப்படுபவனே!

பொழிப்புரை

தியாகராசனால் போற்றித் தொழப்படுபவனே! தெய்வம் உண்டு என்று கூறுகின்றவர்களுக்கு 'உண்டு உண்டு' என்று முறையிடும் பெரியோர்களின் மொழிகள் இன்று பொய்யாகிப் போனதோ? கண்ணாடி போன்ற கன்னங்களும் எழில் ததும்பும் உன் திருமுகத்தைக் காண விரும்புகின்ற எமதருகில் வராதது ஏன் ஐயனே? உறக்கத்தைப் புறக்கணித்து அழகுடன் தம்பூராவைக் கையில் பிடித்து மீட்டித் தூய்மையான உள்ளத்துடன் நல்ல சுரத்துடன் முறை தவறாமல் பஜனை செய்யும் பக்தர்களைக் காத்தருள்பவனும் அவர்களுக்குச் சத்யசீலனும் நீயே அன்றோ!

***

# 17. தே$^3$வகா$^3$ந்தா$^4$ரி - ஆதி$^3$

**பல்லவி**

*கருணா ஸமுத்$^3$ர! நனு கா$^3$வவே ஸ்ரீராமப$^4$த்$^3$ர! "க"..*

**அனுபல்லவி**

*சரணாக$^3$த ஹ்ருத்$^3$சி$^2$த்$^3$ர சமன நிர்ஜித நித்$^3$ர "க"..*

**சரணம்**

*நா பாபமு நாதோ நுண்டி$^3$ன ஸ்ரீப! நீ பிருதுகேமி ப்ரதுகு?*
*ஏ பாபுல சாபமோ? எந்துகீ சலமு? த்யாகராஜநுத! "க"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| கருணாஸமுத்ர | - | கருணைக்கடலே |
| ராம | - | ஓ இராமா |
| காவ | - | காப்பாற்றுவாயாக |
| ஸ்ரீ ராமபத்ர | - | ஸ்ரீ இராமபத்ரனே |
| சரணாகத | - | சரணமடைந்தவர்களின் |
| ஹ்ருத்சித்ர | - | மனத்துன்பத்தை |
| சமன | - | அகற்றுபவனே |
| நிர்ஜித நித்ர | - | உறக்கத்தை ஒழித்தவனே |
| நா பாபமு | - | எனது பாவம் |
| நாதோனு | - | என்னுடன் |
| உண்டின | - | இருந்தால் |
| ஸ்ரீப | - | திருமகளின் தலைவா |
| நீ பிருதுகு | - | உன் புகழுக்கு |
| ஏமி ப்ரதுகு | - | என்ன வாழ்வு? |
| ஏ பாபுல | - | எந்தப் பாவிகளின் |
| சாபமோ | - | சாபமோ? |
| எந்துகு | - | எதற்கு |

ஈ சலமு - இந்த நிலைமை
த்யாகராஜனுத - தியாகராசனால் போற்றப்படுபவனே

### பொழிப்புரை

தியாகராசனால் போற்றப்படுபவனே! கருணைக் கடலே! இராமா! ஸ்ரீ இராமபத்ரனே! என்னைக் காப்பாற்றுவாயாக! உன்னைச் சரணமடைந்தவர்களின் மனத் துன்பங்களை அகற்றுபவனே! (தமோ குண மென்னும்) உறக்கத்தை ஒழித்து விழிப்புடன் இருப்பவனே! எனது பாவம் என்னுடனேயே இருக்குமானால் உன் புகழுக்கு என்ன வாழ்வு? திருமகளின் தலைவா! எந்தப் பாவிகளிட்ட சாபமோ? எதற்கு என்மேல் இக்கோபம்?

***

## 18. கீரவாணி - ஆதி$^{3}$

### பல்லவி

*கல்கி$^{3}$ யுண்டே கதா$^{3}$ கல்கு$^{3}$னு? காமித ப$^{2}$லதா$^{3}$யக! "க"*

### அனுபல்லவி

*கலினி இங்கி$^{3}$த மெறுக$^{3}$க நின்னாடு$^{3}$ கொண்டி;*
*சலமு சேயக நா தலனு சக்கனி வ்ராத "க"..*

### சரணம்

*பா$^{4}$க$^{3}$வதாக்ரேஸருலகு$^{3}$ நாரத$^{3}$*
*ப்ரஹ்லாத$^{3}$ பராசர ராமதா$^{3}$ஸுலு*
*பா$^{3}$கு$^{3}$க$^{3}$ ஸ்ரீரகு$^{4}$ராமுனி பத$^{3}$முல*
*பக்தி சேஸினரீதி த்யாக$^{3}$ராஜுனி கிபுடு$^{3}$ "க".*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| காமிதபலதாயக | - | விரும்பிய பலன்களைக் கொடுப்பவனே! |
| கலிகியுண்டே கதா | - | கொடுத்து வைத்திருந்தால் தானே |
| கல்குனு | - | கைகூடும் |
| கலினி | - | இப்புவியில் |
| இங்கிதமு | - | அறியாமை |
| எறுகக | - | அறியாது |
| நின்னு | - | உன்னை |
| ஆடுகொண்டி | - | திட்டினேன் |
| சலமு | - | கோபம் |
| சேயக | - | கொள்ளாதே |
| நா தலனு | - | என் தலையில் |
| சக்கனி | - | அருமையான |
| வ்ராத | - | தலையெழுத்து |
| பாகவத அக்ரேஸரலு +அகு | - | பாகவத முதன்மையானவர்களான |
| நாரத, ப்ரஹலாத, பராசர, | - | நாரதர், பிரகலாதன், பராசரர், |
| ராமதாஸுலு | - | ராமதாசர் முதலானோர் |
| பாகுக | - | சிறப்பாக |
| ஸ்ரீரகுராமுனி | - | ஸ்ரீரகுராமனுடைய |
| பதமுல | - | திருவடிகளை |
| பக்தின் | - | பக்திநெறியுடன் |
| சேஸினரீதி | - | போற்றியதைப் போல் |
| த்யாகராஜுனிகி+இபுடு | - | தியாகராசனுக்கும் இப்பொழுது |

**பொழிப்புரை**

விருப்பமுடன் எண்ணிய பலன்களையெல்லாம் அளிப்பவனே! நான் கொடுத்து வைத்திருந்தால் தானே (என் தலையெழுத்து நன்றாக அமைந்திருந்தால்தானே) விரும்பியது கைகூடும். இவ்வுலகில் அறியாமையால் உன்னைத் தவறாகப் பேசிவிட்டேன். இதனால் நீ கோபம் கொள்ளாதே! என் தலையில் அருமையான தலையெழுத்து அமைந்திருந்தால்

தானே நினைத்தது நடக்கும்? பக்தர்களுக்குள் சிறந்த மேலோரான நாரதர், பிரகலாதன், பராசரர், ராமதாசர் முதலானோர் நன்றாக இரகுராமனுடைய திருவடிகளைப் பக்திநெறியுடன் போற்றியதைப்போல இத்தியாகராசனுக்கும் இப்பொழுது வாய்க்கக் கொடுத்து வைத்திருந்தால் தானே கைகூடும்?

***

## 19. நாயகி - ரூபகம்

**பல்லவி**

*கனுகொ$^{3}$னு ஸௌக்$^{2}$யமு கமலஜு°னைன க$^{3}$ல்கு$^{3}$னா? "க"*

**அனுபல்லவி**

*த$^{3}$னுஜ வைரியகு$^{3}$ ராமுனி த$^{3}$யகல்கி$^{3}$ன நதனி வினா "க"*

**சரணம்**

*தனுவொகசோ மனஸொகசோ தகி$^{3}$னவேஷ மொகசோநிடி$^{3}$*
*ஜனுல நேசு வாரிகி ஜயமௌனே? த்யாகராஜு° "க"*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| கனுகொனு | - | கண்டுகொள்ளும் |
| ஸௌக்யமு | - | பேரானந்தம் |
| கமலஜு°கு+அயின | - | பிரம்மனுக்குக் கூட |
| கல்குனா | - | கிடைக்குமா? |
| தனுஜ வைரியகு | - | அரக்கரின் பகைவனான |
| ராமுனி | - | இராமனின் |

| | |
|---|---|
| தய கல்கினன் | - தயவு கிடைத்தால் |
| அதனி வினா | - அவனைத் தவிர |
| தனுவு+ஒகசோ | - உடல் ஓரிடத்தும் |
| மனஸு+ஒகசோ | - உள்ளம்பிறிதோரிடத்தும் |
| தகின வேஸமு+ஒகசோ | - பூண்டவேடம்ஒருபுறமும் |
| நிடி | - நீ |
| ஜனுலனு+ஏசுவாரிகி | - மக்களைத் திட்டுபவர்களுக்கு |
| ஜயமெளனே | - வெற்றி கிட்டுமோ? |
| த்யாகராஜு | - தியாகராசன் |

## பொழிப்புரை

இத்தியாகராசன் கண்( காள்ளும் பேரின்பம் பிரம்மாவிற்கும் கிடைத்திடுமோ? அரக்கர்களுக்குப் பகைவனாய் விளங்கும் இராமபிரானின் தயவு கிடைக்கப் பெற்றவர்களைத் தவிர பிரம்மாவானாலும் அவ்வின்பம் கிட்டுமோ? உடல் ஓரிடத்திலும், உள்ளம் மற்றோரிடத்திலும் பூண்ட வேடம் வேறொருபுறமுமாக நிலை நிறுத்தி மக்களை ஏமாற்றித் திரிபவர்களுக்கு வெற்றி கிடைத்திடுமோ?



# 20. தே[3]வமனோஹரி - தே[3]சாதி[3]

**பல்லவி**

*கன்ன தண்ட்[3]ரி நானப-கருணமானகே-கா[1]ஸி தாளனே "க"*

**அனுபல்லவி**

*நின்ன ஸேயு பனுலு நேடு[3]க[3]ாக வே*
*ரென்ன லேத[3]னுசு வேமாருலகு "க"*

**சரணம்**

*எது[3]ரு த[3]ானனே இங்கிதம் பெ[1]ரிகி[3]*
*செத[3]ரனீக பஞ்சேந்த்ரிய மணஞ்சி நினு*
*வத[3]லலெனி தை[4]ர்யசாலி கா[1]த[3]னி*
*மத[3]னகோடி ரூப! த்யாக[3]ராஜநுத! "க"*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| கன்ன தண்ட்ரி | - | ஈன்ற தந்தையே |
| நானப | - | என் மீதான |
| கருண | - | கருணையை |
| மானகே | - | நிறுத்தி விடாதே |
| காஸி | - | துன்பம் |
| தாளனே | - | தாங்கமாட்டேன் |
| நின்ன | - | நேற்று நீ |
| ஸேயு | - | செய்த |
| பனுலு | - | பணிகள் |
| நேடுகாக | - | இன்றும் இல்லாமல் |
| வேரு | - | வேறு |
| என்னலேது | - | எண்ணவில்லை |
| அனுசு | - | என்று |
| வேமாருலகு | - | பலமுறை |
| எதுரு தானு+அனே | - | எதிரே தோன்றும் எல்லாம் 'தான்' என்ற |

| | | |
|---|---|---|
| இங்கிதம்பு+எரிங்கி | - | எண்ணம் அறிந்து |
| செதரனிக | - | சிதறவிடாமல் |
| பஞ்சேந்த்ரியமு+அணஞ்சி | - | ஐம்புலன்களை அடக்கி |
| | - | உன்னை |
| வதலலேனி | - | விட்டு விட முடியாத |
| தைர்யசாலிகாது+அனி | - | மனதிடம் அற்றவன் என்று |
| மதனகோடிரூப | - | கோடி மன்மதன்களின் அழகு வடிவினனே |
| தியாகராஜநுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே |

*பொழிப்புரை*

என்னை ஈன்ற தந்தையே! என்மீதான உன் கருணையினை நிறுத்திவிடாதே. அத்துன்பத்தை என்னால் தாங்கிக் கொள்ள இயலாது. பலமுறை நேற்று நான் செய்த பணிகளையே இன்றும் செய்கின்றேனல்லாது வேறு ஒன்றையும் எண்ணிப் பார்க்கவில்லை என்று நீ உன் கருணையை என்னிடத்தில் நிறுத்திவிடாமல் தொடர்க! எதிரில் தோன்றுபவைகளில் அனைத்திலும் நீதான் என்ற உண்மையறிவை உணர்ந்து (இங்கிதம் அறிந்து) ஐம்புலன்களையும் சிதறவிடாமல் அடக்கி உன்னை விடாது துதிக்கும் மனத்திடம் இல்லாதவன் என்று என்னை நினைத்து நீ உன் கருணையை மறக்காதே! கோடி மன்மதன்களையொத்த அழகுவடிவினனே! இத் தியாகராஜனால் துதிக்கப்படுபவனே!.



# 21. க4ண்டா - ரூபகம்

## பல்லவி

*கா3ரவிம்பராதா3? க3ருட3க3மன ராம! நனு* "கா3"

## அனுபல்லவி

*ஸ்ரீரமா மனோஹரா! ஸ்ரீதஹ்ருதய விஹாரா!*
*சேர ராவேரா? ஸ்ரீரகு4 வீரதீ4ரா!* "கா3"..

## சரணம்

*பேருகைன லேதா3? ராமா! பிலிசின ராராதா3? ஸரி*
*வாரலாட3 லேதா3? வினி, வரதா3! கருண ராதா3?*
*மாரு பல்க வாதா3? மும்மாரு நம்ம லேதா3?* "கா3"..

*தனயுடா3டு3மாட தல்லி தண்ட்3ருலகதி3 யாட கா3தா3*
*நினு பாடி3ன பாட வினி நீமுத்து3 நோட நேமன*
*வலதே3 யிச்சோட, மாத3வ! யிக தெரசாடா?* "கா3"..

*ருகலொஸகி3 கொன்னஸதி ரூபமு லெட்லுன்ன,*
*ஸ்ரீகர கு3ணமுன்ன செவி செவிமி வீடரன்ன, ப*
*ராகு நீகு மின்ன, த்யாகராஜ விநுத! பி4ன்ன* "கா3"..

## பதவுரை

| | | |
|---|---|---|
| கருடகமன ராம | - | கருடவாகனனே இராமா |
| நனு | - | என்னை |
| காரவிம்பராதா? | - | அன்புகாட்ட வரக்கூடாதா |
| ஸ்ரீரமா மனோஹரா | - | திருமகளின் உள்ளத்தைக் கவர்ந்தவனே |
| ஸ்ரீத ஹ்ருதய விஹார | - | பக்தர்களின் உள்ளத்துறைபவனே |

| | | |
|---|---|---|
| ஸ்ரீரகுவீர தீர | - | சர்மிகு இரகுகுல வீரனே தீரனே |
| சேர ராவு+ஏரா | - | அருகில் வராதது ஏன் ஐயா? |
| ராம | - | இராமா! |
| பேருகைனலேதா? | - | பெயருக்காவது இல்லையா? |
| பிலிசினராராதா? | - | அழைத்தாலாவதுவரலாகாதா? |
| ஸரிவாரலு+ஆடலேதா | - | சமமானவர்கள் கூறவில்லையா? |
| வினி | - | கேட்டு |
| வரதா | - | வரமளிப்பவனே |
| கருணராதா? | - | கருணை வராதோ? |
| மாரு பல்கராதா? | - | மறுமொழி கூறக்கூடாதா |
| மும்மாரு | - | பலமுறைகள் |
| நம்மலேதா? | - | நம்பவில்லையா |
| தனயுடு | - | மகன் |
| ஆடுமாட | - | கூறும்மொழி |
| தல்விதண்ட்ருலகு | - | தாய்தந்தையருக்கு |
| அதி | - | அது |
| ஆடகாதா? | - | விளையாட்டு அல்லவா? |
| நினு | - | உன்னைப் |
| பாடின பாட வினி | - | பாடிய பாட்டைக்கேட்டு |
| நீ | - | உன் |
| முத்துநோடனு | - | அழகான வாயால் |
| ஏமீ + அனவலதா | - | ஏதும் சொல்லக்கூடாதா |
| இச்சோட | - | இங்கே |
| மாதவ | - | மாதவனே |
| இக | - | இனியும் |
| தெரசாடா? | - | திரைமறைவா? |
| ரூகலு | - | பணம் |
| ஒஸகி | - | கொடுத்து |
| கொன்ன | - | வாங்கி |
| ஸதி ரூபமுலு | - | மனைவியின் தோற்றங்கள் |
| எட்லு உன்ன | - | எவ்வாறு இருந்தாலும் |
| ஸ்ரீகர | - | செல்வத்தைக் கொடுப்பவனே! |

## பொழிப்புரை

கருடனை ஊர்தியாகக் கொண்டவனே! இராமா! என்னைச் சிறப்பிக்க வரக் கூடாதா? திருமகளின் உள்ளத்தைக் கவர்ந்தவனே! பக்தர்களின் உள்ளங்களில் உறைபவனே! சீர்மிகு இரகுகுல வீரனே! தீரனே! என் அருகில் வராதது ஏன் ஐயா? இராமா! பெயருக்காவது அன்றி அழைத்தாலாவது வரக்கூடாதா? உனக்குச் சமமானவர்கள் ஏதும் கூறவில்லையா? அல்லது அவர்கள் கூறக்கேட்டும் கருணை காட்ட வரலாகாதோ? வரங்களைக் கொடுப்பவனே! எனக்கு மறுமொழியாவது கூறக் கூடாதா? பன்முறை உன்னை நம்பவில்லையா? தாய் தந்தையருக்குப் பிள்ளை கூறும்மொழி (மழலைமொழி) விளையாட்டு இன்பம் அல்லவா? உன்னைப்பாடிய பாட்டைக்கேட்டும் உன் அழகான வாய்திறந்து ஏதும் சொல்லக் கூடாதா? மாதவனே! இனியும் திரைமறைவிலா இருக்கப் போகிறாய்? பணம் கொடுத்து (கன்யாசுல்கம் கொடுத்து) கொண்ட மனைவியின் தோற்றங்கள் எவ்வண்ணம் இருப்பினும், திருவளிப்பவனே குணமுள்ள பெண்ணின் நட்பை ஆடவர் விடமுடியாது அன்றோ? இனியும் என் மேல் பாராமுகமாய் இருத்தல் உனக்கு ஏற்றதாகுமா? இத்தியாகராசனால் போற்றித் தொழப்படுபவனே! விரைந்து வந்து என்னைச் சிறப்பிக்க வரக்கூடாதா?



# 22 சுத்த4ஸாவேரி - ரூபகம்

**பல்லவி**

*காலஹரணமேலரா! ஹரே! ஸீதாராம!* *"கா"..*

**அநுபல்லவி**

*கால ஹரணமேல? ஸுகு3ணஜால? கருணாலவால "கா"..*

**சரணம்**

*சுட்டி சுட்டி பக்ஷுலெல்ல செட்டுவெத3கு ரீதி பு4வினி*
*புட்டக3னே நீ பத3முல பட்டுகொன்ன நன்னு ப்3ரோவ "கா"..*

*பொட3வுன எந்தாடு3 கொன்ன பூ4மினி த்யாக3ம்பு3 ரீதி*
*கடு3 வேல்புல முன்ன நீவுக3ாக எவரு நன்னு ப்3ரோவ "கா"..*

*தி3னதி3னமுனு திரிகி3 திரிகி3 தி3க்குலேக சரணு ஜொச்சி*
*தனுவுத3னமு நீதே யண்டி த்யாகராஜ விநுத ராம "கா"..*

*இஷ்டதை3வமா! மனோபீ4ஷ்ட மீயலேக இங்க*
*கஷ்டமா த்யாக3ராஜு காமிதார்த2 ப2ல மொஸங்க3 "கா"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஹரே ஸீதாராம | - | ஹரே சீதாராமனே |
| காலஹரணமு | - | காலதாமதம் |
| ஏலரா | - | ஏனடா, |
| ஸுகுணஜால | - | நற்குணங்களின் நிதியே |
| கால ஹரணமு | - | காலத்தை வீணாக்குதல் |
| ஏலரா | - | ஏன் (ஐயா) |
| கருணாலவால | - | கருணையின் உறைவிடமே |
| பக்ஷுலு + எல்ல | - | பறவைகள் எல்லாம் |
| சுட்டி சுட்டி | - | சுற்றிச் சுற்றி |
| செட்டு | - | மரம் |
| வெதகு | - | தேடுதல் |

ரீதி - போன்று
புவினி - பூமியில்
புட்டகானே - பிறந்தவுடனே
நீபதமுல - உனது திருவடிகளை
பட்டு கொன்ன - பற்றிக் கொண்ட
நன்னு - என்னைக்
ப்ரோவ - காத்தருள
பொடவுன - நெடுங்காலமாக
எந்த + ஆடுகொன்ன - எவ்வளவு கூறிக்கொண்டாலும்
பூமினி - பூமியில்
த்யாகம்பு ரீதி - தியாகத்தைப் போன்று
கடு - பல
வேல்புல முன்ன - தேவர்களுக்கு முன்பு
நீவுகாக - நீயல்லாது
எவரு - யார்
நன்னு - என்னைக்
ப்ரோவ - காத்தருள
தினதினமுனு - ஒவ்வொரு நாளும்
திரிகிதிரிகி - அலைந்து திரிந்து
திக்குலேக - திக்கற்று
சரணுஜொச்சி - சரணமடைந்து
தனுவு - உடம்பு
தனமு - பொருள் (செல்வம்)
நீதெ - உன்னுடையதே
அண்டி - எனத் துணிந்தேன்
த்யராகராஜவினுத - தியாகராசனால் வணங்கப்பட்ட
ராம - இராமா
இஷ்டதைவமா - விருப்பமான என் தெய்வமே
மநோ பீஷ்டமு - மன விருப்பங்களைக்
ஈயலேக - கொடுக்க முடியாமல்
கஷ்டமா - கடினமா?
த்யாகராஜு - தியாகராசனின்
காமித+அர்த் - மனம் விரும்பிய
பலமு - பலன்
ஒஸங்க - அளிக்க

## பொழிப்புரை

ஹரே சீதாராமனே! காலத்தை வீணடிக்காதே. நற்குணங்களின் நிதியே! கருணையின் உறைவிடமே! காலதாமதம் ஏன் ஐயா? பறவைகள் அனைத்தும் சுற்றிச் சுற்றிப் பறந்து மரம் தேடுவது போன்று பூமியில் பிறப்பு முதலாக உனது திருவடிகளைப் பற்றிக்கொண்ட என்னைக் காத்தருள இன்னும் காலதாமதம் ஏன்? நெடுங்காலமாக எவ்வளவு கூறிக் கொண்டாலும் பூவுலகில் தியாகத்தைப் போன்று சிறந்தது வேறொன்றில்லை. பல தேவர்களை விடச் சிறந்த உன்னையன்றி வேறு யார் என்னைக் காத்தருள்வர்? ஒவ்வொரு நாளும் அலைந்து திரிந்து திக்கற்று உன்னையே சரணமடைந்து எனது உடம்பும் பொருளும் உன்னுடையதே எனத் துணிந்தேன். என் விருப்ப தெய்வமே தியாகராசனால் வணங்கப்பட்ட இராமா! என் மனவிருப்பங்களை நிறைவேற்ற இன்னும் இயலாதோ? இத் தியாகராசனின் மனம் விரும்பிய பலனை அளிக்க இன்னும் காலதாமதம் ஏன்?



# 23. ஸுரடி - தேசாதி$^{3}$

### பல்லவி

*கீ$^{3}$தார்த$^{2}$மு ஸங்கீ$^{3}$தாநந்த$^{3}$மு*
*நீதாவுன கூட$^{3}$ரா, ஓ! மனஸா* "கீ"..

### அனுபல்லவி

*ஸீதாபதி சரணாப்$^{3}$ஜமு நிடு$^{3}$கொன்ன*
*வாதாத்மஜுனிகி பா$^{1}$க$^{3}$ தெலுஸுரா* "கீ"..

### சரணம்

*ஹரிஹர ப$^{4}$ாஸ்கர காலாதி$^{3}$ கர்மமு*
*லனு மதமுல மர்மமுல நெரிகி$^{3}$ன*
*ஹரிவர ரூபு$^{3}$டு ஹரிஹய விநுதுடு$^{3}$*
*வரத்யாக$^{3}$ராஜ வரது$^{3}$டு$^{3}$ ஸுகீ$^{2}$ரா* "கீ"..

### பதவுரை

| | | |
|---|---|---|
| ஓ மனஸா | - | ஓ மனமே |
| கீத+அர்தமு | - | கீதையின் பொருள் |
| ஸங்கீத+ஆநந்தமு | - | சங்கீதத்தின் பேரின்பம் |
| நீதாவுன | - | உன்னிடத்தில் |
| கூடரா | - | காண்பாய் |
| ஸீதாபதி | - | சீதாப்பிராட்டியின் தலைவனின் |
| சரணாப்ஜமுல | - | திருவடித் தாமரைகளை |
| இடு கொன்ன | - | வைத்துக் கொண்டிருக்கும் |
| வாதாத்மஜுனிகி | - | அனுமனுக்கு |
| பாக | - | நன்றாகத் |
| தெலுஸுரா | - | தெரியுமடா |
| ஹரிஹர பாஸ்கர ரூபுடு | - | ஹரிஹரன் கதிரவனின் உருவினன் |
| காலாதி கர்மமுலனு | - | காலங்களின் செயல்களை |
| மதமுல மர்மமுலனு | - | மதங்களின் உள்நோக்கத்தை |

| | | |
|---|---|---|
| எரிகின | - | அறிந்த |
| ஹரிவர ரூபுடு | - | ஹரியால் கொடுக்கப்பட்ட உருவம் உள்ளவன் |
| ஹரிஹய விநுதுடு | - | இந்திரனால் வணங்கப்படுபவன் |
| வர | - | சிற |
| த்யாகராஜ வரதுடு | - | தியாகராசனுக்கு வரமளித்தவன் |
| ஸுகிரா | - | இன்பப்பெருக்கை உடையவன் |

## பொழிப்புரை

ஓ மனமே! பகவத் கீதையின் பொருளும் சங்கீதத்தின் பேரின்பமும் உன்னிடத்திலேயே காண்பாய். சீதாப் பிராட்டியின் தலைவனான இராமனது திருவடித் தாமரைகளை தன் உள்ளத்தில் வைத்துக் கொண்டிருக்கும் அனுமனுக்கு நன்றாகத் தெரியும். ஹரி, ஹரன், ஆதவன், காலம் முதலான கர்மங்கள், மதங்களின் இரகசியங்கள் இவைகளை அறிந்த வானரத்தலைவனான சிறந்த தோற்றத்தினன். (இவ்வனுமன்) இந்திரனால் வணங்கப் படுபவன். சிறந்த தியாகராசனுக்கு வரமளித்தவன். இன்பப் பெருக்கை உடையவன்.



## 24. கௌ³ளி மனோஹரி - ஜம்ப

**பல்லவி**

*கு³ருலேக எடுவண்டி கு³ணிகி தெலியக³போ³து (ஸத்) "குரு*

**அனுபல்லவி**

*கருகைன ஹ்ருத்ரோக³ க³ஹனமுனு கொட்ட ஸத் "குரு".*

**சரணம்**

*தனுவு ஸுத த⁴ன தா³ர தா³யாதி³ பாந்த⁴வுலு*
*ஜனியிஞ்சி செத³ரு ஜாலினி; கருணதோ*
*மனஸு நண்டக சேயு மஞ்சிமந்த³னுக தத்வபோ*
*த⁴னசேஸிகாபாட³ த்யாக³ராஜாப்துட³னு, "குரு".*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| குருலேக | - | ஆசிரியனின்றி |
| எடுவண்டி | - | எவ்விதமான |
| குணிகி | - | குணங்கள் உடையவருக்குத் |
| தெலியக போது | - | தெரியாமல் போகும் |
| ஸத் | - | மெய்மை |
| கருகு+அயின | - | கொடியதான |
| ஹ்ருத் ரோக | - | மனப்பிணிக் |
| கஹனமுனு | - | காட்டை |
| கொட்ட | - | அழிக்க |
| ஸத்குருவு | - | மெய்குரு |
| தனுவு | - | உடல் |
| ஸுத | - | மகன் |
| தன | - | செல்வம் |
| தார | - | மனைவி |
| தாயாதி | - | தாயாதி |
| பாந்தவுலு | - | உறவினர் |

| | | |
|---|---|---|
| ஜனியிஞ்சி | - | பிறந்து |
| செதரு | - | இறக்கும் |
| ஜாலினி | - | துன்பத்தை |
| கருணதோ | - | இரக்கமுடன் |
| மனஸுனு+அன்டக | - | மனதில் பற்றாது |
| மஞ்சி மந்து | - | நல்மருந்து |
| அனுசு | - | என்று |
| தத்வபோதன சேஸி | - | தத்துவப் போதனை செய்து |
| காபாடு | - | காக்கும் |
| த்யாகராஜாப்துடு+அகு | - | தியாகராசனுக்கு உற்ற நண்பனான |

*பொழிப்புரை*

மெய்குருவின்றி எவ்விதமான குணங்களைப் பெற்றவர்களுக்கும் ஒன்றும் தெரியாது போகும். கொடியதான மனப்பிணி என்னும் காட்டை அழிக்க மெய்குருவின்றி இயலாது. உடல், பிள்ளை, மனைவி, பொருள், தாயாதிகள், சுற்றம் முதலியோர் பிறந்து இறக்கும் துன்பத்தை மனதினில் பற்றாமல் செய்யும் நல்மருந்து என்ற தத்துவப் போதனை செய்யும், கருணையுடன் காக்கும் இத் தியாகராசனுக்கு உற்ற நண்பனான மெய்குருவின்றி ஏதும் தெரியாமலே போகும்.



## 25. தே3வமனோஹரி - ரூபகம்

**பல்லவி**

*குலபி3ருது3னு ப்3ரோசுகொம்மு; ரம்மு* "குல"

**அனுபல்லவி**

*இலக3ல பூ4தே3வ ஸுராது3ல காதா3ருட3கு3நீ* "குல"

**சரணம்**

*நிக3மாக3மசர!நீகு நித்ய மங்களமு க3ல்கு3*
*வக3ஸேயகு ஸ்ரீ ராம வந்தி3த த்யாக3ராஜ* "குல"

**பதவுரை**

| | | |
|---|---|---|
| குலபிருதுனு | - | குலப்பெருமையினை |
| ப்ரோசுகொம்மு | - | காத்துக்கொள் |
| ரம்மு | - | வருக |
| இலன்+கல | - | உலகிலுள்ள |
| பூதேவ | - | அந்தணர்கள் |
| ஸுர+ஆதுலகு | - | தேவர்கள் முதலானவர்களுக்கு |
| ஆதாருடகு | - | ஆதாரமானவன் |
| நீ | - | உன் |
| நிகம+ஆகம சர | - | வேதாகமங்களில் உலவுகின்றவனான |
| நீகு | - | உனக்கு |
| நித்யமங்களமு | - | என்றும் மங்களம் |
| கல்கு | - | உண்டாகும் |
| வகஸேயகு | - | துன்பத்திற்கு உள்ளாக்காதே |
| த்யாகராஜ வந்தித | - | தியாகராசன் வணங்கும் |
| ஸ்ரீ ராம | - | திருவுடைய இராமா! |

## பொழிப்புரை

ஸ்ரீ இராமா! உன் குலப்பெருமையினைக் காத்துக்கொள்ள வருக. உலகிலுள்ள அந்தணர்கள் தேவர்கள் முதலானவர்களுக்கு நீ ஆதாரமானவன் அல்லவா! வேத ஆகமங்களில் உலா வருகின்றவனான உனக்கு என்றும் மங்களம் நிலைக்கட்டும். இன்னும் என்னைத் துன்பத்திற்கு உள்ளாக்காதே! வருகவே! தியாகராசனால் வணங்கப்பட்ட இராமா.

***

## 26. தோடி$^{3}$ - ஆதி$^{3}$

### பல்லவி

*கொலுவமரெ க$^{3}$த$^{3}$! கோத$^{3}$ண்டபாணி "கொ".*

### அனுபல்லவி

*நலுவகு, பலுகுல செலியகு, ருக்மிணிகி,*
*லலிதகு, ஸீதகு, லக்ஷ்மணுனி கருதை$^{3}$ன "கொ".*

### சரணம்

*வேகுவ ஜாமுன வெலயுசு தம்பு$^{3}$ர*
*ஜேகொனி கு$^{3}$ணமுல ஜெலுவொந்த$^{3}$ பாடு$^{3}$சு,*
*ஸ்ரீகருன காச்ரித சிந்தாமணிகி*
*நாகவி தீ$^{3}$ர பாலாரகி$^{3}$ம்ப ஜேஸெடு$^{3}$ "கொ"..*

*வினவய்ய ஸரிப்ரொத்து வேள நாது$^{2}$னிகி*
*ஜனவுன பன்னீடஸ்னானமு காவிஞ்சி,*

*க2னுனிகி தி3வ்ய போஜனமுனு பெட்டி.*
*கம்மனி விட மொஸங்கு3ச மரவகஸேவிஞ்செடு3 "கோ"*

*ப4ாகவதுலு கூ3டி3 ப3ாகு3க க4ன நய*
*ராக3முலசே தீ3பாராத4ன மொனரிஞ்சி*
*வேக3மெ ஸ்ரீஹரி விருலனை பவ்வளிஞ்ச*
*ஜோகெ3ாட்டி த்யாகராஜு ஸுமுகு2னி லேபெடு3 "கோ".*

பதவுரை

| | | |
|---|---|---|
| கோதண்ட பாணி! | - | கோதண்டபாணியே! |
| கொலுவு+அமெரகதா? | - | கொலுவிருக்கை அமைந்தது அல்லவா? |
| நலுவகு | - | பிரம்மாவிற்கு |
| பலுகுல செலியகு | - | சொல்லின் செல்விக்கு |
| ருக்மணிகி | - | ருக்மணிக்கு |
| லலிதகு | - | லலிதாம்பிகைக்கு |
| ஸீதகு | - | சீதைக்கு |
| லட்சுமணுனிகி | - | இலக்குவனுக்கு |
| அருதைன | - | கிடைத்தற்கரிய |
| வேகுவஜாமுன | - | விடியற்காலையில் |
| வெலயுசு | - | அழகாக விளங்கி |
| தம்புர | - | தம்புராவைக் |
| சேகொனி | - | கையில் ஏந்தி |
| குணமுலு | - | குணங்களை |
| செலுவந்த | - | மகிழ்வுடன் |
| பாடுசு | - | பாடிக்கொண்டு |
| ஸ்ரீகருனகு | - | திருவளிக்கக் கூடியவனுக்கு |
| ஆச்ரித சிந்தாமணிகி | - | சரணடைந்தவர்களின் சிந்தாமணிக்கு |
| ஆகலி தீர | - | பசிதீர |
| பாலு ஆரகிம்ப | - | பாலமுது செய்விக்கும் |
| சேஸெடு | - | செய்யும் |
| வினவய்ய | - | கேள் ஐயனே! |
| ஸரிப்ரொத்துவேள | - | பொழுது விடிந்தவேளை |
| நாதுனிகி | - | நாதனுக்கு |

சனவுன - நெருக்கத்துடன்
பந்நீடஸ்னானமு - பன்னீரில்திருமஞ்சனம்
காவிஞ்சி - செய்வித்து
கனுனிகி - மகானுக்கு
திவ்ய போஜனமு - இனிய உணவு வகைகளை
பெட்டி - கொடுத்து
கம்மனி - கம்மென்று நறுமணம் மிக்க
விடமு - தாம்பூலம்
ஒஸங்குச - அளித்து
மரவக - மறக்காமல்
ஸேவிஞ்செடு - சேவைபுரியும்
பாகவதுலுகூடி - அடியார்கள் கூடி
பாகுக - நன்றாக
கன நயராகமுலசே - கன, நய இராகங்களால்
தீப+ஆராதன - தீப ஆராதனம்
ஒனரிஞ்சி - செய்து
வேகமே - உடனே
ஸ்ரீஹரி - ஸ்ரீஹரியை
விருலபை - மலர்களின் மீது
பவ்வளிஞ்ச - படுக்க வைத்து
ஜோகொட்டி - தட்டிக்கொடுத்து
த்யாகராஜு - இத்தியாகராசன்
ஸுமுகுனி - அழகு முகத்தவனை
லேபெடு - திருப்பள்ளியெழுச்சி செய்யும்

## பொழிப்புரை

கோதண்டபாணியே! உனக்குக் கொலுவிருக்கை அமைந்தது அல்லவா? பிரம்மனுக்கும், கலை மகளுக்கும் ருக்மணிதேவிக்கும், லலிதாம்பிகைக்கும் சீதைக்கும் இலக்குவனுக்கும் கிடைத்ததற்கு அரியதான கொலுவிருக்கை கோதண்டபாணியே உனக்கு அமைந்ததன்றோ! விடியலில் எழுந்து அழகுடன் விளங்கும் தம்புராவைக் கைகளில் ஏந்தி உன் குணவியல்புகளை மகிழ்வுடனே பாடிக்கொண்டு, திருவளிக்கக் கூடியவனும் சரணடைந்தவர்களுக்குச்

சிந்தாமணியாக விளங்குபவனுமான உனக்குப் பசிதீர பாலமுது செய்விக்கும் கொலுவிருக்கை அமைந்ததல்லவோ! கேள் ஐயனே! பொழுது புலர்ந்த வேளையில் பன்னீரில் திருமஞ்சணம் செய்வித்துப் பெருமானுக்கு இன்சுவை அமுது அளித்து, நறுமணம்மிக்க தாம்பூலம் மறவாமல் இசைத்து சேவித்திருக்கும் கொலுவிருக்கை அமைந்ததல்லவா! பாகவதர்கள் கூடி நன்றாக கன, நய இராகங்களில் இசைபாடி தீபாராதனை செய்து உடனே இராமனை மலர்களால் அமைந்த படுக்கையில் தட்டிக்கொடுத்து பள்ளி கொள்ளச் செய்து பின்னர் இத்தியாகராசன், அழகு முகத்தவனைத் திருப்பள்ளியெழுச்சி பாடி துயிலெழுப்பும் கொலுவிருக்கை அமைந்ததுஅல்லவோ!

***

## 27. பை[4]ரவி - ஆதி[1]

**பல்லவி**

*கொலுவை யுன்னாடெ[3]; கோத[3]ண்ட[3]பாணி "கொ'*

**அனுபல்லவி**

*தொலிகர்ம மணக[3]ஜூதாமு ராரெ,*
*தோயஜாரி ரோஹினி கூடினரீதி "கொ'*

**சரணம்**

*மனஸுரஞ்ஜில்ல ஸுரஸதுலு*
*யணிமாது[3]லு கொலுவ, வெயி வன்னெ*
*கனக சலாகனு கே[3]ரு ஸீதா*
*காந்ததோ, ஸொக[3]ஸுக[3] த்யாக[3]ராஜனுதுடு[3] "கொ*

பதவுரை

| | |
|---|---|
| கோதண்ட பாணி | - கோதண்டபாணியாகிய இராமா |
| கொலுவு+அயி | - கொலு |
| உன்னாடெ | - வீற்றிருக்கின்றான் |
| தொலிகர்மமு | - பழவினைகள் |
| அணகன் | - அழிந்துபோகக் |
| சூதாமு ராரெ | - காண்போம் வாருங்கள் |
| தோயஜாரி | - சந்திரன் |
| ரோஹிணி | - ரோஹிணியுடன் |
| கூடினரீதி | - கூடியது போன்று |
| மனஸு | - மனது |
| ரஞ்ஜில்ல | - ஆனந்தப்படும் வகையில் |
| ஸுரஸதுலு | - தேவமங்கையர்கள் |
| அணிமாதுலு | - அணிமா முதலான சித்திகள் |
| கொலுவ | - சேவிக்க |
| வெயி வன்னெ | - ஒளியுடன் விளங்கும் |
| கனக | - தங்கக் |
| சலாகனு | - கொடியை |
| கேரு | - மிஞ்சும் |
| சீதாகாந்ததோனு | - ஒளியுடன் திகழும் சீதையோடு |
| த்யாகராஜனுதுடு | - தியாகராசனால் வணங்கப்படுபவனே |

பொழிப்புரை

தியாகராசனால் வணங்கபடுபவனான கோதண்ட பாணியாகிய இராமன் கொலுவீற்றிருக்கின்றான். பழவினைகள் அனைத்தும் அழிந்துபோக அவனைக் காண்போம் வாருங்கள். சந்திரன் ரோகிணியுடன் கூடியது போன்று கோதண்டபாணி ஒளியுடன் விளங்குகின்றான் அன்றோ! மனம் ஆனந்தப்படும் வகையில், தேவமங்கையர்களும் அணிமா முதலான சித்திகளும் சேவிக்க ஒளியுடன் விளங்கும் பொற்கொடியொத்த சீதாப்பிராட்டியுடன் கோதண்டபாணி கொலுவீற்றிருப்பதைக் காண்பதற்கு வாருங்கள்.

* * *

# 28. தோடி$^{1}$ - ஆதி$^{1}$

**பல்லவி**

*கோடிநது$^{3}$லு த$^{4}$னுஷ் கோடிலோ னு$^{1}$ண்ட$^{1}$க$^{1}$*
*ஏடிகி திரிகே$^{3}$வே? ஓ மனஸா!* "கோ".

**அனுபல்லவி**

*ஸூடிக$^{3}$, ச்யாமஸுந்த$^{3}$ரமூர்தினி*
*மாடிமாடிகி கூசே மஹாராஜுலகு.* "கோ".

**சரணம்**

*க$^{3}$ங்க$^{3}$ நூபுரம்பு$^{1}$னனு ஜனிஞ்செனு;*
*ரங்க$^{3}$னி க$^{3}$னி காவேரி ராஜில்லெனு;*
*பொங்கு$^{3}$சு ஸ்ரீரகு$^{4}$நாது$^{4}$னி ப்ரேமதோ*
*பொகடு$^{3}$ த்யாக$^{3}$ராஜு மனவி வினவே* "கோ"

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஓ மனஸா | - | ஓ மனமே! |
| கோடி நதுலு | - | கோடி நதிகள் |
| தனுஷ்கோடிலோ | - | தனுஷ்கோடியில் |
| உண்டக | - | இருக்கும்பொழுது |
| ஏடிகி | - | எதற்குத் |
| திரிகேவே | - | திரியவேண்டும்? |
| ஸூடிக | - | நேராக |
| ச்யாமஸுந்தரமூர்தினி | - | மேகவண்ண சுந்தரமூர்த்தியை |
| மாடிமாடிகி | - | அடிக்கடி |
| கூசே | - | தரிசிக்கும் |
| மஹாராஜுலகு | - | மகான்களுக்கு |
| கங்க | - | கங்கைநதி |
| நூபுரம்புனனு | - | திருவடியிலிருந்து |
| ஜனிஞ்செனு | - | தோன்றியது |
| ரங்கனி | - | ஸ்ரீரங்கநாதனைக் |

கனி - கண்டு
காவேரி - காவேரி நதி
பெங்குக - பொங்கி ஓடி
ராஜில்லெனு - விளங்கியது;
ஸ்ரீரகுநாதுனி - ஸ்ரீரகுநாதனை
ப்ரேமதோ - அன்புடன்
பொங்குசு - உற்சாகத்தோடு
பொகடு - புகழும்
த்யாகராஜ - தியாகராசனின்
மனவி - விண்ணப்பதைக்
வினவே - கேட்பாயாக!

## பொழிப்புரை

ஓ மனமே! கோடி நதிகளும் தனுஷ்கோடியில் உள்ளபொழுது எதற்கு வீணே திரியவேண்டும்? மேகவண்ண அழகு தெய்வத்தை நேராக அடிக்கடி காணுகின்ற மகான்களுக்கு தனுஷ்கோடி இருக்கும் பொழுது கோடி நதிகள் எதற்கு? கங்கை நதி திருமாலின் நூபுரத்திலிருந்து தோன்றியது. காவேரி நதி ஸ்ரீரங்கநாதனைக் கண்டு பொங்கி வழிந்தோடிற்று. மங்களகரமான இரகுநாதனாகிய இராமனைப் பக்திப் பெருக்குடன் புகழும் இத்தியாகராசனின் விண்ணப்பத்தை ஓ! மனமே கேட்பாயாக! தனுஷ் கோடியிலேயே எல்லா நதிகளும் இருக்கும்பொழுது மனதே நீ ஏன் புண்ணிய நீராட நாடு அலைய வேண்டும்?



# 29. ரேவகு3ப்தி - தே3சாதி3

**பல்லவி**

*க்3ரஹப3லமேமி ஸ்ரீ ராமானுக்3ரஹ ப3லமே ப3லமு "க்3ர'*

**அனுபல்லவி**

*க்3ரஹப3லமேமி தேஜோமய வி*
*க்3ரஹமுனு த்4யானிஞ்சே வாரிகி நவ "க்3ர'*

**சரணம்**

*க்3ரஹ பீட3ல பஞ்சபாபமுல நா க்3ரஹமுலு*
*காமாதி3 ரிபுல நிக்3ரஹமு ஸேயு ஹரினி ப4ஜிஞ்சே*
*த்யாக3ராஜுனிகி ரஸிகாக்3ரேஸருலகு "க்3ர'*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| க்3ரஹப3லமேமி | - | கிரக பலன் என்ன? |
| ஸ்ரீராம+அனுக்ரஹ | - | ஸ்ரீராமனின் அருள் |
| பலமே பலமு | - | வலிமையே வலிமை |
| க்ரஹபலமு+ஏமி | - | கிரகங்களின் வலிமை எம்மாத்திரம்? |
| தேஜோமய | - | ஒளிமயமான |
| விக்ரஹமுனு | - | திருவுருவத்தை |
| த்யானிஞ்சே வாரிகி | - | தியானித்துக் கொண்டு இருப்பவர்களுக்கு |
| நவ (க்ரஹபலமேமி) | - | நவகிரகங்களின் பலன் எம்மாதிரம்? |
| க்ரஹபீடல | - | கிரகக் கோளாறுகளால் உண்டாகும் தீயபலன்கள் |
| பஞ்ச பாபமுலனு | - | ஐந்து வகைப்பாவங்கள் |
| ஆக்ரஹமுலு கல | - | அகந்தையுள்ள |

| | | |
|---|---|---|
| காமாதி ரிபுல | - | காமம் முதலான தீக்குணங்கள் |
| நிக்ரஹமுஸேயு | - | ஒழியச் செய்யும் |
| ஹரினி | - | ஹரியைத் |
| பஜிஞ்செ | - | துதிக்கும் |
| த்யாகராஜுனிகி | - | தியாகராசனுக்கு |
| ரஸிக+ஆக்ரேஸருலகு | - | சங்கீதத்தில் மூழ்கும் பக்தர்களுக்கு |

*பொழிப்புரை*

நவக்கிரகங்களின் வலிமை எம்மாத்திரம்? ஸ்ரீராமனின் வலிமையே வலிமையாகும். ஒளிமயமான இராமனின் திருவுருவத்தைத் தியானித்துக் கொண்டிருப்பவர்களுக்கு நவகிரகங்களின் வலிமை எம்மாத்திரம்? கிரகக் கோளாறுகளால் உண்டாகும் தீய பலன்களையும், ஐவகைப் பாவகாரியங்களையும், அகந்தையுள்ள காமம் முதலான தீக்குணங்களையும் போக்கி ஒழியச் செய்யும் இராமனைத் துதிக்கும் தியாகராசனுக்கும் ஏனைய பக்தர்களுக்கும் நவக்கிரகங்களின் விளைவு எம்மாத்திரம்?



## 30. சா²யாதரங்கிணி - ஆதி¹

### பல்லவி

க்ருப ஜூசுடகு வேளரா, ராம! "க்ருப"

### அனுபல்லவி

அபராத⁴முல னோர்வ வசமா
யனபோ³கவே; ஸரிவாரலலோ "க்ருப"

### சரணம்

பராமார்த⁴மேன மார்க³மெருக³ரு;
ப்ரபுவுலெல்ல நீச ஸேவகுலுரா;
பரலோக ப⁴ய மெந்த க³ானரு;
வரத்யாக³ராஜ ஹ்ருத்ஸத³ன "க்ருப"..

### பதவுரை

ராம - ஓ இராமா!
க்ருப - அருள்
ஜூசுடகு - செய்வதற்கு.
வேளரா - வேளையடா
ஸரிவாரலலோ - (என்னை) காத்தவர்
களுக்கிடையில்
அபராதமுலனு - குற்றங்களைப்
ஓர்வ - பொறுத்துக்கொள்ள
வசமா - முடியுமா?
அனபோகவே - என்று சொல்லாதே.
ப்ரபுவுலு+எல்ல - மன்னர்கள் எல்லாம்
நீச ஸேவகுலுரா - கீழான செயல்கள்
செய்பவர்கள்
பரமார்தமு+அவு - பேரின்பப்பேறு அடைய
மார்கமு - பாதை.

| | | |
|---|---|---|
| எருகரு | - | தெரிந்து கொள்ளமாட்டார் |
| பரலோக | - | மோட்ச உலகின் |
| பயமு | - | அச்சம் |
| எந்த | - | எதையும் |
| கானரு | - | காணமாட்டார்கள், |
| வரத்யாகராஜ | - | தியாகராஜனின் |
| ஹ்ருத் ஸதன | - | இதயத்தில் குடியிருப்பவனே! |

## பொழிப்புரை

ஓ இராமா! எனக்கு நீ அருள் புரிவதற்கு உகந்த பொழுது இது. என்னைப் போன்றவர்களுக்கிடையில், "உன் பிழைகளைப் பொறுத்துக்கொள்ள என்னால் முடியுமா?" என்று கூறிவிடாதே! மன்னர்கள் எல்லோரும் கீழான செயலைச் செய்பவர்கள்; மேலான பேரின்பப் பேற்றிற்கு வழியறியாதவர்கள், மோட்ச உலகொன்று உண்டு என்ற அச்சமெதையும் அறியமாட்டார்கள். சிறந்த தியாகராஜனின் மனத்தில் குடிகொண்டிருப்பவனே இராமா! என்னிடத்தில் அருள் புரிவதற்கு உகந்தபொழுது இது.

# 31. தே3வகா3ந்தா4ரி - ஆதி3

**பல்லவி**

*க்ஷீரஸாக3ர சயன! நன்னு*
*சிந்தல பெட்டவலெனா? ராம!* "க்ஷீ"..

**அனுபல்லவி**

*வாரண ராஜுனு ப்3ரோவனு வேக3மெ*
*வச்சினதி3 வின்னானுரா ராம* "க்ஷீ"..

**சரணம்**

*நாரீமணிகி சீரலிச்சினதி3 - நாடே நே வின்னானு;*
*தீ4ருடை3ன ராமதா3ஸுனி பந்த4மு-தீ3ர்ச்சினதி வின்னானுரா*
*நீராஜாக்ஷிகை நீரதி4 தா3டின - நீ கீர்த்தினி வின்னானுரா*
*தாரக நாம! த்யாக3ராஜநுத!-த3யதோ நேலுகோரா;ராம!*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ராம! | - | ஓ இராமா |
| க்ஷீரஸாகரசயந! | - | பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவனே! |
| நன்னு | - | என்னைத் |
| சிந்தலன் | - | துன்பங்களில் |
| பெட்டவலெனா | - | மூழ்கவிடலாமோ? |
| வாரண ராஜுனு | - | (யானை அரசனை) கஜேந்திரனைக் |
| ப்ரோவனு | - | காத்தருள |
| வேகமே | - | விரைவாக |
| வச்சினதி | - | வந்தது |
| வின்னானுரா | - | கேட்டுள்ளேன் ஐயா! |
| ராம | - | ஓ இராமா! |
| நாரீமணிகி | - | திரௌபதிக்கு |

| | |
|---|---|
| சீரலு + இச்சிநதி | - சேலைகள் கொடுத்தது |
| நாடே | - அன்றே |
| நே | - நான் |
| வின்னானுரா | - கேட்டுள்ளேன் ஐயா! |
| தீருடௌ | - தீரனான |
| ராமதாஸுனி | - இராமதாசனின் |
| பந்தமு | - பற்றுகள் |
| தீர்ச்சினதி | - தீர்த்தது |
| வின்னானுரா | - கேட்டுள்ளேன் ஐயனே! |
| நீரஜாக்ஷிகை | - தாமரைக் கண்களைக் கொண்ட சீதைக்காக |
| நீரதி | - கடலைத் |
| தாடின | - கடந்த |
| நீ கீர்த்தி | - உன் புகழ் |
| வின்நானுரா | - கேட்டுள்ளேன் ஐயனே! |
| தாரகநாம | - தாரக மந்திரத்தைத் |
| த்யாகராஜனுத | - துதிக்கும் தியாகராசனை |
| தயதோனு | - இரக்கமுடன் |
| ஏலுகோரா | - ஏற்றுக்கொள் ஐயனே! |
| ராமா | - இராமா! |

பொழிப்புரை

ஓ இராமா! பாற்கடலில் பள்ளிகொண்டுள்ளவனே! என்னைத் துன்பத்தில் மூழ்கடிப்பது முறையா? கஜேந்திரனைக் காக்கவேண்டி நீ விரைந்து வந்ததைக் கேட்டுள்ளேன் ஐயனே! திரௌபதிக்கு ஆடைகள் கொடுத்ததையும் அந்நாளே நான் கேட்டுள்ளேன். பெருமானே! தீரனான இராமதாசனின் தளைகள் தீர்த்ததைக் கேட்டுள்ளேன் ஐயனே! தாமரையொத்த கண்களைக் கொண்ட சீதைக்காக கடலைத் தாண்டிக் கடந்த உன் புகழையும் கேள்வியுற்றுள்ளேன். தாரகமந்திரத்தைத் துதிக்கும் தியாகராசனைத் தயையுடன் ஏற்றுக்கொள் ஐயனே! இராமா! இனியும் என்னைத் துன்பத்தில் மூழ்கடிக்கலாமா?

***

# 32. க2ரஹரப்ரிய - ஆதி3

## பல்லவி

*சக்கனி ராஜமார்க3மு லுண்ட3க3*
*ஸந்து3ல தூ3ரனேலே? ஓ! மனஸா!* "ச".

## அனுபல்லவி

*சிக்கனி பாலு மீகட3 லுண்ட3க*
*சீயனு கங்கா3ஸாக3ர மேல?* "ச".

## சரணம்

*கண்டிகி ஸுந்த3ரதரமகு3 ரூபமே;மு*
*க்கண்டி நோட செலகெ3டு3 நாமமே! த்யாக3ரா*
*ஜின்டனே நேலகொன்னதி3 தை3வமே, யிடு3*
*வண்டி ஸ்ரீஸாகேதராமுனி ப4க்தியனு* "ச"..

## பதவுரை

| | | |
|---|---|---|
| ஓ மனஸா | - | ஓ நெஞ்சே |
| சக்கனி | - | அழகிய |
| ராஜமார்கமுலு | - | இராஜ பாதைகள் |
| உண்டக | - | இருக்கின்ற பொழுது |
| ஸந்துல | - | சந்துகளில் |
| தூரனு+ஏலே | - | நுழைவானேன். |
| சிக்கனி | - | சிறந்த |
| பாலு | - | பால் |
| மீகடலு | - | பாலாடை |
| உண்டக | - | இருக்கின்றபொழுது |
| சீயனு | - | வெறுக்கத்தக்க |
| கங்கா ஸாகரமு | - | கள் |
| ஏல | - | எதற்கு |
| கண்டிகி | - | கண்ணிற்கு |

| | | |
|---|---|---|
| ஸௌந்தரதரமு+அகு | - | அழகாக விளங்குகின்ற |
| ரூபமே | - | வடிவம்தான் |
| முக்கண்டிகி | - | சிவனின் (முக்கண்ணனின்) |
| நோட | - | வாயில் |
| செலகே | - | உச்சரிக்கப்படும் |
| நாமமே | - | திருப்பெயர்தான் |
| த்யாகராஜ | - | தியாகராசனின் |
| இண்டனே | - | இல்லத்திலே |
| பாக | - | அழகாக |
| நேலகொன்னதி | - | அமர்ந்திருக்கும் |
| தைவமே | - | கடவுள்தான் |
| இடுவண்டி | - | இதுபோல் |
| ஸாகேதராமுனி | - | அயோத்தியா இராமனின் |
| பக்தி+அனே | - | பக்தியெனும் |

பொழிப்புரை

ஓ நெஞ்சே! அழகிய இராசபாதைகள் இருக்கின்ற பொழுது ஒடுக்கமான சந்துகளில் நுழைவானேன்? சிறந்த பாலும், பாலாடையும் உள்ளபொழுது சீயென வெறுக் கத்தக்க கள்ளை விரும்புவானேன். கண்களுக்கு இன்பத்தைக் கொடுக்கின்ற அழகிய தோற்றமும்; சிவபெருமானின் நாவில் விளங்குகின்ற திருப்பெயரையும் கொண்டு விளங்கும் ஆதி தெய்வமே! தியாகராசனின் இல்லத்தையே அழகிய இருப்பிடமாய் என்றுமுடைய அயோத்திராமன் மீதான பக்தியெனும் (இராசபாதைகள் இருக்கின்ற பொழுது நெஞ்சே! ஒடுக்கமான சந்துகளில் நுழைவானேன்?)



# 33. மார்க$^{3}$ ஹிந்தோ$^{3}$ளம் - தே$^{3}$சாதி$^{3}$

**பல்லவி**

*சலமேலரா? ஸாகேத ராம!* "ச".

**அநுபல்லவி**

*வலசி பக்திமார்க$^{3}$முதோனு நின்னு*
*வர்ணிஞ்சுசுன்ன நாதோ* "ச".

**சரணம்**

*எந்து$^{3}$போது$^{3}$ நே நேமி சேயுது$^{3}$னு?*
*எச்சோட நே மொர பெ$^{3}$ட்டுது$^{3}$னு?*
*த$^{3}$ந்த$^{3}$னலதோ ப்$^{3}$ரொத்$^{3}$து போவலெனா?*
*தாள ஜாலரா, த்யாக$^{3}$ராஜ விநுத* "ச".

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஸாகேத ராம | - | அயோத்தி இராமா! |
| சலமு | - | பாராமுகம் |
| ஏலரா | - | எதற்கடா? |
| வலசி | - | காதல்கொண்டு |
| பக்திமார்கமுதோனு | - | பக்தி நெறியில் |
| நின்னு | - | உன்னை |
| வர்ணிஞ்சு சுன்ன | - | வருணித்துக் கொண்டு இருக்கும் |
| நாபை | - | என்மீது (பாராமுகம் ஏனடா?) |
| நே எந்து போதுனு | - | நான் எங்கேசெல்வேன் |
| ஏமி | - | என்ன |
| நே | - | நான் |
| சேயுதுனு | - | செய்வேன் |
| எச்சோட | - | எங்கே |
| நே(னு) | - | நான் |

| | | |
|---|---|---|
| மொரபெட்டுதுனு | - | முறையிடுவேன் |
| தந்தனலதோ | - | வீணே, |
| ப்ரொத்து போவலெனா | - | காலம் கழிவதா? |
| தாளஜாலரா | - | என்னால் (பொறுத்துக் கொள்ள முடியாதய்யா) |
| தியாகராஜவினுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே? |

*பொழிப்புரை*

அயோத்தி இராமா! என்மீது பாராமுகம் எதற்கடா? நான் அன்புடன் உன்னை நேசித்து பக்திநெறியில் வருணித்துப் புகழ்ந்து கொண்டிருக்க, என்மீது உனக்குக் கோபம் ஏன்? எங்கே நான் செல்வேன்? என்ன செய்வேன்? எவ்விடம் சென்று முறையிடுவேன்? தியாகராசனால் துதிக்கப்படுபவனே! காலம் வீணே கழிவதா? இனியும் என்னால் பொறுத்துக் கொள்ள இயலாது. (ஏன் இந்தப் பாராமுகம்).



## 34. ஆரபி[4] - ஆதி[3]

**பல்லவி**

*சால கல்லலாடு[3] கொன்ன*
*ஸௌக்ய மேமிரா* "சா"

**அனுபல்லவி**

*காலமு போ[4]னு மாட நிலுசுனு*
*கல்யாணராம நாதோ* "சா"

**சரணம்**

*தல்லி த[3]ண்ட[3]ரி நேனுண்ட[3]*
*தக்கின ப[3]யமேலயனி*
*பலுமாரு நீ வென்னோ ப[3]ாஸலுசேஸி*
*இலலோ ஸரிவாரலலோ*
*எந்தெந்தோ ப்ரோசுசுண்டி பெத்த[3]தலதோ*
*ப[3]ல்கி மெப்பிஞ்சி த்யாக[3]ராஜுநிதோ* "சா"

**பதவுரை**

| | | |
|---|---|---|
| கல்யாணராம | - | கல்யாண இராமனே |
| சால | - | நிறைய, மிகவும் |
| கல்லலு | - | பொய்கள் |
| ஆடு + கொன்ன | - | சொல்லுவதால் |
| ஸௌக்யமு | - | இன்பம் |
| ஏமிரா | - | என்னடா? |
| காலமு | - | காலம் |
| போனு | - | போகும், கழியும் |
| மாட | - | பேச்சு |
| நிலுசுனு | - | நிற்கும் |
| நாதோ | - | என்னோடு |

| | | |
|---|---|---|
| தல்லி தண்டரி | - | தாய தநதை |
| நேனு உண்ட | - | நான் இருக்க |
| தக்கின | - | மீதி |
| பயமேல | - | பயம் எதற்கடா? |
| அனி | - | என்று |
| பலுமாரு | - | பலமுறை |
| நீவு எந்தோ | - | நீ எத்துணையோ |
| பாஸலு | - | உறுதிமொழிகளைக் |
| சேஸி | - | செய்து |
| இலலோ | - | பூமியில் |
| ஸரிவாரலலோ | - | என்போன்றவர்களின் |
| எந்தோ + எந்தோ | - | எவ்வளெவ்வளவோ |
| ப்ரோசுசுண்டி | - | காத்தருளிக் கொண்டிருந்தாய் |
| பெத்தலதோ | - | பெரியவர்களிடம் |
| பல்கி | - | செப்பி |
| மெப்பிஞ்சி | - | புகழச் செய்து |
| தியாகராஜுநிதோ | - | தியாகரசனிடம் |

*பொழிப்புரை*

கல்யாண இராமனே, மிகவும் பொய்கள் உரைப்பதனால் நீ பெறும் இன்பம் என்னடா? வீணே காலம் கழியும். பேச்சு மட்டுமே எஞ்சிநிற்கும். உனக்குத் தாய் தந்தையாக நான் இருக்கையில் அச்சம் எதற்கய்யா? ஏன் என்னிடம் பலமுறை நீ எத்துணையோ உறுதிமொழிகளைக் கூறியும் இப்பூவுலகில் என்னைப் போன்றவர்களை பலமுறைக் காத்தருளிக் கொண்டிருந்தாய் பெரியவர்களிடம் கூறி அவர்களை மகான்களாக மேன்மையடையச் செய்து வந்த நீ இத்தியாகராசனிடம் மிகவும் பொய்கள் உரைப்பதனால் பெறும் இன்பம் என்ன?.

***

## 35. அடா2ணா - ஆதி1

**பல்லவி**

*செடெ3டு3 பு3த்4தி4 மானுரா* — *செ..*

**அனுபல்லவி**

*இடே3டு3 பாத்ரமெவரோ ஜூ3டரா* — *செ..*

**சரணம்**

*பூ4வாஸிகி த3கு3 ப2லமு கல்கு3னனி*
*பு3து4லு பல்க வினலேதா3 மனஸா*
*ஸ்ரீ வாஸுதே3வ ஸர்வமனுசுனு*
*சிந்திஞ்சர; தியாக3ராஜ வினுதுனி* — *செ..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மனஸா | - | ஓ! மனமே |
| செடெடு புத்தி | - | கெடும் புத்தியை |
| மானுரா | - | விட்டுவிடு |
| இடேடு பாத்ரமு | - | தக்க பாத்திரம் |
| எவரோ | - | யாரோ |
| சூடரா | - | கண்டுகொள் |
| பூவாஸிகி | - | இப்புவியில் பிறந்தவருக்கு |
| தகு பலமு | - | தகுந்த பலன் |
| கல்குனு+அனி | - | கிடைக்கும் என்று |
| புதுலு | - | அறிஞர்கள் |
| பல்க | - | கூறியதை |
| வினலேதா | - | கேட்கவில்லையா? |
| ஸ்ரீ வாஸுதேவஸர்வமு | - | மங்களகரமான வாசுதேவனே அனைத்தும் |
| அனுசுனு | - | என்று எண்ணி |

சிந்திஞ்சரா - சிந்தனை செய்க
த்யாகராஜ விநுதுனி - தியாகராசனால் போற்றித்துதிக்கப் படுபவனே

**பொழிப்புரை**

ஓ மனமே!. நீ கெடுமதியை விட்டுவிடு. நீடித்து நிலைத்து பயனளிக்கத்தக்க பாத்திரம் (கடவுள்) எவரென்பதை அறிந்து கொள்க. இப்புவியில் வந்து வாழ்பவர்களுக்கு தகுந்த பயன் (வினைப்பயன்) கிடைக்கும் என்று அறிஞர் பெருமக்கள் கூறியதைக் கேட்டதில்லையோ? தியாகராசனால் போற்றித் துதிக்கப்படும் மங்களகரமான வாசுதேவனே! அனைத்தும் இராமனே என்றெண்ணி சிந்தனை செய்திடுக மனமே!

***

## 36. ரீதிகெ$^{3}$ளள - தே$^{3}$சாதி$^{3}$

**பல்லவி**

*சேரராவதே$^{3}$மிரா! ராமய்ய* சே..

**அனுபல்லவி**

*மேரகா$^{3}$து$^{3}$ரா இக, மஹா - மேருதீ$^{4}$ர ஸ்ரீகர* சே..

***சரணம்***

*தல்லித$^{3}$ண்ட்ரிலேனி பா$^{3}$ல தன நாது$^{2}$ கோ$^{3}$ரு ரீதி*
*பலுமாறு வேடு$^{3}$கொண்டே பாலிஞ்சராதா$^{3}$*
*வலசுசு நேனு நீது$^{3}$ வத$^{3}$நாரவிந்த$^{3}$முனு*
*தலசி கரக$^{3}$க$^{3}$ ஜூசி தியாக$^{3}$ராஜஸன்னுத* சே..

| | |
|---|---|
| ராமய்ய | - இராமய்யனே |
| சேர ராவு | - (நீ) சேரவராதது |
| அதி+ஏமிரா | - அது ஏன் ஐயா |
| இக | - இனிமேல் |
| மேரகாதுரா | - முறையல்ல ஐயனே |
| மஹாமேருதீர | - மகா மேரு மலையொத்த தீரனே |
| ஸ்ரீகர | - திருநிறைந்தவனே |
| தல்லி | - தாய் |
| தண்ட்ரி | - தந்தை |
| லேனி | - இல்லாத |
| பால | - பெண், மடந்தை |
| தன | - தனது |
| நாது | - தலைவனை, கணவனை |
| கோருரீதி | - விரும்பி நிற்பதைப் போல் |
| பலுமாறு | - பலமுறை |
| வேடு கொண்டே | - வேண்டிக் கொண்டால் |
| பாலிஞ்சராதா | - காத்தருளக்கூடாதா? |
| வலசுசு | - விருப்பமிகுதியால் |
| நேனு | - நான் |
| நீது | - உனது |
| வதன + அரவிந்தமுனு | - முகத்தாமரையை |
| தலசி | - நினைந்து |
| கரகக | - உருகுவதை |
| சூசி | - பார்த்து |
| த்யாகராஜ ஸன்னுத | - தியாகராசனால் துதிக்கப்படுபவனே |

## *பொழிப்புரை*

இராமய்யனே! நீ (என்னைச்) சேர வராதது ஏன்? இனியும் இது முறையல்ல ஐயா! மகா மேரு மலையையொத்த வீரனே! திருநிறையப் பெற்றவனே, தாய்தந்தை இல்லாத பெண்ணொருத்தி தன் தலைவனை விரும்பி நிற்பதைப் போன்று உன்னைப் பலமுறை

வேண்டிக்கொண்டும் என்னைக் காத்து அருள்புரியக் கூடாதா? நான் மையல் கொண்டு உன்னுடைய முகத்தாமரையை நினைந்துருகி ஏங்குவதைப் பார்த்தும் (என்னை) சேர வராததேன்? தியாகராசனால் வணங்கப்படுபவனே!

***

## 37. தோடி$^{3}$ - ஆதி$^{3}$

**பல்லவி**

*சேஸினதெ$^{3}$ல்ல மறசிதிவோ? ஓ ராம ராம!* *சே..*

**அனுபல்லவி**

*ஆஸகொன்னட்டி நன்னலயிஞ்சுடகு முனு* *சே..*

**சரணம்**

*ஆலு நீகைன பக்துராலனுசு நாடு$^{3}$*
*பாலுமாரக ரவிபா$^{3}$லுனி செலிமியு* *சே..*

*ப$^{3}$ாஷதப்பக வி$^{3}$பீஷணுனி கொறகாதி$^{3}$*
*சேஷுடு$^{3}$கு$^{3}$ தம்முனி போஷிஞ்சமனி ராஜு* *சே..*

*ராம! ஸ்ரீத்யாக$^{3}$ராஜ ப்ரேமாவதார! ஸீதா*
*ப$^{3}$ாம மாடலு தெ$^{3}$ல்ப பீ$^{3}$மாஞ்ஜநேய ப்ரஹ்ம* *சே..*

**பதவுரை**

ஓ ராம ராம - ஓ இராமா
சேஸினதி எல்ல - செய்ததெல்லாம்

| | | |
|---|---|---|
| மறசிதிவோ | - | மறந்தனையோ? |
| ஆஸகொன்னட்டி | - | அன்பு கொண்டிருக்கும் |
| நன்னு | - | என்னை |
| அலயிஞ்சுடகு | - | துன்பத்திற்குள்ளாக்குவதற்கு |
| முனு | - | முன்பு |
| ஆலு | - | மனைவி (*சீதை*) |
| நீகு+அயின | - | உனக்கும் |
| பக்துராலு+அனுசு | - | பக்தியுள்ளவள் என்று |
| நாடு | - | அந்தநாள் |
| பாலு மாலக | - | சுறுசுறுப்புடன் |
| ரவிபாலுனி | - | சுக்கிரீவனுடன் |
| செலிமியு | - | நட்பு கொண்டு |
| பாஷதப்பக | - | வாக்குதவறாமல் |
| விபீஷணுனி கொரகு | - | விபிடணனுக்காக |
| ஆதிசேஷுடகு | - | ஆதிஷேடனாகிய |
| தம்முனி | - | தம்பியை |
| போஷிஞ்சமனி | - | காப்பாற்று என்று |
| ராஜு | - | அரசனாக |
| ராம | - | இராமனே |
| ஸ்ரீத்யாகராஜ | - | *சீர்மிகு* தியாகராசனின் |
| ப்ரேம+அவதார | - | விருப்பமுள்ள உருவினனே |
| ஸீதாபாம | - | *சீ*தாதேவியாரின் |
| மாடலு தெல்ப | - | பேச்சை (செய்தியை) தெரிவித்து |
| ஆஞ்ஜனேய | - | அனுமனுக்கு |
| ப்ரஹ்ம | - | பிரம்மா |

*பொழிப்புரை*

ஓ இராமராம! நீ செய்த செயல்களை எல்லாம் மறந்தனையோ! உன் மீது அன்பு கொண்டுள்ள என்னைத் துன்பத்திற்கு உள்ளாக்குவதற்கு முன்பு நீ செய்தவை அனைத்தும் மறந்துவிட்டாயோ? உன் மனைவியான *சீ*தை, உனக்கு உற்றவள் என்றோ அன்றி உன் மீது பக்தியுள்ளவள் என்றோ அந்தநாள் சோம்பலின்றி விரைந்து நீ சுக்கிரீவனுடன் நல்லுறவு கொண்டு நீ செய்ததெல்லாம் மறந்தனையோ? கொடுத்த வாக்கு தவறாமல் வீபிஷணனுக்காக ஆதிசேடனின் மறுவுருவான தம்பி

இலக்குவனை அழைத்து காத்தருள் என்று அரசனாக்கி நீ புரிந்த செயல்கள் அனைத்தும் மறந்துவிட்டாயோ? ஓ இராமனே சீர்மிகு தியாகராசனின் விருப்பமுள்ள உருவினனே! சீதா தேவியின் மொழிகளை (தூது சென்றுவந்து) உனக்குத் தெரிவித்த ஆஞ்சநேயனுக்கு பட்டமளித்து நீ புரிந்த செயல்களை எல்லாம் என்னைத் துன்பத்திற்குள்ளாக்கவே மறந்தாயோ?

***

## 38. சுத்த[3]பங்கா[3]ள - ரூபகம்

**பல்லவி**

*தப்பகனே வச்சுனா*
*தனுவுகு லம்பட நீ க்ருப* த..

**அனுபல்லவி**

*மெப்புலகை கொப்புலு கல*
*மேடி ஜனுல ஜ[3]சி ப[4]ஜன* த..

**சரணம்**

*ரூகலகை பைகி மன்சி-கோகலகை யாஹாரமுனகு*
*நூகலகை த்[4]யானிஞ்சிதி - த்யாக[3]ராஜ நுதுனி ப[4]ஜன* த..

**பதவுரை**

நீ க்ருப - உனது கிருபை (உன் அருள்)
தப்பகனே - இல்லாமல் போனால்
தனுவுகு - என் உடலில்
லம்பட - துன்பங்கள் (நோவுகள்)

| | | |
|---|---|---|
| வச்சுனா? | - | வருமா? |
| மெப்புலகை | - | புகழ்ச்சி விரும்பி (சிறப்புறவிளங்க) |
| கொப்புலுகல | - | தலைப்பாகை அணிந்துள்ள |
| மேடிஜனுலஜூசி | - | மேட்டுக்குடிமக்களை நோக்கி |
| பஜன | - | பஜனை செய்தல் |
| ரூகலகை | - | பணத்தை விரும்பி |
| பைகி மஞ்சி கோகலகை | - | அணிந்து கொள்ளும் நல்ல ஆடைக்காக |
| ஆஹாரமுனகு | - | உணவிற்காக |
| நூகலகை | - | தானியங்களுக்காக |
| த்யானிஞ்சிதி | - | வழிபட்டேன் |
| த்யாகராஜநுதுனி பஜன | - | தியாகராசனால் துதிக்கப்பட்டவனின் வழிபாடு |

## பொழிப்புரை

ஓ ராமா! உன் அருள் கிடைக்காமல் போனால் எனது உடம்பில் நோவுகள் உண்டாகும். புகழ்ச்சியை விரும்பி தலைப்பாகை அணிந்து செல்வாக்குடன் விளங்கும் மேட்டுக்குடி மக்களை நோக்கி உனது பஜனையை மறந்தால், என் உடம்பில் துன்பங்கள் வந்தடையும். பணத்திற்காகவும், நல்ல ஆடைகளுக்காகவும், உணவிற்காகவும், தானியங்களுக்காகவும் உன்னை தியானித்தேன் (உனதருள் இழந்தேன்) தியாகராசனால் துதிக்கப்பட்டவனின் பஜனை இல்லாது போனால் என் உடம்பில் துன்பங்கள் உண்டாகும்.



## 39. ஸாவேரி - தே$^3$சாதி$^3$

**பல்லவி**

*த$^3$ரித$^3$ாபுலேக வேடி$^3$தே - த$^3$ய ராதே$^3$மோ ஸ்ரீராம த..*

**அநுபல்லவி**

*கரி த$^4$னமுலுகலிகி$^3$ன - கருணிஞ்சி ப்$^3$ரோதுவேமோ த..*

**சரணம்**

*அலனாடு$^3$ நிர்ஜரவைரி பா*
*லுனி ஜூசி ப்ரோசிதிவி க$^3$ானி*
*வலசி ப$^3$தமுல நம்மின*
*வரமீய்ய தே$^3$ாசுனா? த்யாக$^3$ராஜு த..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஸ்ரீராம | - | ஸ்ரீ இராமனே |
| வேடிதே | - | வேண்டினால் |
| தயராதேமோ | - | கருணை கிடைக்காதோ என்னவோ? |
| தரிதாபுலேக | - | வேறு ஒரு கதியும் இல்லாது |
| கல்கிதே | - | (ஏற்பட்டால்) இருந்தால் |
| கரி தனமுலு | - | யானை, செல்வங்கள் (இருந்தால்) |
| கருளின்சி | - | இரக்கம் காட்டி |
| ப்ரோதுவேமோ | - | காப்பாயோ என்னவோ? |
| அலநாடு | - | அந்நாள் |
| நிர்ஜரவைரி | - | தேவர்களின் பகைவன் (இரணியன்) |
| பாலுன் | - | மகனை (பிரகலாதன்) |
| ஜூசி | - | பார்த்து |
| ப்ரோசிதிவிகானி | - | காப்பாற்றி அருளினாயே |
| வலசி | - | அன்புடன் நேசித்து |

| | | |
|---|---|---|
| பதமுல | - | திருவடிகள் |
| நம்மிதே | - | நம்பினால் |
| வரமு | - | வரம், (கொடுக்க) |
| தோசுனா | - | தோன்றுமா |
| த்யாகராஜு | - | (யார் உதவியில்லாத) தியாகராசனுக்கு |

## பொழிப்புரை

ஸ்ரீ இராமா! எவரிடத்தும் தஞ்சம் புக இயலாமல் (வேறு ஒரு வழியுமின்றி) உன்னிடம் வந்து வேண்டிக் கொண்டால் உன் அருள் கிடைக்காது போலிருக்கிறதே? யானை, செல்வங்கள் முதலியன இருக்கப் பெற்றால் இரக்கம்காட்டி காப்பாற்றுவாயோ என்னவோ? அந்த நாள் தேவர்களின் பகைவனான இரணியனின் மகன் பிரகலாதனைக் கண்ணுற்றுக் காத்தருளினாய்!. அன்புடன் நேசித்து உனது திருவடிகளே சரண் என நம்பினால் எனக்கு அருள்புரிய உனக்குத் தோன்றாதோ? யார் உதவியும் இல்லாத இத்தியாகரசன் மீது இரக்கம்காட்ட மாட்டாயோ?



## 40. தோடி$^{3}$ - தே$^{3}$சாதி$^{3}$

**பல்லவி**

*தா$^{3}$சரதீ$^{4}$ நீ ருணமு தீ$^{3}$ர்ப நா*
*தரமா? பரமபாவன நாம!*

*தா..*

**அனுபல்லவி**

*ஆசதீ$^{3}$ர தூ$^{3}$ர தே$^{3}$சமுலனு ப்ர*
*காசிம்ப ஜேஸின ரஸிகசிரோமணி*

*தா..*

**சரணம்**

*ப$^{4}$க்திலேனி கவிஜால வரேண்யுலு*
*பா$^{4}$வ மெறுகலேரனி கலிலோ ஜனி*
*ப$^{4}$க்தி முக்தி கல்கு$^{3}$னனி கீர்த்தனமுல*
*போ$^{3}$தி$^{4}$ஞ்சின த்யாக$^{3}$ராஜ கரார்ச்சித*

*தா..*

**பொழிப்புரை**

| | |
|---|---|
| தாசரதி | - தசரத குமாரனே |
| நீ ருணமு | - உன் கடன் |
| தீர்ப்ப | - அடைக்க |
| நா தரமா? | - என்னால் முடியுமா? |
| பரம பாவன நாம | - பரம்பொருள் என்றும் திருப்பெயருடையவனே |
| ஆசதீர | - விருப்பப்படி |
| தூர தேசமுலுலனு | - தூரத்து நாடுகளில் |
| ப்ரகாசிம்ப ஜேஸின | - பிரகாசிக்கும்படி செய்த |
| ரசிக சிரோமணி | - இரசிகருள் மாணிக்கமே |
| பக்திலேனி | - பக்தியில்லாத |
| கவிஜால வரேண்யுலு | - கவிச்சிறப்புமிக்க மேலானவர்கள் |
| பாவ மு | - மூலப்பொருள் |

| | | |
|---|---|---|
| எறுகலேரு+அனி | - | அறியமாட்டார்கள் என்று |
| கலிலோ | - | கலிகாலத்தில் |
| ஜனி | - | வந்து |
| பக்தி முக்தி | - | இவ்வுலக, மேலுலக பதவிகள் |
| கல்குனு | - | கொடுக்கும் |
| அனி | - | என்று |
| கீர்தனமுல | - | கீர்த்தனங்களை |
| போதிஞ்சின | - | கற்றுக்கொடுத்த |
| த்யாகராஜ | - | தியாகராசனின் |
| கர | - | கைகளால் |
| அர்சித | - | அர்ச்சிக்கப்படுபவனே |

## பொழிப்புரை

தசரதனின் குமாரனே! உன் கடனை என்னால் தீர்ப்பதற்கு இயலுமோ? மேலான பரம்பொருள் என்னும் திருப்பெயரை உடையவனே!. ஆசைதீர தொலைதூர நாடுகளிலும் என்னை ஒளிவிளங்கச் செய்த இரசிககுல மாணிக்கமே!. உன் கடனைத் தீர்க்க என்னால் முடியுமா? பக்தியில்லாத தனிச்சிறப்பு மிக்க மேலானவர்கள் மூலப்பொருளை (உட்கருத்தை) அறிய மாட்டார்கள் என்று இக்கலிகாலத்தில் வந்து இவ்வுலக மற்றும் மேலுலகப் பதவிகளைக் கொடுக்ககூடிய கீர்த்தனங்களை எனக்கு போதனை செய்தவனே! இத்தியாகராசனின் கைகளால் அர்ச்சிக்கப்படுபவனே!



# 41. தோடி$^3$ - ஜ$^2$ம்ப

**பல்லவி**

*தா$^3$சுகோவலெனா தா$^3$சரதீ$^1$ நீது$^3$த$^3$ய* — *தா..*

**அநுபல்லவி**

*ஜூசுவாரலலோன சுலகனே நன்னு ஜூசி* — *தா..*

**சரணம்**

*கனிகரமு காந்தபை க$^3$லிகி$^3$ முத்$^3$தி$^3$டு$^3$ வேள*
*ஜனகஜ நாமாட ஸமயமனி பல்கின* *(தா)*
*க$^3$ரகி$^3$ பத$^3$முல வ்ரால க$^3$னி கருணஸேயுவேள*
*ப்$^3$ரதுடெ$^3$ந்தோ நன்னு பக்துட$^3$னி பல்கின* *(தா)*
*நேமமுன$^3$ பரிசர்ய நேர்புன பொகடு$^3$வேள*
*ஸௌமித்ரி த்யாக$^3$ராஜுனி மாட பல்கிதே* *(தா)*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| தாசரதி | - | தசரதனின் மைந்தனே |
| நீது | - | உனது |
| தய | - | கருணையை |
| தாசுகோவலெனா | - | மறைத்து வைத்துக்கொள்ள வேண்டுமா? |
| சூசு | - | பார்க்கும் |
| வாரலலோன | - | அவர்களில் |
| கலகனே | - | இழிவாக |
| நனு | - | என்னை |
| சூசி | - | பார்த்து |
| கனிகரமு | - | அன்பு |
| காந்தபை | - | சீதையின்மேல் |

| | | |
|---|---|---|
| கலகி | - | வைத்து |
| முத்து + இடு வேள | - | முத்தம் கொடுக்கும் வேளை. |
| ஜனகஜ | - | சீதாதேவி |
| நாமாட | - | எனது விஷயத்தை |
| ஸமயமு + அனி | - | தகுந்த பொழுது (என்று) |
| பல்கின | - | சொன்னால் |
| கரகி | - | (மனங்) கசிந்து |
| பதமுல | - | திருவடிகளில் |
| வ்ராலன் | - | பணிந்த பொழுது |
| கனி | - | கண்டு |
| கருண | - | அன்பு (அருள்) |
| ஸேயுவேள | - | செய்யும் பொழுது |
| பரதுடு + எந்தோ | - | பரதன் எவ்வளவோ |
| நன்னு | - | என்னை |
| பக்துடு + அனி | - | பக்தன் (என்று) |
| பல்கின | - | கூறியபொழுது |
| நேமமுன | - | முறையுடன் |
| பரிசர்ய | - | தொண்டு |
| நேர்புன | - | திறமையையும் |
| பொகடுவேள | - | புகழும் போது |
| ஸௌமித்திரி | - | இலக்குவன் |
| த்யாகராஜுனி | - | தியாகராசனுடைய |
| மாட | - | விஷயத்தையும் |
| பல்கிதே | - | சொன்னால் (கூறினால், பகர்ந்தால்) |

*பொழிப்புரை*

தசரதனின் மைந்தனே! என் மீதான உனது கருணையினை மறைத்து வைத்துக்கொள்ள வேண்டுமா? மற்றவர்களுக்கு இடையே என்னை மட்டும் இழிவாகக் காண்பதேன்? சீதாதேவியின் மீது அன்பு பாராட்டி தனியே நீ முத்தம் நல்கும் வேளையில் தக்கபொழுதென என்னை தேவி உன்னிடம் கூறியபொழுதும்; மனங்கசிந்து உனது திருவடிகளில் பரதன் அன்புடன் பணிந்தபொழுது நீ அருள் புரிந்த அவ்வேளையில் என்னை நல்பக்தன் என்று முறையிட்ட பொழுதும்; இலக்குவனின் முறையான தொண்டுள்ளத்தை

திறமையினையும் நீ புகழுகின்ற பொழுதில் இத் தியாகராசனைப்பற்றி உன்னிடம் இலக்குவன் எடுத்துக்கூறிய பொழுதும் மறக்க வேண்டுமா?.

***

## 42. சுத்த4 ஸாவேரி - ஆதி3

**பல்லவி**

*தா3ரினி தெ3லுஸு கொண்டி த்ரிபுரஸுந்*
*த3ரி! நின்னே சரணண்டி* *தா..*

**அநுபல்லவி**

*மருனி ஜனகுடை3ன மா த3சரத2 கு*
*மாருனி ஸோத3ரி! த4யாபரி! மோட்ச* *தா..*

**சரணம்**

*அம்ப! த்ரிஜக3 தீ3ச்வரீ! முக2 ஜித விது*
*பிம்ப! யாதி3புரமுன நெலகொன்ன கன*
*காம்3பரி! நம்மினவாரி கபீ3ஷ்ட வ*
*ரம்பு3 லொஸகு3 தீ3னலோகரக்ஷகி!*
*அம்பு3ஜப3வ புருஹூத ஸநந்த3ன*
*தும்புரு நாரது3 லந்த3ரு நீது3 ப*
*த3ம்பு3னு கோரி ஸதா3 நித்யானன்*
*தா3ம்புதி3லோ நோலலாடு3 சுண்டே3* *தா..*

*மஹதை3ச்வர்ய மொஸகி3 தொலிகர்ம*
*கஹனமுனு கொட்டிப் ப்ரோசுதல்லி!*
*கு3ஹக3ஜமுக2, ஜனனி! யருண பங்கே*
*ருஹ நயனே! யோகி3 ஹ்ருத்ஸத3னே!*
*துஹிநாசல தனயா! நீ சக்கனி*
*மஹிமாதிசயம்பு3ல சேதனு யீ*
*மஹிலோ முனிக3ணமுலு ப்ரக்ருதி வி*
*ரஹிதுலை நித்யானந்து3லைன* தா..

*ரஜித மணி3க3ண பூ4ஷணி! மத3க3ஜ*
*ராஜக3மணி! லோகசங்கரி! த3னுஜ*
*ராஜ குருனி வாஸரஸேவ தன*
*கேஜன்ம ப2லமோ கனுகொ3ண்டினி*
*ஆஜன்மமு பெத்த3லு தம மதி3லோ*
*நீ ஜபமே முக்திமார்க3 மனுகொனி*
*ராஜ மனோஹரி! கௌ3ரி! பராத்பரி!* தா..

பதவுரை

| | | |
|---|---|---|
| த்ரிபுரஸுந்தரி | - | திரிபுரசுந்தரியே |
| நின்னே | - | உன்னையே |
| சரணு + அண்டி | - | சரணம் அடைந்தேன் |
| மாருனி | - | மன்மதனுக்கு |
| ஜனகுடு+அயின | - | தந்தையான |
| மா | - | எங்களது |
| தசரத குமாருனி | - | தசரத மைந்தனான இராமனின் |
| ஸோதரி | - | சகோதரியே |
| தயாபரி | - | தயையுடன் கூடியவளே |
| மோட்ச | - | மோட்சத்தின் |
| தாரினி | - | பாதையை |
| தெலுஸுகொண்டி | - | தெரிந்து கொண்டேன் |
| அம்ப | - | தாயே |
| த்ரிஜகதிஸ்வரி | - | மூவுலகின் அரசியாய் விளங்குபவளே |

| | | |
|---|---|---|
| முகஜிதஸினுத பிம்ப | - | இரத்தின ஒளியையும் வென்ற முகத்தின் அழகுடன் விளங்குபவளே |
| ஆதிபுரமுன | - | ஆதிபுரம் என்றழைக்கப்படும் தலத்தில் |
| நெல கொன்ன | - | நிலைகொண்டுள்ள |
| கனகாம்பரி | - | பொன்னிறமயமானவளே |
| நம்மின வாரிகி | - | நம்பியவர்களுக்கு |
| அபீஷ்ட | - | விரும்புகின்ற |
| வரம்புலு | - | வரங்களை |
| ஒஸகு | - | கொடுக்கும் |
| தீன லோகரட்சகி | - | எளியோரைக் காப்பவளே |
| அம்புஜ பவ | - | தாமரையில் பிறந்தவனான பிரம்மா |
| புருஹூத | - | தேவேந்திரன் |
| சனந்தன,தும்புரு, நாரதுலு | - | சனந்தன முனிவர், தும்புரு, நாரதர் முதலானோர், |
| அந்தரு | - | அனைவரும் |
| நீது | - | உன்னுடைய |
| பதம்புனு | - | திருவடிகளை |
| கோரி | - | விரும்பி |
| ஸதா | - | எப்பொழுதும் |
| நித்ய+ஆனந்த+அம்புதிலோ | - | நித்தியானந்தப் பெருங்கடலில் மகிழ்ச்சிப் பெருவெள்ளத்தில் |
| ஓலலாடு சுண்டே | - | நீந்திக்கொண்டிருக்கையில் |
| மஹத் + ஐச்வர்யமு | - | சிறந்த செல்வங்களை |
| ஒஸகி | - | கொடுத்து |
| தொல்லி | - | பழைய |
| கர்ம | - | வினை |
| கஹனமுனு | - | காட்டை |
| கொட்டி | - | அழித்து |
| ப்ரோசுதல்லி | - | காத்தருள் தாயே |
| மஹிம+அசலதனய | - | இமவானின் குலக்கொடியே |
| நீ | - | உன் |
| சக்கனி | - | சிறப்புடைய |

| | | |
|---|---|---|
| மஹிம | - | பெருமைகளால் |
| அதிசயமுல சேதனு | - | வியக்கத்தக்கவற்றால் |
| ஈ மஹிலோ | - | இப்புவியில் |
| முனி கணமுலு | - | முனிவரின் கூட்டங்கள் |
| ப்ரக்ருதி | - | இயற்கையில் |
| விரஹிதுல | - | பற்றில்லாதவர்களாகி |
| நித்ய+ஆனந்த | - | நிலைத்த பேரின்பங்களோடு |
| ராஜித | - | விளங்கும் |
| மணிகண | - | மணித்திரள்களை |
| பூஷணி | - | அணிந்தவளே |
| மதகஜராக கமன | - | மதயானை நிகர்த்த நடையுடையவளே |
| லோக சங்கரி | - | உலகிற்கு நலங்களை அளிப்பவளே |
| தனுஜ ராஜ குருனி | - | அசுரர்களின் இராஜகுருவான சுக்கிரனின் |
| வாஸர ஸேவ | - | (வெள்ளிக்) கிழமை வழிபாடு |
| தனகு | - | தனக்கு |
| ஏ | - | ஏந்த |
| ஜன்மபலமோ | - | பிறப்பின் பலமோ ? |
| கனுகொண்டினி | - | கண்டுகொண்டேன் |
| ஆஜன்மமு | - | வாழ்க்கை முழுவதும் |
| பெத்தலு | - | பெரியோர்கள் |
| ஸதா | - | எப்போதும். |
| மதிலோ | - | மனதில் |
| நீ ஜபமே | - | உன் ஜபமே |
| முக்தி மார்கமு | - | முக்திக்கு வழி |
| அனுகொனி | - | என அறிந்து |
| ராஜசேகருண்டு + அகு | - | இராசாதி இராசனாகிய |
| ஸ்ரீத்யாகராஜ | - | தியாகராசக் கடவுளின் |
| மனோஹரி | - | உள்ளத்தில் உறைபவளே |
| கௌரி | - | கௌரியே |
| பராத்பரி | - | பராத்பரியே! |

## பொழிப்புரை

திரிபுரசுந்தரியே! தாயே! உன்னையே சரணம் அடைந்தேன். வழியைத் தெரிந்து கொண்டேன். மன்மதனைப் பெற்றவளான எங்களது தசரத மைந்தனின் (இராமச்சந்திரனின்) உடன் பிறந்தவளே! தயையுடன் கூடியவளே! வீடுபேரின்பத்திற்குரிய (மோக்ஷத்தின்) வழியைத் (நெறியை) தெரிந்து கொண்டேன். அம்மா! மூவுலகங்களுக்கும் அரசியாக விளங்குபவளே! இரத்தினங்களை வென்ற முகவொளியுடன் விளங்குகின்றவளே! ஆதிபுரம் என்றழைக்கப்படும் திருவொற்றியூரில் எழுந்தருளியிருக்கும் பொன்னிற மேனியாளே! உன்னையே நம்பியவர்களுக்கு அவர்கள் வேண்டும் வரங்களைக் கொடுப்பவளே! எளியோர்களை காத்தருள்பவளே! பிரம்மன், இந்திரன், சந்திரன், முனிவர், தும்புரு முனிவர், நாரதர் முதலானோர் உனது திருவடிகளையே விரும்பி எப்பொழுதும் நிலைத்த பேரின்பப்பெரு வெள்ளத்தில் நீந்திக் (மிதந்து) கொண்டிருக்கையில் உன்னையே சரணமடைந்தேன். மிகச் சிறந்த செல்வங்களை எல்லாம் கொடுத்து, பழைய வினைகளெனும் காட்டை அழித்துக் காத்தருள் தாயே! முருகப்பெருமானையும் விநாயகப் பெருமானையும் பெற்றவளே! யோகியரின் உள்ளத்துறைபவளே! செந்தாமரைக் கண்களைக் கொண்டவளே! இமவானின் குலக்கொடியே! உனது வியக்கத்தகும் சிறப்புடைய பெருமைகளால் இப்புவியில் முனிவர்பெருமக்கள் இயற்கையின்பப் பற்றில்லாதவர்களாக மாறி என்றும் நிலைக்கும் பேரின்பங்களோடு விளங்கும் நெறியை அறிந்துகொண்டேன். மணிகளால் நிறைந்த ஆபரணங்களை அணிந்தவளே! மதயானை நிகர்த்த நடையுடையவளே! உலகிற்கு நலன்களை அளிப்பவளே! எப்பிறவியின் பலனோ? அசுரர்களின் ராஜகுருவான சுக்கிரருக்கு வெள்ளிக்கிழமையில் உனது வழிபாடு கிடைத்தது. பிறப்பு முதலாக பெரியோர்கள் எப்பொழுதும் மனத்தில் உன் நினைவாகவே இருப்பது வீடுபேற்றிற்குரிய வழியெனக் கொள்வர். பிறையணிந்த இராசாதிராசனான பரமசிவனின் உள்ளத்தில் உறைபவளே கௌரியே! பராத்பரியே !

***

## 43. ஸிந்து4நாமக்ரிய - தே1சாதி1

**பல்லவி**

*தே3வாதி3தே3வ! ஸதா3சிவ!*
*தீ3னநாத2! ஸுதா4கர! த3ஹனநயன!* தே..

**அனுபல்லவி**

*தே3வேச! பிதாமஹ ம்ருக்ய சமா*
*தி3 குணாப4ரண! கௌரீரமண!* தே..

**சரணம்**

*பவசந்த்ர களாத4ர! நீலக4ள!*
*பா4னுகோடி ஸங்காச! ஸ்ரீசநுத!*
*தவ பாத3 ப4க்திம் தே3ஹி தீ3னப3ந்தோ4*
*த4ரஹாஸவத3ன த்யாக3ராஜநுத* தே

**பதவுரை**

| | | |
|---|---|---|
| தேவாதிதேவ | - | தேவர்களுக்கெலாம் தேவனே |
| ஸதாசிவ | - | சிவனே |
| தீனநாத | - | ஆதவன் (ஞாயிறு, சூரியன்) |
| ஸுதாகர | - | சந்திரன் |
| தஹன | - | அக்கினி, நெருப்பு |
| நயன | - | கண்ணாக உடையவனே |
| தேவேச | - | தேவர்களின் தலைவன் விஷ்ணு |
| பிதாமஹ | - | பிரம்மா |
| ம்ருக்ய | - | எட்டாதவன் |
| சமாதி (சம+ஆதி) | - | அமைதிவடிவு |
| குணாபரண | - | குணங்களை ஆபரணங்களாக உடையவன் |
| கௌரீ ரமண | - | பார்வதி தேவியின் தலைவனே |

| | | |
|---|---|---|
| பவ | - | சிறந்த |
| சந்திரகளாதர | - | இறைசூடியவனே |
| நீலகள | - | நீலகண்டனே |
| பானுகோடி ஸங்காச | - | கோடி சூரியர்களின் ஒளியுடன் திகழ்பவனே |
| ஸ்ரீச | - | இலக்குமியின் தலைவனால் (விஷ்ணு) |
| நுத | - | துதிக்கப்பட்ட |
| தவபாத | - | உனது திருவடிகளில் சேரும் |
| பக்திம் தேஹி | - | பக்தியைக்கொடு |
| தீனபன்தோ | - | ஏழைகளுக்குச் சுற்றமானவனே |
| தரஹாஸவதன | - | புன் முகத்தை உடையவனே |
| த்யாகராஜநுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே |

## பொழிப்புரை

தேவர்களுக்கெல்லாம் தேவனே; சதாசிவனே; பகலவன், சந்திரன், சுடர் ஆகிய மூன்றையும் கண்களாகவுடைய முக்கண்ணனே! தேவர்களின் தலைவனும் (விஷ்ணு) பிரம்மாவும் தேடிக்கொள்ள முடியாதபடி அவர்களுக்கு அகப்படாதவனே, சாந்த குணங்களை அணிகலன்களாகக் கொண்டவனே, பார்வதிதேவியின் தலைவனே, பரமசிவனே, பிறையணிந்தவனே, நீலநீறக் கழுத்தை உடையவனே, கோடி சூரியர்களின் ஒளிபெற்றுத் திகழ்பவனே, விஷ்ணுவினால் துதிக்கப்பட்ட உனது திருவடிகளை அடையும் பக்தியைக் கொடு. தீனர்களின் சுற்றமாக விளங்குபவனே, புன்முறுவல் தவழும் முகத்தைக் கொண்டவனே, இத்தியாகராசனால் துதிக்கப்படுபவனே, உன் திருவடியைப் பூஜிக்கும் பக்தியை எனக்கருள்வாய்!

***

## 44. ஸௌராஷ்ட்ரம் - ரூபகம்

**பல்லவி**

*தே$^3$வ! ராம ராம! மஹாதே$^3$வ ராம ரகு$^4$வர* "*தே..*"

**அனுபல்லவி**

ப$^4$ாவஜாரிரூப கே$^2$லபா$^4$வ பா$^4$வனாவ! மஹா "*தே..*"

**சரணம்**

*சங்கர! கருணாகர! நிச்*
*சங்கர!த்$^4$ருதசர! பக்தவ*
*சங்கர! த$^3$னுஜஹர! நிச்*
*சங்க! ரஸிகத்;யாக$^3$ராஜ* "*தே..*"

**பதவுரை**

| | | |
|---|---|---|
| தேவ ராம | - | தேவாதி தேவனே |
| ராம மஹாதேவ | - | மகாதேவனே இராமா |
| ரகுவரா | - | இராகவா |
| பாவஜ+அரி | - | காமனின் பகைவன் (சிவன்) |
| ரூப | - | வடிவானவனே |
| கேல பால | - | நாட்டியத் தோற்றத்தோடு |
| பாவன | - | (கருத்தைப்) புலப்படுத்தி |
| அவ | - | காத்தருளும் |
| சங்கர | - | சங்கரனே |
| கருணாகரா | - | இரக்கச் சிந்தையாளனே |
| அனிசம் | - | எப்பொழுதும் |
| கரத்ருதசர | - | அம்புகளைக் கையினில் ஏந்திக் கொண்டிருப்பவனே |
| பக்தவசங்கர | - | தொண்டர்களின் அடியவனே |
| தனுஜ | - | அரக்கர்களை |

ஹவ - அழிப்பதில்
நிச்சங்க - ஐயம் சிறிதும் கொள்ளாதவனே
ரஸிக - இரசிப்புத்தன்மை உடையவனே
த்யாகராஜ - தியாகராசனே

### பொழிப்புரை

இராமா! தேவாதி தேவனே! மகாதேவனாகிய இராமா! இராகவா! மன்மதனை எரித்த சிவபெருமான் வடிவானவனே! தமது நாட்டியத் தோற்றத்துடன் அபிநயங்களால் கருத்துகளைப் புலப்படுத்திக் காத்தருளும் சங்கரனே! உடன் அருள்புரியும் இரக்க குணமுடையானே! வில்லேந்தியவனே! அடியவர்களின் அடியவனாக விளங்குபவனே, அரக்கர்களை அழிப்பதில் பயம் சிறிதும் இல்லாதவனே, இரசிப்புத்தன்மை உடையானே! தியாகராசதேவனே!

***

## 45. த$^{4}$ன்யாஸி - ஆதி$^{3}$

### பல்லவி

*த்$^{4}$யானமே வரமைன க$^{3}$ங்கா$^{3}$ ஸ்நானமே; மனஸா ராம "த்$^{4}$யா.."*

### அனுபல்லவி

*வானநீட முனுக$^{3}$ முனுக$^{3}$ லோனி*
*வஞ்சனத்$^{3}$ரோஹமனு கர போவுனா? "த்$^{4}$யா.."*

### சரணம்

*பரத$^{4}$ன நாரீமணுலனு தூ$^{3}$றி*
*பரநிந்தல பரஹிம்ஸல மீறி*
*த$^{4}$ரனுவெலயு ஸ்ரீராமுனி கோரி*
*த்யாக$^{3}$ராஜு தெலிஸிகொன்ன ராம "த்$^{4}$யா.."*

## பதவுரை

| | |
|---|---|
| மனஸா | - ஓ மனமே |
| ராம | - இராம |
| த்யானமே | - தியானமே |
| வரமைன | - மேலான |
| கங்கா ஸ்நானமு | - கங்கை முழுக்கு |
| வானநீட | - மழைத் தண்ணீரில் |
| முனுக முனுக | - முங்கி முங்கி |
| லோனி | - உள்ளத்தில் இருக்கும் |
| வஞ்சன | - வஞ்சனை |
| த்ரோஹமு | - துரோகம் |
| அனு | - என்னும் |
| கர | - கறை (கலங்கம்) |
| போவுனா | - போய் விடுமா? |
| பர | - பிறரின் |
| தன | - செல்வம் |
| நாரிமணுலனு | - பெண்களை |
| தூரி | - வெறுத்து (தூரவிலக்கி) |
| பரநிந்தல | - பிறரை நிந்தனை செய்தல் |
| பர ஹிம்ஸல | - பிறரைத் துன்புறுத்துதல் |
| மீறி | - கடந்து |
| தரனு | - பூவுலகில் |
| வெலயு | - விளங்கும் |
| ஸ்ரீராமுனி | - ஸ்ரீ இராமனை |
| கோரி | - வேண்டிய |
| த்யாகராஜு | - தியாகராசன் |
| தெலுஸுகொன்ன | - தெரிந்து கொண்ட |
| ராம | - இராம |

## பொழிப்புரை

ஓ மனமே! இராம தியானமே சிறப்பானது; கங்கையில் மூழ்கி எழுந்ததற்கு ஈடாகும். மழை நீரில் திரும்பத் திரும்ப மூழ்கினால் உள்ளத்தில் உள்ள வஞ்சனை, துரோகம் என்னும் கறைகள்

போய்விடுமா? பிறருடைய செல்வம், பெண்களை தூரவிலக்கி பிறரை நிந்தனை செய்தல் துன்புறுத்துதல் ஆகியவற்றைக் கடந்து இவ்வுலகில் விளங்கும் ஸ்ரீ ராமனை வேண்டி இத் தியாகராஜன் தெரிந்து கொண்ட இராம தியானமே கங்கை முழுக்காகும்.

***

## 46. ரீதிகௌ$^3$ள - ஆதி$^3$

**பல்லவி**

*த்$^3$வைதமு ஸுக$^2$மா அ*
*த்$^3$வைதமு ஸுக$^2$மா* *த்$^3$வை..*

**அனுபல்லவி**

*சைதந்யமா! வினு ஸர்வஸாக்ஷி விஸ்*
*தாரமுகா$^3$னு தெ$^3$லுபுமு நாதோ* *த்$^3$வை*

**சரணம்**

*க$^3$க$^3$னபவன ப$^4$வனாத்$^3$யவனிலோ*
*நக$^3$த$^4$ராஜ சிவேந்த்$^3$ராதி$^3$ ஸுருலலோ*
*ப$^4$கவத் ப$^4$க்த வராக்$^3$ரேஸருலலோ*
*பா$^3$க ரமிஞ்சே த்யாக$^3$ராஜார்சித* *த்$^3$வை*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| சைதந்யமா | - | அறிவு வடிவமானவனே |
| த்வைதமு | - | துவைத சித்தாந்தம் |
| ஸுகமா | - | இன்பமா? (நல்லதா?) |
| அத்வைதமு | - | அத்துவைத சித்தாந்தம் |

| | | |
|---|---|---|
| ஸுகமா | - | இன்பமா? (நல்லதா) |
| வினு | - | கேள் |
| ஸர்வஸாட்சி | - | அனைத்திற்கும் ஆதாரமானவனே |
| விஸ்தாரமுகானு | - | விரிவுபட |
| தெல்புமு | - | தெரியப்படுத்து |
| நாதோ | - | எனக்கு |
| ககன | - | ஆகாயம் |
| பவன | - | காற்று |
| தபன | - | நெருப்பு |
| புவன + ஆதி | - | பூமி முதலிய |
| அவனிலோ | - | உலகங்களில் |
| நகதர | - | திருமால் |
| அஜ | - | பிரம்மன் |
| சிவ | - | சிவபெருமான் |
| இந்திராதி | - | இந்திரன் முதலான |
| ஸுருலலோ | - | தேவர்களில் |
| பகவத்பக்த | - | பகவானுடைய பக்தர்களின் |
| வர + அக்ரேஸருலலோ | - | முதன்மையானவர்களில் |
| பாக | - | நன்கு |
| ரமிஞ்சே | - | களிக்கும் |
| த்யாகராஜார்சித | - | தியாகராசனால் போற்றப்பட்ட தெய்வமே |

## பொழிப்புரை

ஓ! அறிவு வடிவமானவனே! அனைத்திற்கும் ஆதாரமானவனே கேள்! துவைத சித்தாந்தம் நன்றா? அத்துவைதசித்தாந்தம் நன்றா? (எது இன்பம்?) விரிவாக எனக்குத் தெரியப்படுத்து. ஆகாயம், காற்று, நெருப்பு, பூமி, முதலிய உலகங்களிலும், திருமால், பிரம்மா, சிவன், இந்திரன், முதலான தேவர்களும் பகவானின் பக்தர்களில் நன்கு களிக்கும் இத்தியாகராசனால் போற்றப்பட்ட தெய்வமே! த்வைதம் சிறப்பானதா அத்வைத சித்தாந்தம் சிறப்பானதா கூறுக

***

# 47. ஆபே$^4$ரி$^3$ - தே$^3$சாதி$^3$

**பல்லவி**

*நன்னு ப்$^3$ரோவ நீ கிந்த தாமஸமா?*
*நாபை நேரமேமி பல்குமா?* "நன்"..

**அனுபல்லவி**

*சின்னனாடெ$^3$ நீ செலிமி கல்க$^3$கோ$^3$ரி*
*சிந்திம்ப லேதா$^3$? ஸ்ரீராம!* "நன்"..

**சரணம்**

*நிஜத$^3$ாஸ வருலகு$^3$ தம்முலதோ -*
*நீவு ப$^3$ாக$^3$ புட்டக$^3$ லேத$^3$ா?*
*க$^3$ஜராஜ ரட்சக! தனயுலனு*
*கனி பெஞ்சலேதா? த்யாக$^3$ராஜநுத* "நன்"..

**பதவுரை**

ஸ்ரீ ராம - மங்களம் நல்கும் இராமா
நன்னு - என்னைக்
ப்ரோவ - காப்பாற்ற
நீகு - உனக்கு
இந்த - இத்தனை
தாமஸமா - தாமதமா?
நாபை - என்மீது
நேரமு+ஏமி - குற்றம் என்ன?
பல்குமா - தெரிவிப்பாய்
சின்ன நாடெ - சிறுவயதிலேயே
நீசெலிமி - உன் அன்பு
கல்ககோரி - உண்டாகவிரும்பி
சிந்திஞ்சலேதா - எண்ணவில்லையா

| | | |
|---|---|---|
| நிஜ | - | உண்மையான |
| தாஸவருலு+அகு | - | தொண்டர்களான |
| தம்முலதோ | - | தம்பிமார்களுடன் |
| நீவு | - | நீ |
| பாக | - | நன்றாகப் |
| புட்டகலேதா | - | பிறக்கவில்லையா |
| கஜராஜரக்ஷக | - | கஜேந்திரனைக் காத்தவனே! |
| தனயுலனு | - | புதல்வர்களைப் |
| கனி பெஞ்சலேதா | - | பார்த்து வளர்க்கவில்லையா? |
| த்யாகராஜநுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |

## பொழிப்புரை

மங்களம் நல்குகின்ற இராமா! என்னைக்காக்க உனக்கு இத்துனைத் தாமதமேன்? என்னிடத்து நீர் தாமதிக்கத் தக்க குற்றமென்ன சொல்லுக! என் சிறு வயது முதலாக உமது அன்பு உண்டாக விரும்பி நான் உம்மையே எண்ணிக் கொண்டிருக்கவில்லையா? உண்மைத் தொண்டர்களான தம்பியருடன் நீர் நன்றாகப் பிறக்கவில்லையா? புதல்வர்களை நன்கு பார்த்து வளர்க்கவில்லையா? கஜேந்திரனைக் காத்தவனே! இத்தியாகராசனால் துதிக்கப் படுபவனே! என்னைக்காக்க உமக்கேன் இவ்வளவு தாமதம்?.



# 48. கல்யாணவஸந்தம் - ரூபகம்

**பல்லவி**

*நாத$^{3}$ லோலுடை$^{3}$ ப்ரஹ்மா - நந்த$^{3}$ மந்த$^{3}$வே மனஸா நா..*

**அநுபல்லவி**

*ஸ்வாது$^{3}$ ப$^{2}$லப்ர$^{3}$த ஸஹித நா..*

**சரணம்**

*ஹரிஹராத்ம பூ$^{4}$ஸுரபதி*
*சரஜன்ம கணேசாதி$^{3}$*
*வரமௌனு லுபாஸிஞ்சின*
*த$^{4}$ரத்யாக$^{3}$ராஜ வினுத நா..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மனஸா | - | ஓ மனமே!. |
| நாதலோலுடை | - | நாதத்தில் ஈடுபாடு கொண்டு |
| ப்ரஹமானந்தமு | - | பேரின்பத்தை |
| அந்தவே | - | அடைந்துகொள் (பெறுகவே) |
| ஸ்வாது பலப்ரத | - | நற்பலன்களை அளிக்கும் |
| ஸப்தஸ்வர | - | ஏழு சுரங்கள் |
| ராக | - | இராகம் |
| நிசய | - | சேர்க்கையால் |
| ஸஹித | - | கூடியது |
| ஹரி | - | அரி (திருமால்) |
| ஹர | - | அரன் (சிவன்) |
| ஆத்ம | - | அயன் (பிரம்மா) |
| பூஸுரபதி | - | தேவர் தலைவன் (இந்திரன்) |
| சரஜன்ம | - | கார்த்திகேயன் |
| கணேச | - | கணபதி |

| | | |
|---|---|---|
| ஆதி | - | முதலிய |
| வரமௌனு | - | சிறந்த மகா ரிஷிகள் |
| தர | - | இப்புவியில் |
| உபாஸிஞ்சரே | - | உபாசனை செய்தவரே |
| தியாகராஜு | - | தியாகராசனுக்கும் |
| தெலியு | - | தெரியும் |

## பொழிப்புரை

ஓ மனமே!. நாதத்தில் ஈடுபட்டு பேரின்பப்பேற்றை அடைந்து கொள். (இந்நாதம்) நற்பலங்களைக் கொடுக்கும். ஏழு சுரங்கள் சேர்க்கையால் உண்டானது அரி, அரன், அயன் ஆகிய மும்மூர்த்திகளும், இந்திரன், கார்த்திகேயன், கணபதி, முதலிய சிறந்த மகா முனிவர்களும் இப்புவியில் உபாசித்த நாதம் இது. இத்தியாகராசனுக்கும் இது தெரியும். எனவே மனமே! நாதத்தில் ஈடுபாடு கொண்டு பேரின்பத்தை அடைவாயாக!



## 49. பே3கட3 - தே3சாதி3

**பல்லவி**

*நாதோ3பாஸனசே சங்கர*
*நாராயண விது4லு வெலஸிரி; ஓ மனஸா!* நா..

**அநுபல்லவி**

*வே3தோ3த்த4ருலு வே3தா3தீதுலு*
*விச்வமெல்ல நிண்டி3யுண்டேவாரலு* நா..

**சரணம்**

*மந்த்ராத்முலு யந்த்ர தந்த்ராத்முலு மறி*
*மந்த்ரமு லன்னி கலவாரலு*
*தந்த்ரீ லய ஸ்வர ராக விலோலுரு*
*தியாக3ராஜ வந்த்3யுலு ஸ்வதந்த்ருலு* நா..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| நுத | - | துதிக்கப்பட்ட |
| ஓ மனஸா | - | ஓ மனமே |
| நாதோபாஸன | - | நாத வழிபாடு |
| சேஸே | - | செய்யும் |
| சங்கர | - | சிவன் |
| நாராயண | - | அரி (விஷ்ணு) |
| விதுலு | - | பிரம்மா (ஆகியோர்) |
| வெலஸிரி | - | விளங்குகின்றன |
| வேத + உத்தருலு | - | வேதங்களை நிலைநிறுத்தியவர்கள் |
| வேதாதீதுலு | - | வேதங்களுக்கு அப்பாற்பட்டவர்கள் |
| மந்த்ர+ஆத்முலு | - | மந்திரங்களோடு சஞ்சரிப்பவர்கள் |

| | | |
|---|---|---|
| எந்த்ர தந்த்ராத்முலு | - | யந்திர தந்திரங்களே இருப்பிடமானவர்கள் |
| மரி | - | மேலும் |
| மந்த்ரமுலு+அன்னி | - | மந்திரங்கள் அனைத்தும். |
| கலவாரலு | - | இருப்பிடமானவர்கள் |
| தந்த்ரீலய ஸ்வரராக | - | தந்தி வாத்தியங்களாலும், லய வாத்தியங்களாலும் |
| விலோலுரு | - | திளைப்பவர்கள் |
| த்யாகராஜவந்த்யுலு | - | தியகராசனால் வணங்கப்படுபவர்கள் |
| ஸ்வதந்த்ருலு | - | எதற்கும் கட்டுப்படாத சுதந்திரமானவர்கள். |

## பொழிப்புரை

ஓ மனமே! நாதவழிபாடு செய்ததால் அரன் (சிவன்), அரி (விஷ்ணு), அயன் (பிரம்மா) ஆகியோர் விளக்கமுற்றனர். அவர்கள் மறைகளை (வேதங்களை) நிலைநிறுத்தியவர்கள், மறைகளுக்கு அப்பாற்பட்டவர்கள். உலகம் முழுமையும் நீக்கமற நிறைந்திருப் பவர்கள். மேலும் (மந்திரங்களுக்கு இருப்பிடமானவர்கள்) தந்தி வாத்தியங்களிலும், லய வாத்தியங்களிலும், வாய்ப்பாட்டுகளிலும் விருப்புடன் திளைப்பவர்கள். இத்தியாகராசனால் வணங்கப் படுபவர்கள். எதற்கும், யாருக்கும் கட்டுப்படாத சுதந்திரமானவர்கள் (ஓமனமே!) நீயும் நாதவழிபாடு செய்.



## 50. ஸ்ரீராக[3]ம் - தே[3]சாதி[3]

பல்லவி

*நாம குஸுமமுலசே பூஜிஞ்சே*
*நரஜன்மமே ஜன்மமு மனஸா* *நா..*

அனுபல்லவி

*ஸ்ரீமன் மானஸ கனகபீட[2]முன*
*செலக[3] ஜேஸிகொனி வரசிவராம* *நா..*

*சரணம்*

*நாத[3]ஸ்வரமனே வர நவரத்னபு*
*வேதி[3]கபை ஸகல லீலா வி-*
*நோது[3]னி பரமாத்முனி ஸ்ரீராமுனி*
*பாத[3]முலனு தியாக[3]ராஜ ஹ்ருத்[3] பூ[3]ஷணுனி* *நா..*

பதவுரை

| | |
|---|---|
| மனஸா | - ஓ மனமே |
| நாமகுஸுமமுலசே | - திருநாம மலர்களால் |
| பூஜிஞ்சே | - பூசனை செய்யும் |
| நரஜன்மமே | - மனிதப்பிறவியே |
| ஜன்மமு | - பிறவி |
| மானஸ | - மனமென்னும் (இதய) |
| ஸ்ரீமன் | - மங்களகரமாய் விளங்கும் |
| கனகபீடமுன | - பொற்பீடத்தில் |
| செலகன் | - வீற்றிருக்க |
| ஜேஸிகொனி | - செய்து கொண்டு |
| வர | - சிறப்புடைய |
| சிவராம | - சிவ ராம திருநாமங்கள் |
| நாதஸ்வரமு | - நாதம், சுரம் |

| | | |
|---|---|---|
| அம்ன | - | ஆகிய |
| வர | - | மேலான |
| நவரத்னமு | - | நவமணிகளால் அலங்கரிக்கப்பட்ட |
| வேதிகபை | - | மேடையில் |
| ஸகல | - | பலவித |
| லீலா | - | திருவிளையாடல்களால் |
| விநோதுனி | - | வினோதம் புரிபவனே |
| பரமாத்முனி | - | பரமாத்மனே |
| ஸ்ரீராமுனி | - | ஸ்ரீ இராமனின் |
| பாதமுலனு | - | திருவடிகளை |
| த்யாகராஜ | - | தியாகராசன் |
| ஹ்ருத் பூஷணுனி | - | உள்ளத்தில் அலங்கரித்து |

*பொழிப்புரை*

ஓ மனமே! திருநாம மலர்களால் பூசனை செய்யும் மானிடப் பிறவியே பிறவி. மங்களகரமாய் விளங்கும் மனம் என்னும் பொற்பீடத்தில் வீற்றிருக்க செய்து கொண்டு சிறப்பான சிவ, இராம என்னும் திருநாமங்களை மலர்களால் பூசனை செய்யும் மானிடப் பிறவியே பிறவியாகும். நாதம், சுரம் ஆகிய நவமணிகளால் அலங்கரிக்கப் பெற்ற மேடையின் மீது பலவித திருவிளையாடல் களால் விநோதம் புரிபவனே! பரமாத்மனே! ஸ்ரீ இராமனின் திருவடிகளை இத் தியாகராசன் உள்ளத்தில் அலங்கரித்து திருநாம மலர்களால் பூசனை செய்யும் பிறவியே பிறவி.



# 51. தோடி$^{3}$ - ரூபகம்

**பல்லவி**

*நினு வினா ஸுக$^{2}$முக$^{3}$ான நீரஜனயன "நி"..*

**அனுபல்லவி**

*மனஸு கெந்தோ யானந்த$^{3}$மை புலகரிஞ்சக$^{3}$ "நி"..*

**சரணம்**

*ரூபமு, ப்ரதாபமு, சரசாபமு, ஸல்லாபமு க$^{3}$ல "நி".*
*கருணாரஸபரிபூர்ண! வரத$^{3}$! ம்ருது$^{3}$வார்தலுக$^{3}$ல "நி"..*
*ராக$^{3}$ரஸிக! ராக$^{3}$ரஹித! த்யாக$^{3}$ராஜ ப$^{4}$ாகதே$^{4}$ய "நி".*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| நீரஜனயன | - | தாமரையையொத்த விழிகளைஉடையவனே |
| நினுவினா | - | உன்னைத்தவிர |
| ஸுகமுகான | - | இன்பத்தைக் காணவில்லை |
| மனஸுகு | - | உள்ளத்திற்கு |
| எந்தோ | - | எவ்வளவோ |
| ஆனந்தமை | - | மகிழ்ச்சி உண்டாகி |
| புலகரிஞ்சக | - | புளகாங்கிதம் அடைய |
| ரூபமு | - | அழகுத்தோற்றம் |
| ப்ரதாபமு | - | வீரம் |
| சரசாபமு | - | வில், அம்பு |
| ஸல்லாபமு கல | - | இன்ப உரையாடலில் மூழ்கிய |
| கருணாரஸ | - | கருணைக் கடலானவனே! |
| பரிபூர்ணவரதா | - | முழுவதுமாக வரங்களைக் கொடுப்பவனே |
| ம்ருதுவார்தலுகல | - | இனிய மொழிகளைப் பேசும் |

| | | |
|---|---|---|
| ராகரஸிக! | - | இசைப்பாட்டில் திளைப்பவனே! |
| ராகரஹித! | - | பற்று அற்றவனே! |
| த்யாகராஜ பாகதேய | - | தியாகராசனின் பேறு ஆனவனே! |

## பொழிப்புரை

தாமரைக் கண்களை உடையவனே! நான் உன்னைத் தவிர வேறு இன்பத்தைக் காணவில்லை. உள்ளத்திற்கு அளவிலா மகிழ்ச்சியை உண்டாக்கி உடல் புளகாங்கிதம் கொள்வதற்கு உன்னையன்றி இன்பம் என்ற வேறொன்றைக் காணேன். அழகுத் தோற்றம், வீரம், வில், அம்பு இவைகளுடன் இன்பவுரையாடலில் மூழ்கியிருக்கும் உன்னையன்றி வேறு இன்பம் இல்லை. கருணைக் கடலே! வரங்களை முழுதும் கொடுப்பவனே! இனியமொழிகளால் பேசும் உன்னைத்தவிர இன்பம் வேறில்லை. இசைப் பாட்டில் திளைப்பவனே! பற்றற்றவனே! இத் தியாகராசனின் பேறாகி விளங்குபவனே! உன்னையன்றி வேறு இன்பத்தைக் காணேன்



## 52. த4ன்யாஸி - சாபு

**பல்லவி**

*நீ சித்தமு நிஸ்சலமு, நிர்மலமனி நின்னெ நம்மினானு "நீ".*

**அனுபல்லவி**

*நாசித்தமு வஞ்சன சஞ்சலமனி*
*நனுவிட3னாட3குமி; ஸ்ரீராம! "நீ"..*

**சரணம்**

*கு3ருவு சில்ல3கிஞ்ஜ குருவே ப்4ரமரமு*
*குருடே3 ப4ாஸ்கருடு4 குருடே4 ப4த்3ருடு3*
*குருடே3 யுத்தமக3தி குருவு நீ வனுகொண்டி*
*த4ரனு தாஸுனி ப்ரோவ த்யாக3ராஜனுத! "நீ"..*

**பதவுரை**

| | |
|---|---|
| ஸ்ரீ ராம | - மங்களம் நல்கும் இராமா! |
| நீ சித்தமு | - உன் உள்ளம் |
| நிஸ்சலமு | - அசைவற்றது |
| நிர்மலமு | - குற்றமற்றது |
| அனி | - என்று |
| நின்னெ | - உன்னையே |
| நம்மினானு | - நம்பியுள்ளேன் |
| நா சித்தமு | - என் உள்ளம் |
| வஞ்சன | - வஞ்சனை(யும்) |
| சஞ்சலமு+அனி | - சஞ்சலம் என்று |
| நனு | - என்னை |
| விடனாடகுமி | - விட்டுவிடாதே |
| குருவு | - ஆசான் |
| சில்லகிஞ்ஜ | - தேற்றாங்கொட்டை |

| | | |
|---|---|---|
| உல்லமு | - | உள்ளம் |
| ரஞ்ஜில்ல | - | மகிழும்படியாக |
| புலகரிஞ்ச | - | மெய்சிலிர்க்கவே |
| நினு | - | உன்னை |
| பூஜஸேதுகானி | - | வழிபடுவனே தவிர |
| கலனைன | - | கனவிலும் |
| மருவ | - | மறக்க முடியாத |
| சுக்கல | - | விண்மீன்களின் |
| ராயனி | - | சந்திரனை |
| போலு | - | விளங்கும் |
| மருலுகொன்னானு | - | மையல் கொண்டுள்ளேன் |
| மதனஜனக | - | காமனைப்பெற்றவனே |
| தரஸுதாரமண | - | சீதையின் தலைவனே |
| த்யாக'ராஜுனிகி | - | தியாகராசனுக்கு |

## பொழிப்புரை

தாமரைக் கண்களை உடையவனே! உனது அழகிய திருமுகத்தை எனக்கு அருள்கூர்ந்து காட்டுவாயாக! என் இதயத்தில் உன்னை என்றும் நிறுத்திக் கொள்வேன். பாம்பணையில் பள்ளி கொண்டவனே! எனது உள்ளம் மகிழும்படியாக உனது அழகிய திருமுகத்தைக் காட்டு. என் மெய்சிலிர்க்கவே உன்னை வழிபடுவேனே தவிர கனவிலும் மறக்க முடியாத விண்மீன்களின் தலைவனைப் (சந்திரனைப்) போன்று விளங்கும் உன் அழகிய திருமுகத்தை என்பக்கமாகத் திருப்பு. நான் உன்மீது மையல் கொண்டுள்ளேன். காமனைப் பெற்றவனே! சீதையின் தலைவனே! இத்தியாகராசனுக்கு உனது திருமுகத்தைக் காட்டு.

***

# 57. ஸாரங்க$^{3}$ - ஜ$^{2}$ம்ப

**பல்லவி**

*நீவாட$^{3}$னேக$^{3}$ான, நிகி$^{2}$லலோக நித$^{4}$ான!*
*நிமிஷமோர்வ க$^{3}$லனா?* "நீ"..

**அனுபல்லவி**

*தே$^{3}$வாதி$^{4}$ தே$^{3}$வ! பூ$^{4}$தே$^{3}$வ வரபக்ஷ! ரா*
*ஜீவாக்ஷ! ஸாது$^{4}$ஜன ஜீவன! ஸனாதன!* "நீ"..

**சரணம்**

*சத்யம்பு$^{3}$ நித்யம்பு$^{3}$ சமரமுன ஸௌர்யம்பு$^{3}$*
*நத்யந்த ரூபமு நமிதப$^{2}$லமு*
*நித்யோத்ஸவம்பு$^{3}$க$^{3}$ல நீகு நிஜத$^{3}$ாஸுட$^{3}$னி*
*தத்$^{2}$யம்பு$^{3}$ ப$^{3}$ல்கு ஸ்ரீத்யாக$^{3}$ராஜார்ச்சித* "நீ"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| நிகிலலோக நிதான | - | அனைத்து உலகங்களுக்கும் மூல காரணம் ஆனவனே! |
| நீவாடனே | - | நான் உனக்கு மிகவும் வேண்டியவன் |
| கான | - | ஆகையால் |
| நிமிஷமு | - | நிமிடப்பொழுதாவது |
| ஓர்வ | - | பொறுத்துக் கொள்ள |
| கலனா | - | முடியுமா? |
| தேவாதிதேவ | - | தேவர்களின்தேவனே! |
| பூதேவ | - | பூதேவனே |
| வரபக்ஷ | - | திருமால் வடிவமே |
| ராஜீவாக்ஷ | - | தாமரைக் கண்களை உடையவனே! |
| ஸாதுஜன ஜீவன | - | சாது ஜனங்களுக்கு உயிரானவனே! |

| | | |
|---|---|---|
| ஸனாதன | - | முதன்மையானவனே! |
| சத்யம்பு | - | மெய்மைத் தன்மையும் |
| நித்யம்பு | - | அழிவில்லாதன்மையும் |
| ஸமரமுன | - | போரில் |
| ஸௌர்யம்பு | - | வலிமையும் |
| அத்யந்த ரூபமு | - | மேலானவடிவழகும் |
| அமிதபலமு | - | அதிக சக்தியும் |
| நித்ய + உத்ஸவம்புகல | - | தினமும் நிலைத்த பூசனைகளும் உள்ள! |
| நீகு | - | உனக்கு |
| நிஜதாஸுடு | - | உண்மையான தொண்டன் |
| அனி | - | என்று |
| தத்யம்புபல்கு | - | உறுதியாகச் சொல்லும் |
| ஸ்ரீத்யாகராஜார்ச்சித | - | ஸ்ரீதியாகராசனால் துதிக்கப்படுபவனே! |

பொழிப்புரை

அனைத்து உலகங்களுக்கும் மூலகாரணமானவனே! நான் உனக்கு மிகவும் வேண்டியவன் அல்லவா? (என்னால்) ஒரு நிமிடப் பொழுதாவது பொறுத்துக் கொள்ள முடியுமா? தேவர்களுக்கெல்லாம் தேவனே! திருமால் வடிவமே! தாமரைக்கண்களை உடையவனே! சாது ஜனங்களுக்கு உயிரானவனே! முதன்மையானவனே! மெய்மைத் தன்மையும், அழிவில்லாத் தன்மையும், போரில் வலிமையும், மேலான வடிவழகும், அதிக சக்தியும் தினமும் நிலைத்த பூசனைகளும் உள்ள உனக்கு உண்மையான தொண்டன் என்று உண்மையை உறுதியாகச் சொல்லும் தியாகராசனால் துதிக்கப்படுபவனே! (நான் உனக்கும் மிகவும் வேண்டியவனல்லவா?)

***

# 58. ஸிம்ஹவாஹினி - தே1சாதி3

## பல்லவி

*நெனருஞ்சரா, நாபைனி சால;*
*நீ த3ாஸுட3னு கத3ா! ஸ்ரீராம!* "நெ"..

## அனுபல்லவி

*ஸனகாதி3 யோகி3 ப்3ருந்த3 வந்த்3ய பாத3!*
*ஸாகேதவாஸ! ஸத்3ப4க்த போஷ!* "நெ"..

## சரணம்

*தல்லி தண்ட்3ரி கு3ரு தை3வமு நீவனி*
*தருசுக3ானு நின்னு நம்மியுன்ன நே*
*தல்லடி3ல்ல சுண்ட3 த3ரிஜூப வேமி?*
*த்யாக3ராஜ பரிபால! ஸுகு3ண சீல!* "நெ"..

## பதவுரை

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ராம | - | மங்களகரமான ஓ இராமா! |
| நாபைனி | - | என்மீது |
| சால | - | மிகுந்த |
| நெனரு | - | நினைவு |
| உஞ்சரா | - | வைத்துக்கொள்ளடா! |
| நீ | - | உன் |
| தாஸுடனுகதா | - | அடியவன் ஆகையால் |
| ஸனகாதியோகிப்ருந்த | - | சனகர் முதலான யோகியரால் |
| வந்த்ய பாத | - | வணங்கத்தக்க திருவடிகள்பெற்றவனே |
| ஸாகேதவாஸ | - | அயோத்தியில் உறைபவனே! |

ஸத்பக்த போஷ - நல்ல பக்தர்களைக் காப்பவனே!

தல்லி தண்ட்ரி - தாய், தந்தை

குரு தைவமு - ஆசான், தெய்வம்

நீவு+அனி - நீயேயென்று

தருசுகானு - பெருமையுடன்

நின்னு - உன்னை

நம்மியுன்ன - நம்பிக் கொண்டிருக்கின்ற

நே - நான்

தல்லடில்லு சுண்ட - தத்தளிக்கும்போது

தரிஜூபவு+ஏமி - ஏன் நல்வழி காட்டமாட்டாய்?

த்யாகராஜ பால - தியாகராசனைக் காத்தருளும்

ஸுகுணசீல - நற்குணசீலனே!

## பொழிப்புரை

மங்களமாய் விளங்கும் இராமா! நான் உன் அடியவன் ஆகையால் என் மீது அக்கறை கொள். ஜனகர் முதலான யோகியரால் வணங்கத்தக்க திருவடிகளைக் கொண்டவனே! அயோத்தியில் உறைபவனே! நல்ல பக்தர்களைக் காப்பவனே! தாய், தந்தை, ஆசான், கடவுள் நீயே என்று பெருமையுடன் உன்னை நான் நம்பிக்கொண்டிருக்கும் பொழுது என்னைத் தத்தளிக்க விடலாமா? ஏன் நல்வழி காட்ட மாட்டாயா? தியாகராசனைக் காத்தருளும் நற்குண சீலனே!



## 59. மாளவி - தே3சாதி3

**பல்லவி**

*நெனருஞ்சினானு அன்னிடிகி -*
*நிதா3னுட3னி நேனு; நீது3பை* "நெ"..

**அனுபல்லவி**

*க4னாக4 ஜீமூதா சுக3 ஜலதி4 -*
*கம்பீ4ர! நீ பாத3முலபை* "நெ"..

**சரணம்**

*கலிலோ மாடல நேர்சுகொனி -*
*காந்தலனு தனயுலனு ப்ரோசுடகை*
*சிலாத்முடை பலுகனேரனுர; -*
*ஸ்ரீ த்யாக3ராஜாப்த; நீயெட3* "நெ"..

**பதவுரை**

| | |
|---|---|
| நெனரு | - அன்பு |
| உஞ்சினானு | - வைத்துள்ளேன் |
| அன்னிடிகி | - அனைத்திற்கும் |
| நிதானுடு+அனி | - மூலகாரணமானவன் என்று |
| நேனு | - நான் |
| நீதுபை | - உன்மீது |
| கன | - பெருத்த |
| அக | - பாவம் (என்ற) |
| ஜீமூதா | - மேகங்களை |
| ஆசுக | - சிறகடிக்கும் காற்றைப் போன்றவனே! |
| ஜலதிகம்பீர | - கடலைப்போன்று கம்பீரத் தோற்றம் உடையானே! |

| | | |
|---|---|---|
| நீபாதமுலபை | - | உனதுதிருவடிகளின்மீது |
| கலிலோ | - | இக்கலிகாலத்தில் |
| மாடலு | - | மயக்குமொழிகளை |
| நேர்சுகொனி | - | கற்றுக்கொண்டு |
| காந்தலனு | - | பெண்களை |
| தனயுலனு | - | பிள்ளைகளைக் |
| ப்ரோசுடகு | - | காப்பாற்ற வேண்டி |
| சிலாத்முடைன | - | கல்மனம் படைத்து |
| பலுகனேரனுர | - | (பிறருடன்) பேசித்திரிய இயலவில்லை ஐயனே! |
| ஸ்ரீ த்யாகராஜாப்த | - | ஸ்ரீ தியாகராசனுக்கு வேண்டப்பட்ட |
| நீயெட | - | உன்மேல் |

## பொழிப்புரை

அனைத்திற்கும் மூலகாரணமானவன் என்று நான் உன்மீது அன்பு கொண்டுள்ளேன். பெருத்த எனது பாவங்கள் என்னும் மேகக்கூட்டத்தைக்கலையச்செய்யும் காற்றைப் போன்றவனே! கடலைப் போன்று கம்பீரமான தோற்றத்தை உடையவனே! உனது திருவடிகளின் மீது நான் அன்பு கொண்டுள்ளேன். இக்கலிகாலத்தில் (சில) மயக்குமொழிகளைக் கற்றுக்கொண்டு, பெண்டு பிள்ளைகளைக் காக்க வேண்டி கல்மனம் படைத்து (பிறருடன்) பேசித்திரிய (என்னால்) இயலவில்லை ஐயனே! ஸ்ரீ தியாகராசனின் மனம் உகந்த உன் மேல் அன்பு பாராட்டுகின்றேன்.



# 60. தே$^3$ஸ்யதோடி$^3$ - ஜ$^2$ம்ப

**பல்லவி**

*நே பொகட$^3$குண்டி$^3$ன நீகேமி கொத$^3$வ?*
*நீ மனஸு தெலிஸெ கத$^3$ரா? ஓ ராம!* "நே".

**அனுபல்லவி**

*ப்ராபுக$^3$ல சுக ஸனக ப்ரஹ்லாத$^3$ நாரத$^3$*
*பரமேச ருத்$^3$ராதி$^3$ ப$^4$க்து வர்சிம்பக$^3$* "நே".

**சரணம்**

*பு$^4$ஜியிம்ப பெட்டி ஸதி பு$^3$து$^4$லு ஸாமாஜிகுலு*
*ப$^4$ஜியிம்ப, ஸோத$^3$ருலு, பவனஸுனு,*
*ட$^3$ஜ, பி$^3$டெ$^3$ளஜாதி$^3$ ஸுரு லாப்துலைனாரு; நீ -*
*ரஜ நயன! ஸ்ரீ த்யாக$^3$ராஜனுத! பா$^3$லுட$^3$கு$^3$* "நே"

**பதவுரை**

ஓ ராம - ஓ இராமா!
நே - நான்
பொகடகுண்டின - புகழாவிடில்
நீகு - உனக்கு
ஏமி கொதவ? - என்ன குறைவு
நீ மனஸு - உன் உள்ளம்
தெலிஸெ கதரா - தெரிந்தது அல்லவா?
ப்ராபுகல - புகழ்பெற்ற
சுக - சுக முனி
ஸனக - சனகர் முனி
ப்ரஹ்லாத - பிரகலாதன்
நாரத - நாரத முனி
பரமேச - பரம சிவனாகிய

| | |
|---|---|
| குருவே | ஆசானே |
| ப்ரமரமு | தேன்வண்டு |
| குருடே | ஆசானே |
| பத்ருடு | காத்தருள்பவன் |
| குருடே | ஆசான்தான் |
| உத்தமகதி | நல்வழியாக இருப்பவர் |
| குருவு | ஆசான் |
| நீவ | நீயே |
| அனுகொண்டி | என்றுணர்ந்து |
| தரனு | புவியில் |
| தாஸுனிப்ரோவ | தொண்டனைக்காக்க |
| த்யாகராஜநுத | தியாகராசனால்போற்றித் துதிக்கப்படுபவனே! |

## பொழிப்புரை

மங்களம் நல்கும் இராமா! உன் உள்ளமானது அசைவற்றதும் குற்றமற்றதுமென உன்னையே நம்பி உள்ளேன் எனது உள்ளம் வஞ்சனையும் சஞ்சலமும் நிறைந்ததென்று எண்ணி என்னை விட்டுவிடாது சேர்த்துக்கொள். ஆசான் தேற்றாங்கொட்டையைப் போன்றவன்; அவனே தேன்வண்டு ஆசான்தான் ஆதவன் ஆசானே காத்தருள்பவன் மேலும் ஆசானே நல்வழியாகவும் விளங்குபவர் அத்தகைய ஆசான் நீயே! என்றுணர்ந்துகொண்டேன் இப்புவியில் உன் அடியவனான என்னைக் காத்தருள். இத்தியாகராசனால் போற்றித் துதிக்கப்படுபவனே! உன் உள்ளம் அசைவற்றதும் குற்றமற்றதும் ஆக விளங்குவதால் உன்னையே நம்பியுள்ளேன்.

***

# 53. வஸந்தபை$^{4}$ரவி - ரூபகம்

### பல்லவி

*நீ த$^{3}$ய ராத$^{3}$ா?* "*நீ*"..

### அனுபல்லவி

*காத$^{3}$னெவா ரெவரு? கல்யாண ராமா! நீ* "*நீ*"..

### சரணம்

*நனுப்ரோசே வாட$^{3}$னி நாடே$^{3}$ தெலிய*
*நினவம்ச திலக! இந்த தாமஸமா?* "*நீ*"..
*அன்னிடி கதி$^{4}$காரிவனி நே பெ$^{3}$ாகடி$^{3}$தி*
*மன்னிஞ்சின நீது$^{3}$ மஹிமகு தக்குவா* "*நீ*"..
*ராமராம ராம! த்யாக$^{3}$ராஜ ஹ்ருத்ஸத$^{3}$ன!*
*நாமதி$^{3}$ தல்லடி$^{3}$ல்ல ந்யாயமா? வேக$^{3}$மே* "*நீ*"..

### பதவுரை

| | | |
|---|---|---|
| கல்யாண ராமா | - | கல்யாண குணங்களையுடைய இராமா! |
| நீ தய ராதா? | - | உனது அருள் வாராதா? |
| காது | - | இல்லை |
| அனேவாரு+எவரு | - | எனச் சொல்லுபவர் எவர்? |
| நனு | - | என்னை |
| ப்ரோசேவாடு | - | காத்தருள்பவன் |
| அநி | - | என்று |
| நாடெ | - | அன்றே |
| தெலிய | - | தெரிந்து கொள்ள |
| இனவம்ச திலக | - | சூரியகுலத் திலகனே! |
| இந்த | - | இவ்வளவு |
| தாமஸமா? | - | தாமதமா? |

| | | |
|---|---|---|
| அன்னிடிகி | - | அனைத்திற்கும் |
| அதிகாரிவி | - | தலைவன் |
| அனி | - | என்று |
| நே | - | நான் |
| பொகடிதி | - | புகழ்ந்தேன் |
| மன்னிஞ்சிதே | - | ஒப்புக் கொண்டால் |
| நீது | - | உனது |
| மஹிமகு | - | புகழுக்கு |
| தக்குவா | - | குறைவா? |
| ராமராமராம | - | இராம இராம இராமா! |
| த்யாகராஜ | - | தியாகராசனின் |
| ஹ்ருத்ஸதன | - | இதயத்தில் வசிப்பவனே |
| நாமதி | - | எனது உள்ளம் |
| தல்லடில்ல | - | தத்தளிப்பது |
| ந்யாயமா? | - | முறையாகுமா |
| வேகமே | - | விரைவாகவே |

## பொழிப்புரை

கல்யாண இராமா! உனது அருள் கிடைக்கப்பெறாதா? இல்லையெனச் சொல்லுபவர் எவர்? சூரியகுலத் தோன்றலே! என்னைக் காத்தருள்பவன் நீயென்று அந்நாளே நான் அறிந்துகொள்ள இத்துணை தாமதமா? அனைத்திற்கும் தலைவன் நீயே என்று நான் புகழுதலை ஏற்றுக்கொள்ளுதல் எனது ஆற்றலுக்குக் குறைவுடையது ஆகுமோ? இராமா இராமா இராமா! என்னுடைய மனம் தத்தளித்துத் தடுமாறுதல் முறையாகுமோ? என்றும் தியாகராசனின் இதயத்தில் குடிகொண்டிருப்பவனே! விரைவாகவே உனது அருள் கிடைக்காதா?

***

# 54. ஜயமனோஹரி - ரூபகம்

**பல்லவி**

*நீ ப4க்தி பா4க்ய, ஸுதா4நிதி4-நீதே3தே3 ஜன்மமு? "நீ"..*

**அனுபல்லவி**

*பூ4பா4ரமு கா3னி ஸுர-பூ4ஸுருலை ஜனிஞ்சின "நீ"..*

**சரணம்**

*வேதோ3க்தம்பௌ3 கர்மமு-வெதக3ல்கு3 க3தாக3தமௌ*
*நாதா3த்மக த்யாக3ராஜ - நாதா2! ப்ரமேய! ஸதா "நீ"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| நீ | - | உன் |
| பக்திபாக்ய | - | பக்தியெனும் பேறு |
| ஸுதாநிதினி | - | அமுதக்கடலில் |
| ஈதேதே | - | நீந்துவதே |
| ஜன்மமு | - | பிறவி |
| பூபாரமுகானி | - | (இல்லையெனில்) பூமிக்குச் சுமையாம் |
| ஸுர | - | தேவர்கள் |
| பூஸுருலு+அயி | - | அந்தணர்கள் ஆக |
| ஜனிஞ்சின | - | பிறவி எடுத்தாலும் |
| வேத+உக்தமு+அவு | - | வேதங்களில் விதிக்கப்பட்டிருப்பது போன்று |
| கர்மமு | - | வினைகள் |
| வெதகல்கு | - | துன்பத்தை உண்டாக்கும் |
| கதாகதமு+அவு | - | திரும்பத்திரும்ப வருவதான |
| நாதாத்மக | - | நாதவடிவினனே! |
| த்யாகராஜநாதா! | - | தியாகராசனின் தலைவனே! |

| | | |
|---|---|---|
| அப்ரமேய | - | பிரமாணங்களுக்கு அப்பாற்பட்டவனே! |
| ஸதா | - | எப்பொழுதும் |

## பொழிப்புரை

உன் மீதான பக்தி என்னும் பேறு ஆகிய அமுதக் கடலில் நீந்துவதே பிறவியாகும் ஏனைய பூமிக்குச் சுமையே ஆகும் தேவர்களாகவும் அந்தணர்களாகவும் பிறவியெடுப்பினும் உன் பக்திப்பேறு ஆகிய அமுதக் கடலில் நீந்துவதுதான் உண்மையான பிறவி வேதங்களில் விதிக்கப்பட்டது போல வினைகள் அனைத்தும் திரும்பத் திரும்ப வந்து துன்பத்தை உண்டாக்குவன நாதமே வடிவானவனே! தியாகராசனின் தலைவனே! பிரமாணங்களுக்கும் அப்பாற்பட்டவனே! எப்பொழுதும் உன் பக்திப்பேறு ஆகிய அமுதக்கடலில் நீந்துவதுதான் பிறவி.



# 55. நாயகி - ஆதி3

### பல்லவி

*நீ ப4ஜன கா3ன ரஸிகுல நே-நெந்து கானரா; ராம! "நீ"..*

### அனுபல்லவி

*ஸ்ரீப4வ ஸரோஜாஸனாதி3 சசீ*
*மனோரமண வந்த்3ய! இலலோ "நீ"..*

### சரணம்

*ஸகு3ண நிர்கு3ணபு நிஜ த3ப்3ப3ரலனு*
*ஷண்மதமுல மர்ம மஷ்டஸித்து4ல*
*வக3லு கூப ஸந்தஸில்ல க3ண்டினி*
*வரானன! த்யாக3ராஜ விநுத! "நீ"..*

### பதவுரை

| | | |
|---|---|---|
| ராம | - | இராமா! |
| நீ | - | உன் |
| பஜன | - | பஜனையாகின்ற |
| கான | - | பாட்டில் |
| ரஸிகுலனு | - | ஈடுபடுபவர்களை |
| நேனு | - | நான் |
| எந்து | - | எங்கே |
| கானரா | - | காண்பேன் ஐயா! |
| ஸ்ரீ பவ | - | திருமகள், சிவன் |
| ஸரோஜ+ஆஸநாதி | - | தாமரையில் அமர்ந்திருக்கும்பிரம்மன் |
| சசீமனோரமண | - | சசிதேவியின் தலைவனான இந்திரன் |
| வந்த்ய | - | வணங்கப்படுபவன் |
| ஸகுண | - | நற்குணம் |

| | | |
|---|---|---|
| நிர்குணபு | - | குணமில்லாதவைகள் |
| நிஜ | - | உண்மை |
| தப்பரலனு | - | பொய்மைகள் |
| ஷண்மதமுல | - | ஆறுவகைப்பட்ட சமயங்களி |
| மர்மமு | - | இரகசியங்கள் |
| அஷ்டஸித்துல | - | எட்டுவகையான சித்திகளின் |
| வகலுசூப | - | நிலைகளைக்காட்ட |
| ஸந்தஸில்லி | - | மகிழ்வுடன் |
| கண்டினி | - | கண்டுகொண்டேன் |
| வரானன | - | வரங்களை அளிப்பவனே |
| த்யாகராஜ விநுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |

## பொழிப்புரை

இராமா! உன் மீதான பஜனைப்பாட்டில் மூழ்கித் திளைப்பவர்களை நான் எங்கு காண்பேன் ஐயா! திருமகள், சிவபெருமான், தாமரை மீது அமர்ந்திருக்கும் பிரம்மன், சசிதேவியின் மனங்கவர்ந்த தலைவனான இந்திரன் முதலானவர்களால் வணங்கப்படுபவனே! நற்குணம், குணமில்லா தன்மைகளின் உண்மை, பொய்மைகள், ஆறுவகை சமயங்களின் இரகசியங்கள்; எண்வகை சித்திகளின் நிலைகள் ஆகியவற்றை நீ காட்ட மகிழ்ச்சியுடன் கண்டறிந்தேன் வரங்களை அளிப்பவனே! இத் தியாகராசனால் துதிக்கப் படுபவனே!



## 56. கமலாமனோஹரி - ஆதி

**பல்லவி**

*நீ முத்3து3 மோமு ஜூபவே* "நீ"..

**அனுபல்லவி**

*நா மீத3 நெனருஞ்சி, நளினத3ளநயன!* "நீ"..

**சரணம்**

*உரமுன நின்னுஞ்சுகொனேத3க3னி*
*உரக3சயன! நாது3ல்லமு ரஞ்ஜில்ல*
*புலகரிஞ்ச நினு பூஜஸேது க3னி*
*கலனைன மருவ; சுக்கல ராயனி போ3லு*
*மருலு கொன்னானு, மதன ஜனக!*
*த4ர ஸுதாரமண! ஸ்ரீத்யாக3ராஜுனிகி* "நீ"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| நளினதளநயன | - | தாமரைக் கண்ணனே! |
| நீ | - | உனது |
| முத்துமோமு | - | அழகிய திருமுகத்தை |
| நா | - | என் |
| மீத | - | மீது |
| நெனருஞ்சி | - | அருள்கூர்ந்து |
| ஜூபவே | - | காட்டுவாயாக |
| உரமுன | - | (என்) இதயத்தில் |
| நின்னு | - | உன்னை |
| உஞ்சுகொனேதகானி | - | நிறுத்திக்கொள்வேனே! |
| உரக சயன | - | பாம்பணையில் பள்ளி கொண்டவனே! |
| நாது | - | என்னுடைய |

| | | |
|---|---|---|
| ருத்ராதி | - | ருத்திரன் ஆகிய |
| பக்துலு அர்சிம்பக | - | பக்தர்கள் அர்ச்சித்துக் கொண்டிருக்க |
| புஜியிம்ப பெட்டி | - | அமுது செய்விக்க |
| ஸதி | - | மனைவி |
| புதுலு | - | அறிவாளிகள் |
| ஸாமாஜிகுலு | - | பாமர மக்கள் |
| பஜியிம்ப | - | சேவை செய்ய / வழிபட |
| ஸோதருலு | - | தம்பிமார்கள் |
| பவனஸூனுடு | - | அனுமான் |
| அஜ | - | பிரம்மா |
| பிடௌஜ | - | இந்திரன் |
| ஆதி | - | ஆகிய |
| ஸூருலு | - | தேவர்கள் |
| ஆப்துலு | - | நண்பர்கள் |
| அயினாரு | - | அமைந்துள்ளனர் |
| நீரஜ நயன | - | தாமரைக்கண்ணனே! |
| ஸ்ரீ த்யாகராஜநுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |
| பாலுடு+அகு | - | சிறுவனான |

## பொழிப்புரை

ஓ இராமா! நான் உன்னைப் புகழாவிட்டால் உனக்கென்ன குறைவு? உன் உள்ளம் எனக்குத் தெரிந்தது அல்லவா! புகழ்பெற்ற சுக முனி, சனக முனி, பிரகலாதன், நாரதர், பரமேஸ்வரன், ருத்திரன் ஆகிய பக்தர்கள் உன்னை அர்ச்சனை செய்து கொண்டிருக்கும் பொழுது நான் புகழாவிட்டால் உனக்கென்ன குறைவு? உனக்கு அமுது செய்விக்க மனைவியும்; அறிவாளிகளும் பாமரமக்களும் உன்னை வழிபடவும்; தம்பிகளும் அனுமானும் பிரம்மாவும் இந்திரனும் ஆகிய தேவர்கள் உனக்குற்ற நண்பர்களாகவும் அமைந்துள்ளனர். தாமரையையொத்த கண்களையை கொண்டவனே! சிறுவனாகிய நான் உன்னைப் புகழாவிட்டால் உனக்கென்ன குறைவு உண்டாகப் போகிறது? தியாகராசனால் துதிக்கப்படுபவனே!

# 61. கரஹரப்ரிய - த்ரிபுட

**பல்லவி**

*பக்கல நிலப$^3$டி$^3$ கொ$^3$லிசே*
*முச்சட ப$^3$ாக$^3$ தெ$^3$ல்பராத$^3$ா?* "ப"

**அனுபல்லவி**

*சுக்கல ராயனிகே$^3$ரு மோமுக$^3$ல*
*ஸுத$^3$தி ஸீதம்ம ஸௌமித்ரி ராமுனிகிரு* "ப".

**சரணம்**

*தனுவுசே வந்த$^3$ன மொனரிஞ்சு சுன்னாரா?*
*சனுவுன ராமகீர்தன ஸேயுசுன்னாரா?*
*மனஸுன த$^3$லசி மைமரசி யுன்னாரா?*
*நெனருஞ்சி த்யாக$^3$ராஜுநிதோ, ஹரிஹரி! வீரிரு* "ப".

**பதவுரை**

| | | |
|---|---|---|
| பக்கல | - | இரு பக்கங்களிலும் |
| நிலபடி | - | நின்று கொண்டு |
| கொலிசே | - | பூசனை செய்கின்ற |
| முச்சட | - | விபரங்களை |
| பாக | - | நன்றாக |
| தெல்பராதா | - | விளக்கிச் சொல்லக்கூடாதா? |
| சுக்கலராயனி | - | விண்மீன்களின் தலைவனான சந்திரனை |
| கேரு | - | வியக்கச் செய்யும் |
| மோமுகல | - | முகத்தையுடைய |
| ஸுததி | - | அழகு பொருந்தியவளான |
| ஸீதம்ம | - | சீதாப்பிராட்டி |
| ஸௌமித்ரி | - | இலக்குமணன் |

ராமுனிகி - இராமனுக்கு
இரு - இரு (பக்கங்களிலும்)
தனுவுசே - உடலால்
வந்தனமு - வணக்கம்
ஒனரிஞ்சுசுன்னாரா - செய்து கொண்டு இருக்கின்றனரா?
சனுவுன - பக்திக் காதலுடன்
ராமகீர்தன - இராம சங்கீர்த்தனம்
ஸேயுசுன்னாரா - செய்து கொண்டு இருக்கின்றனரா?
மனஸுனன் - மனதில்
தலசி - நினைத்துக்கொண்டு
மைமரசி - தன்னை மறந்து
உன்னாரா - இருக்கிறார்களா?
நெனரு+உஞ்சி - நினைவில் வைத்திருந்து
த்யாகராஜுநிதோ - தியாகராசனுக்கு
ஹரி ஹரி - ஹரி ஹரி!
வீரு - இவர்கள்
இரு - இரண்டு(பக்கங்களிலும்)

## பொழிப்புரை

ஹரி ஹரி! விண்மீன்களின் தலைவனான சந்திரனையும் வியக்கும்படிச் செய்யும் அழகு பொருந்திய முகத்தை உடையவளான *சீதாப்பிராட்டியும்!* இலக்குமணனும்! (உமது) இரு பக்கங்களிலும் நின்றுகொண்டு பணிவிடை செய்கின்ற விபரங்களை நன்றாகச் சொல்லக் கூடாதா? உடலால் வணங்கிக் கொண்டிருக்கின்றனரா? பக்திப் பெருக்குடன் அன்புகொண்டு இராமசங்கீர்த்தனம் செய்து கொண்டிருக்கின்றனரா? மனதில் நினைந்து கொண்டே தன்னை மறந்து இருக்கின்றனரா? ஹரி ஹரி! நினைவில் வைத்திருந்து இத்தியாகராசனுக்கும் (உமது) இரு பக்கங்களில் நின்று கொண்டு பணிவிடை புரியும் முறைமைகளை நன்றாக விளக்கலாகாதா?

***

# 62. ஹம்ஸநாத³ம் - தே³ஸாதி³

**பல்லவி**

*ப³ண்டுரீதி கொலு விய்ய வய்ய; ராம!* "ப³ண்"

**அநுபல்லவி**

*துண்ட விண்டி வானி மொதலைன மத³ா*
*து³ல கொ³ட்டி நேல கூ³லஜேயு நிஜ* "ப³ண்"

**சரணம்**

*ரோமாஞ்ச மனு க⁴ன கஞ்சுகமு,*
*ராம ப⁴க்துடனு முத்³ர பி³ள்ளயு*
*ராம நாம மனு வர க²ட்³க³மிவி*
*ராஜில்லு நய்ய, த்யாக³ராஜுனிகே* 'ப³ண்'

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ராம | - | ஓ இராமா! |
| பண்டுரீதி கொலுவு | - | சேவகனைப் போன்ற பணியைக் |
| இய்யவய்ய | - | கொடு ஐயனே! |
| துண்டவிண்டிவானி | - | மன்மதனின் சேட்டையான காமம் |
| மொதலைன | - | முதலிய |
| மதாதுலன் | - | குற்றங்கள் ஆகியவற்றை |
| கொட்டி | - | விரட்டி அடித்து |
| நேலகூலஜேயு | - | நிலைகுலையச்செய்யும் |
| நிஜ | - | உண்மையான |
| ரோமாஞ்சமு | - | மயிர்க்கூச்செரிதல் |
| அனே | - | என்ற |

| | | |
|---|---|---|
| கன கஞ்சுகமு | - | சிறந்த கவசமும் |
| ராம பக்துடு | - | இராம பக்தன் |
| அனே | - | என்ற |
| முத்ரபிள்ளயு | - | அடையாளவில்லை |
| ராமநாமமு | - | இராம நாமம் |
| அநே | - | என்ற |
| வர கட்கமு | - | வீர வாளும் |
| இவி | - | இவைகள் |
| ராஜில்லு நய்ய | - | அமர்ந்திருக்கும் |
| த்யாகராஜுனிகே | - | தியாகராசனுக்குத் தான் |

## பொழிப்புரை

ஓ இராமா! மெய்யான சேவகனைப்போன்று உனக்குப் பணிவிடை புரியும் பேற்றை எனக்குக் கொடு ஐயனே! மன்மதனின் சேட்டையாகிய காமம் முதலான (க்ரோதம், உலோபம், மோகம், மதம், மாத்ஸர்யம் என்னும்) குற்றங்களை விரட்டி அடித்து நிலைகுலைந்து அழியச் செய்யும் உனக்குச் சேவகன் என்ற வாய்ப்பை எனக்கருள். உன்மீதான பக்திப் பரவசத்தால் உண்டாகும் புளகாங்கிதமென்னும் கவசமும் இராமபக்தன் என்ற அடையாள வில்லையும் இராம திரு நாமமென்னும் சிறந்த வீரவாளும் பெற்று விளங்கும் இத்தியாகராசனுக்கு உண்மையான சேவகன் என்னும் வாய்ப்பைக் கொடுத்தருள் ஐயனே!



# 63. வாகதீ$^{4}$ஸ்வரி - ஆதி$^{3}$

**பல்லவி**

*பரமாத்முடு$^{3}$ வெலிகெ$^{3}$டி$^{3}$ முச்சட*
*பா$^{3}$க$^{3}$ தெலுஸு கோரே* "ப"..

**அநுபல்லவி**

*ஹரியட ஹருட$^{3}$ட ஸுருலட நருலட*
*யகி$^{2}$லாண்ட$^{3}$ கோடுலட யந்த$^{3}$ரிலோ* "ப"..

**சரணம்**

*க$^{3}$க$^{3}$னா நில தேஜோ ஜல பூ$^{4}$மயமகு$^{3}$*
*ம்ருக$^{3}$ க$^{2}$க$^{3}$ னக$^{3}$ தரு கோடுலலோ*
*ஸகு$^{3}$ணமுலலோ விகு$^{3}$ணமுலலோ ஸததமு*
*ஸாது$^{4}$ த்யாக$^{3}$ராஜாதி$^{3}$ யாச்ரிதுலலோ* "ப"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| பரமாத்முடு | - | பரம்பொருள் |
| வெலிகே | - | விளங்கும் |
| முச்சட | - | அழகியகாட்சியை |
| பாக | - | நன்றாக |
| தெலுஸுகோரெ | - | தெரிந்து கொள்வீரே! |
| ஹரியட | - | அரியாம் (விஷ்ணு) |
| ஹருடட | - | அரனாம் (சிவன்) |
| ஸுருலட | - | தேவர்களாம் |
| நருலட | - | மானிடராம் |
| அகில+அண்டகோடுலு +அட | - | அனைத்து உலகங்களாம் |
| அந்தரிலோ | - | அனைவர்களிலும் |
| ககன | - | ஆகாயம் |

அனல - காற்று
தேஜோ - நெருப்பு
ஜல - நீர்
பூமயமகு - நிலத்தால் அமைக்கப்பட்ட
ம்ருக - மிருகம்
கக - பறவை
நக - மலை
தருகோடுலலோ - மரம் முதலியவைகளில்
ஸகுணமுலலோ - நற்குணம் உள்ளவைகளில்
விகுணமுலலோ - நற்குணம் இல்லாதவைகளில்
ஸததமு - எப்பொழுதும்
ஸாது - சாதுவான
த்யாகராஜ + ஆதி - தியாகராசன் முதலான
ஆச்ரிதுலலோ - சரணடைந்தவர்களில்

## பொழிப்புரை

(எங்கும் எதிலும்) பரம்பொருள் விளங்கி நிற்கும் அழகிய காட்சியை நன்றாகத் தெரிந்து கொள்வீரே! அரியாம், அரனாம், தேவர்களாம், மானிடராம் அனைத்து உலகங்களிலும்; ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலத்தால் அமைக்கப்பட்ட உலகெங்கிலும், மிருகம், பறவை, மலை, மரம் முதலியவைகளிலும், நற்குணமுள்ள உலகத்துப் பொருட்கள் அனைத்திலும்; நற்குணமில்லாதவைகளிலும்; எப்பொழுதும் இராமனைச் சரணடைந்த சாதுவான தியாகராசன் முதலானவரிடத்தும் பரம்பொருள் விளங்கும் விந்தையை நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள்.



# 64. மந்த$^{3}$ரி - தே$^{3}$சாதி$^{3}$

**பல்லவி**

*பரலோக ப$^{4}$யமுலேக ப$^{4}$வ*
*பாச ப$^{3}$த்து$^{4}$லய் யேத$^{3}$ரு* "பர"..

**அனுபல்லவி**

*கரி வாஜி சிருங்க$^{3}$ார ராம சிபி*
*காது$^{3}$ லெல்ல மனகே க$^{3}$லிகெ$^{3}$னனி* "பர"..

**சரணம்**

*கொன்ன காந்தலனு கன்ன பிட்$^{3}$ட$^{3}$லனு*
*வன்னெ சீரலனு வாந கு$^{3}$டி$^{3}$ஸெலனு*
*தின்னக$^{3}$ா கனி தேவலோகமனி*
*தன்னுகோன்ளுலோ, த்யாக$^{3}$ராஜனுத* "பர"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| பரலோக | - | விண்ணுலகில் |
| பயமுலேக | - | அச்சமின்றி |
| பவபாச | - | சம்சாரவலையில் |
| பத்துலு | - | ஆட்பட்டு |
| அய்யேதரு | - | ஆளாகியுள்ளனர் |
| கரி | - | யானை |
| வாஜி | - | குதிரை |
| சிருங்கார | - | அழகுமிக்க |
| ஆராம | - | பூஞ்சோலை |
| சிபிக | - | பல்லக்கு (சிவிகை) |
| ஆதுலு | - | ஆகியவை |
| எல்ல | - | எல்லாம் |
| மனகே | - | நமக்கே |

| | |
|---|---|
| கல்லெனு+அனி | - உள்ளனவென்று |
| கொன்ன காந்தலனு | - விலை கொடுத்து வாங்கிய பெண்கள் |
| கன்ன | - பெற்ற |
| பிட்டலனு | - பிள்ளைகளை |
| வன்னெசீரலனு | - பலவண்ணச்சேலைகளை |
| வாந | - வானோங்கிய |
| குடிஸெலனு | - வீடுகளை |
| தின்னகாகனி | - உண்மையென்று நினைத்து |
| தேவலோகமு+அனி | - தேவலோகம் என்று |
| தன்னுகோள்ளுலோ | - தனக்குள் மகிழ்ந்து மயக்கம் கொள்ளுவதோ? |
| த்யாகராஜனுத | - தியாகராசனால் வணங்கப்படுபவனே! |

## பொழிப்புரை

மேலுலகத்தைப் பற்றிய பயம் சிறிதுமின்றி உலக வாழ்வில் மக்கள் ஆட்பட்டுக் கிடக்கின்றார்கள். யானை, குதிரை, அழகுமிக்க பூஞ்சோலைகள், பல்லக்கு ஆகியனவெல்லாம் நமக்கே உள்ளன என்னும் தற்பெருமையால் மேலுலக அச்சம் ஒரு சிறிதுமின்றி சம்சார வலையில் ஆட்பட்டுள்ளனர். விலைகொடுத்து வாங்கிய பெண்களையும்; பெற்ற பிள்ளைகளையும்; பலவண்ணச் சேலை முதலான ஆடைகளையும்; வானுயர்ந்த கட்டிடங்களையும் (வீடுகளையும்) உண்மையான (தேவர் உலகம்) இன்பவுலகம் என்று நம்பி தனக்குள்ளாகவே மகிழ்ந்து மயக்கம் கொள்ளலாமோ? இத்தியாகராசனால் வணங்கிப் போற்றப் படுபவனே! இராமனே! மக்கள் மேலான பரமார்த்தமான வழியை அறியாதிருக்கின்றனர்.

***

# 65. பூர்வகல்யாணி - தே$^{3}$சாதி$^{3}$

## பல்லவி

பரலோக ஸாத$^{4}$னமே; மனஸா! "பர"..

## அனுபல்லவி

ஸ்மரலோப$^{4}$ மோஹாதி$^{3}$ பாபுலனு
ஸ்மரியிஞ்சக; ஸ்ரீராம ப$^{4}$ஜன "பர"..

## சரணம்

ஜன நாரி ரோக$^{3}$ ப$^{4}$யாது$^{3}$லசே
ஜக$^{3}$மந்து க$^{3}$ல்கு$^{3}$ து$^{3}$ராஸலசே
தனயாதி$^{3}$ பாந்த$^{4}$வுல ப்$^{4}$ரமசே
தக$^{3}$லநீது$^{3}$; த்யாக$^{3}$ராஜனுதுனி ப$^{4}$ஜன "பர"..

## பதவுரை

| | |
|---|---|
| மனஸா | - ஓ மனமே! |
| ஸ்மர | - காமம் |
| லோப | - உலோபம் |
| மோஹ+ஆதி | - மோகம் முதலான |
| பாபுலனு | - பாவச்செயல்களை |
| ஸ்மரிஞ்சக | - மனதால் நினைக்காமல் |
| ஸ்ரீ ராம பஜன | - மங்களகரமான இராமபஜனையே |
| பரலோக | - விண்ணுலகை அடைய |
| ஸாதனமே | - கருவியாம் |
| ஜன | - மக்கள் |
| நாரி | - பெண் |
| ரோகபய+ஆதுலசே | - நோய் பயத்திற்கே |

ஜகமு+அந்து - உலகில்
கல்கு - உண்டாகும்
துராஸலசே - கெட்ட ஆசைகளையும்
தனய+ஆதி - புதல்வர் முதலான
பாந்தவுல - உறவுகளின்
ப்ரமசே - பற்றுதலையும்
தகலநீது - அண்டவிடாது
த்யாகராஜனுதுனி பஜன - தியாகராசனால் வழிபடப்பட்டவனின் பஜனை

## பொழிப்புரை

ஓ மனமே! மங்களம் நல்கும் இராமன் மீதான பஜனையே விண்ணுலகை அடையத்தக்க சாதனமாகும். காமம், உலோபம், மோகம் முதலிய பாவச்செயல்களை மனத்தினாலும் நினைக்காதே. மக்கள், பெண் நோய்களைக் குறித்த பயத்தையும்; இவ்வுலகின்கண் ஏற்படும் தீய ஆசைகளையும்; புதல்வர்கள் முதலான உறவுகளின் மேல் உண்டாகும் பற்றுதலையும் நெருங்கவிடாது செய்யும் இராமபஜனையே- தியாகராசனால் போற்றி வழிபடுபவனின் பஜனையே - மேலுலகை அடைவதற்கான நற்கருவியாம்.



## 66. பூர்வகல்யாணி - ரூபகம்

**பல்லவி**

*பரிபூர்ணகாமா! ப$^4$ாவமுன மரசினாவா "பரி"..*

**அனுபல்லவி**

*பரம காருணிகோத்தம! ப$^4$வஜீவனஜ ப$^4$வார்ச்சித "பரி"..*

**சரணம்**

*ஸாகேதாதி$^4$ப! நீ முக$^2$ ஸரசீருஹமுனு சூபி*
*ஸாகெடுமதி$^3$ லேதே$^3$டி ஸவரணரா? ராம*
*ஈகலி னனுஸரிஞ்சின ஹீனஜாதி மர்த்யுல*
*சீகாகு ப$^3$ட$^3$க$^3$ தரமே? ஸ்ரீகர த்யாக$^3$ராஜவிநுத "பரி"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| பரிபூர்ணகாம | - | முழுவதுமாக நிறைவேறிய விருப்பங்களை உடையவனே! |
| பாவமுன | - | மனதில் |
| மரசினாவா | - | மறந்துவிட்டாயா |
| பரம | - | மேலான |
| காருணிக உத்தம | - | கருணை உள்ளம் கொண்ட உத்தமனே! |
| பவ | - | சிவபெருமான் |
| ஜீவனஜ | - | பிரம்மா |
| பவார்ச்சித | - | வழிபடப்பட்டவனே! |
| ஸாகேதாதிப | - | அயோத்தியின் தலைவனே! |
| ஸரசீருகமுனு | - | தாமரை போன்ற |
| நீமுக | - | உன் முகத்தை |
| சூபி | - | காட்டி |
| சாகெடு | - | அருள்புரியும் |

| | | |
|---|---|---|
| மதி | - | மனம் |
| லேது+ஏடி | - | இல்லையா என்ன? |
| ஸவரணரா | - | அருள்பாலிக்க வா |
| ராம | - | இராமா! |
| ஈகலினி | - | இக்கலியுகத்தை |
| அனுஸரின்சின | - | அனுசரித்த |
| ஹீனஜாதி | - | கீழ்க்குணமுடையவர் |
| மர்த்யுல | - | மனிதர்களின் |
| சீகாகு | - | தொல்லைகளை |
| படகன் | - | அனுபவிக்க |
| தரமே | - | முடியுமோ? |
| ஶ்ரீ கர | - | மங்களம் உண்டாக்குபவனே! |
| த்யாகராஜவினுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |

## பொழிப்புரை

முழுவதுமாக நிறைவேறின விருப்பங்களை உடையவனே! இரக்கச் சிந்தையாளர் இடையில் சிறந்தோனே! எனது மனதில் உன்னை மறந்துவிட்டேன். மேலானவனே! சிவபெருமானாலும் பிரம்மாவாலும் வழிபடப்பட்டவனே! அயோத்தியின் தலைவனே! உனது தாமரையொத்த திருமுகத்தைக் காட்டி எனக்கு அருள்புரிய மனமில்லையோ? இராமா! அருள் பாலிக்க வருகவே. இக் கலியுகத்தின் தீய பழக்க வழக்கங்களில் மூழ்கிய கீழ்க்குணமுடைய மக்களின் தொல்லைகளைப் பொறுத்துக் கொள்ள முடியுமோ? மங்களம் தருபவனே! என்றும் தியாகராசனால் துதிக்கப்படுபவனே! எனக்கு அருள்புரிய வா!.

***

# 67. கல்யாணி - ரூபகம்

**பல்லவி**

*ப$^4$ஜன ஸேயவே; மனஸா! பரம ப$^4$க்திதோ; "ப$^4$ஜ"..*

**அனுபல்லவி**

*அஜருத்$^3$ராது$^3$லகு பூஸுராது$^3$ல கருதை$^3$ன ராம "ப$^4$ஜ"..*

**சரணம்**

*நாத$^3$ப்ரணவ ஸப்தஸ்வர வேத$^3$ வர்ண சாஸ்த்ரபுரா*
*ணாதி$^3$ சதுஷ் ஷஷ்டி களல பே$^4$த$^3$மு க$^3$லிகே$^3$*
*மோத$^3$கர சரீரமெத்தி முக்தி மார்க்கமுனு தெலியக*
*வாத$^3$ தர்க மேல? ஸ்ரீமதாதி$^3$ த்யாகராஜ நுதுனி*
*"ப$^4$ஜ"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மனஸா | - | ஓ மனமே! |
| பஜன ஸேயவே | - | பஜனை செய்கவே! |
| பரம பக்திதோ | - | மேலான பக்தியுடன் |
| அஜ | - | பிரம்மா |
| ருத்ர | - | சிவன் |
| ஆதுலகு | - | முதலானவர்களுக்கும் |
| பூஸுர | - | அந்தணர் |
| ஆதுலகு | - | ஆகியவர்களுக்கும் |
| அருதைன | - | அருமையான / அரிதான |
| ராம (பஜன ஸேயவே) | - | இராம (பஜனை செய்கவே' |
| நாத ப்ரணவ | - | நாதம், பிரணவம் |
| ஸப்தஸ்வர | - | ஏழு சுரங்கள் |
| வேத வர்ண சாஸ்த்ர | - | வேதம், வர்ணங்கள், சாத்திரங்கள் |

| | | |
|---|---|---|
| புராணாதி | - | புராணங்கள் முதலான |
| சதுஷ் ஷஷ்டி களல | - | அறுபத்து நான்கு கலைகளின் |
| பேதமு கலிகே | - | வேறுபாடுகளை உணர்ந்த |
| மோதகர சரீரமு எத்தி | - | இன்பமான மானிடப் பிறப்பு எய்தியும் |
| முக்திமார்க்கமுனுதெலியக- | | முக்தி மார்க்கத்தை அறியாமல் |
| வாததர்க்கமு+ஏல | - | வாத தர்க்கங்கள் எதற்கு? |
| ஸ்ரீமத்+ஆதி | - | மங்களகராமான ஆதியானவன் |
| த்யாகராஜநுதுனி | - | தியாகராசனால் துதிக்கப்படுபவன் |

*பொழிப்புரை*

ஓ மனமே! நீ மேலான பக்தியுடன் கூடி இராம பஜனை செய்வாயாக. பிரம்மா, சிவன் ஆகியவர்களும் அந்தணர் முதலானவர்களும் அருமையான இராம பஜனை செய்கிறார்கள்! நாதம், பிரணவம், ஏழு சுரங்கள், வேத வர்ணங்கள், சாத்திரங்கள், புராணங்கள் முதலான அறுபத்து நான்கு கலைகளினுடைய வேறுபாடுகளை எல்லாம் உணரக்கூடிய இன்பமயமான மானிடப் பிறவி எய்தியும் முக்தி அடையும் வழியை அறிய முடியாத வண்ணம் செய்யும் வீண் வாதங்களும் தர்க்கங்களும் எதற்கு? மங்களகரமானவனும் ஆதியானவனும், தியாகராசனால் வணங்கப்படுபவனுமாகிய இராமனின் வழிபாட்டை மனமே! நீ செய்திடுவாயாக.



# 68. சந்த்ரஜ்யோதி - தே$^{3}$சாதி$^{3}$

## பல்லவி

*பா$^{3}$கா$^{3}$யனய்யா நீமாயலெந்தோ;*
*ப்ரஹ்மகைன கொனியாட$^{3}$ தரமா?* "பா$^{3}$"..

## அனுபல்லவி

*ஈ கா$^{3}$ருட$^{3}$முனு யொனரிஞ்சுசுனு*
*நே காத$^{3}$னுசு பல்கேத$^{3}$வு* "பா$^{3}$"..

## சரணம்

*அலநாடு$^{3}$ கௌரவுல நணசமன,*
*அலரி தோஸமனே நருனி ஜூசி, பாப*
*ப$^{2}$லமு நீகு தனகு லேத$^{3}$னி சக்கக$^{3}$*
*பாலமுனு ஸேயலேதா? த்யாக$^{3}$ராஜனுத* "பா$^{3}$"..

## பதவுரை

| | |
|---|---|
| பாகு+ஆயெனு | - நன்றாய் இருக்கிறது |
| அய்யா | - ஐயனே! |
| நீமாயலு எந்தோ | - உனது மாயைகள் எவ்வளவோ |
| ப்ரஹ்மகு+அயினன் | - பிரம்மனால் கூட |
| கொனியாட | - புகழ்வதற்கு |
| தரமா? | - முடியுமா? |
| ஈகாருடமுனு | - இம்மாயைகளை |
| ஒனரிஞ்சுசுனு | - செய்து கொண்டே |
| நே காது | - நான் அல்ல |
| அனுசு | - என்று |
| பல்கேதவு | - கூறுகிறாய் |
| அலநாடு | - அந்தநாள் |

| | | |
|---|---|---|
| கௌரவுலனு | - | துரியோதனாதியரை |
| அணசமன | - | அழிக்கச் சொன்ன பொழுது |
| அலரி | - | துன்பப்பட்டு |
| தோஷமு+அனே | - | தப்பென்ற |
| நருனின் | - | பார்த்தனை |
| சூசி | - | பார்த்து |
| பாபபலமு | - | வினைப்பயன் |
| நீகு | - | உனக்கு |
| தனகு | - | தனக்கு |
| லேது+அனி | - | இல்லையென |
| சக்கக | - | அருமையாக |
| பாலனமு | - | முறைமை |
| சேயலேதா | - | செய்யவில்லையா? |
| த்யாகராஜனுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |

## பொழிப்புரை

ஐயனே! உனது மாயைகள் எல்லாம் வெகு நன்றாய் இருக்கின்றன. உன் மாயவித்தையினைப் பிரம்மனால்கூட அறிந்து புகழ்தற்கு இயலுமோ? நீயே இம்மாயைகளைப் புரிந்துகொண்டு "நான் அல்ல" என்றும் செப்புகின்றாய்! அன்று துரியோதனாதியரை ஒழித்து விடுவென்று நீ அர்ச்சுனனிடம் கூறியபொழுது; துன்பத்துடன் அது தப்பென்று அர்ச்சுனன் முறையிட, நீயோ, "பாவத்தின் பலன் உனக்கோ எனக்கோ இல்லை" என அருமையாக எடுத்துக்கூறி அவனை முறைமைப்படுத்தவில்லையா? என்றும் தியாகராசனால் துதிக்கப்படுபவனே! ஐயனே! உனது மாயைகள் அனைத்தும் வெகுநன்று.

***

## 69. சூலினி - தே$^{3}$சாதி$^{3}$

**பல்லவி**

*ப்ராணநாத$^{2}$! பி$^{3}$ரான ப்$^{3}$ரோவவே* "ப்ரா"..

**அனுபல்லவி**

*வேணுகா$^{3}$னமுசே பதி$^{3}$யாரு*
*வேல கோ$^{3}$பிகல பாலிஞ்சி யேலே* "ப்ரா"..

**சரணம்**

*வென்ன மீகட$^{3}$ல வேட்$^{3}$க மீரக$^{3}$னு*
*கன்ன பின்னவாண்ட்$^{3}$ர கடு$^{3}$புநிஞ்சி*
*தின்னகா$^{3}$ வெலயு தி$^{3}$வ்யரூபமா!*
*சின்னிக்ருஷ்ணா! தயசேஸி த்யாக$^{3}$ராஜ* "ப்ரா"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ப்ராணநாத | - | உயிர்களின் தலைவனே! |
| பிரான | - | விரைந்து |
| ப்ரோவவே | - | காப்பாற்றுவாயாக |
| வேணுகானமுசே | - | புல்லாங்குழலின் இன்னிசையால் |
| பதியாருவேல | - | பதினாறு ஆயிரம் |
| கோபிகல | - | கோபியர்களை |
| பாலிஞ்சி | - | காத்து |
| யேலே | - | ஆண்டருளும் |
| வென்ன | - | வெண்ணெய் |
| மீகடல | - | பாலாடை |
| வேட்கமீரகனு | - | வேடிக்கை மிகுதியால் |
| கன்னபின்னவாண்ட்ர | - | சின்னஞ்சிறு குழந்தைகளின் |
| கடுபு நிஞ்சி | - | வயிறு நிறைத்து |

| | | |
|---|---|---|
| தின்னகா | - | ஒன்றும் அறியாதவனாய் |
| வெலயு | - | விளங்கும் |
| திவ்யரூபமா | - | அழகு உருவானவன் |
| சின்னக்ருஷ்ண | - | பாலகிருஷ்ணனே! |
| தயசேஸி | - | தயவுசெய்து |
| த்யாகராஜ | - | தியாகராசனை |

## பொழிப்புரை

உயிர்களுக்கெல்லாம் தலைவனே! விரைந்து (என்னை) காப்பாற்றுவாயாக! (உனது) புல்லாங்குழலின் இன்னிசையால் பதினாறாயிரம் கோபியர்களைக் காத்து ஆண்டருளும் தலைவனே! விரைந்து காப்பாற்று. வெண்ணெயும் பாலாடையும் வேடிக்கை மிகுதியால் (திருடிச்) சின்னஞ்சிறு குழந்தைகளின் வயிறு நிறைத்து நல்லவனாய் விளங்கும் அழகே உருவானவனே! பாலகிருஷ்ணனே! தயவுசெய்து இத்தியாகராசனை விரைந்து காப்பாற்றுவாயாக!



## 70. பஹுதா$^3$ரி - ஆதி$^3$

**பல்லவி**

*ப்$^3$ரோவ பா$^4$ரமா? ரகு$^4$ராமா*
*பு$^4$வனமெல்ல நீவை நன்னொகனி "ப்ரோ"..*

**அனுபல்லவி**

*ஸ்ரீ வாஸுதே$^3$வ! அண்ட$^3$ கோட்ல*
*குக்ஷினி நுன்சுகோலேதா$^3$? நன்னு "ப்ரோ"..*

**சரணம்**

*கலசாம்புதி$^4$லோ த$^3$யதோநம*
*ருலகை, யதி$^3$கா$^3$க கோ$^3$பி*
*கலகை கொண்டலெத்த லேதா$^3$?*
*கருணாகர! த்யாக$^3$ராஜுனி "ப்ரோ"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ரகுராமா | - | ஓ இரகுராமா! |
| நீவு+அயி | - | நீயே ஆகி |
| ஸ்ரீ வாஸுதேவ | - | ஸ்ரீ வாஸுதேவனே! |
| நன்னு ஒகனி | - | என் ஒருத்தனை |
| ப்ரோவ | - | காத்தருளுவது |
| பாரமா | - | சுமையா? |
| அண்டகோட்ல | - | அண்டங்கள் அனைத்தையும் |
| குக்ஷினின் | - | வயிற்றில் |
| உன்சுகோலேதா | - | அடக்கிக் கொண்டிருக்க இல்லையா? |
| நன்னு | - | என்னை |
| கலச + அம்புதிலோ | - | கடலின் (அமிர்த) கலசத்தை |
| தயதோனு | - | கருணையோடு |

| | | |
|---|---|---|
| அமருலகை | - | தேவர்களுக்காகவும் |
| அதிகாக | - | அதோடு மட்டுமில்லாது |
| கோபிகலகை | - | கோபியர்களுக்காக |
| கொண்டலு | - | மலைகளை (கோவர்த்தனகிரியை) |
| எத்த லேதா | - | உயர்த்தி எடுக்கவில்லையா? |
| கருணாகர | - | கருணைஉள்ளத்தவனே! |
| த்யாகராஜுனி | - | தியாகராசனை |

## பொழிப்புரை

ஓ இரகுராமா! என்னொருத்தனைக் காத்தருள்வது உனக்குச் சுமையா? உலகமெலாம் நீயே ஆகினாய்! ஸ்ரீ வாசுதேவனே! அண்டக்கள் அனைத்தினையும் உன்திரு வயிற்றில் அடக்கிக் கொண்டிருக்கவில்லையா? (அப்படிப்பட்ட உனக்கு) என்னைக் காத்தருள்வது சிரமமா? கருணை உள்ளத்தவனே! (முன்பு ஒருமுறை) கடலின் அமிர்தகலசத்தை மனமிரங்கி தேவர்களுக்காவும், கோவர்த்தன மலையைக் கோபியர்களுக்காகவும் 'நீ உயர்த்தியெடுக்கவில்லையா? தியாகராசனால் என்றும் துதிக்கப்படுபவனே! இரகுராமா! என்னொருத்தனைக் காப்பது உனக்குச்சிரமமாகுமோ?



## 71. பை$^{4}$ரவி - தே$^{3}$சாதி$^{3}$

### பல்லவி

மரியாத$^{3}$ கா$^{3}$தயா - மனுபவ தே$^{3}$மயா "மரி"..

### அனுபல்லவி

ஸரிவாரிலோ நன்னு சௌக சேயுடெல்ல ஸ்ரீ
ஹரி ஹரி நீவண்டி கருணாநிதி$^{4}$கி "மரி"..

### சரணம்

தனவார லன்யுலனே தாரதம்யமு
க$^{4}$னுடை$^{3}$ன தாசரதி$^{2}$கே கலத$^{3}$னி கீர்த்தி கா$^{3}$தா$^{3}$?
நினு பாயனேரனி நனு ப்$^{3}$ரோவ குண்டெ$^{3}$டி$^{3}$தி$^{3}$
த$^{4}$னத$^{3}$ ஸகு$^{2}$ட$^{3}$கு$^{3}$ த்யாக$^{3}$ராஜ பூஜித "மரி"..

### பதவுரை

| | | |
|---|---|---|
| மரியாத காதயா | - | மரியாதையல்ல ஐயனே! |
| மனுபவு | - | காத்தருளாதது(என்பது) |
| அதி+ஏமி+ஐயா | - | அதென்ன ஐயனே? |
| ஸரிவாரிலோ | - | சமமானவர்களுக்கு இடையில் |
| நன்னு | - | என்னை |
| சௌகசேயுட+எல்ல | - | இழிவாகப் பார்ப்பதெல்லாம் |
| ஸ்ரீ ஹரி ஹரி | - | மங்களகரமான தேவதேவனே! |
| நீ வண்டி | - | உன்போன்ற |
| கருணாநிதிகி | - | கருணை வள்ளலுக்கு |
| தனவாரலு | - | தன்னைச் சார்ந்தவர்கள் |
| அன்யுலு | - | அன்னியர்கள் |
| அநே | - | என்றே |
| தாரதம்யமு | - | வேறுபாடு |
| முனு | - | முன்பு |
| கனுடு+அயின | - | உயர்ந்தவனான |

| | | |
|---|---|---|
| தாசரதிகே | - | இராமனுக்கே |
| கலது+அனி | - | உண்டென்று |
| கீர்த்திகாகா | - | புகழ்அல்லவா! |
| நினு | - | உன்னை |
| பாயனேரனி | - | பிரிவதற்கியலாது |
| நனு | - | என்னை |
| ப்ரோவகுண்டேதி | - | காத்தருளாது இருத்தல் |
| தனதஸகுடகு | - | குபேரனுக்குத் தோழனாகிய |
| த்யாகராஜபூஜித | - | தியாகராசனால் வணங்கப்பட்டவனே! |

*பொழிப்புரை*

மரியாதையல்ல ஐயனே! என்னைக் காத்தருளாது இருத்தலென்பது என்ன ஐயனே? எனக்குச் சமமானவர்களுக்கிடையே என்னை இழிவாகக் காண்பதெல்லாம் மங்களகரமான தேவதேவனாகிய உன்போன்ற கருணைவள்ளலுக்கு மரியாதையல்ல. தன்னைச் சார்ந்தவர், சாராதவர்களென்ற வேறுபாடு முன்பு உயர்ந்தவனான இராமனுக்கே உண்டென்றது உலகறிந்த புகழல்லவா! குபேரனுக்குத் தோழனாகிய தியாகராசனால் வணங்கப்பட்டவனே! உன்னைப் பிரிய இயலாத என்னைக் காத்தருளாது இருத்தல் என்பது உன்போன்றவனுக்கு மரியாதை அல்ல.



# 72. ஆபோ4கி3 - ஆதி3

**பல்லவி**

*மனஸுநில்ப சக்தி லேகபோதே*
*மது4ரக4ண்ட விருல பூஜேமி சேயுனு?* 'மன'

**அனுபல்லவி**

*க4ன து3ர்மது3டை3 தாமுனிகி3தே*
*காவேரி மந்த3ாகினி எடுப்ரோசுனு* 'மன'

**சரணம்**

*ஸோமித3ம்ம ஸொகஸு கா3ண்ட்ர கோரிதே*
*ஸோமயாஜி ஸ்வர்கார்ஹுடௌ3னோ?*
*காமக்ரோது4டு3 தப மொனர்சிதே*
*காசிரக்ஷிஞ்சுனே த்யாக3ராஜனுத* "வ"

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மனஸுநில்ப | - | மனதை நிலைநிறுத்த |
| சக்தி | - | திறன் |
| லேகபோதே | - | இல்லாது போனால் |
| மதுரகண்ட | - | இனிய மணியோசை |
| விருல | - | மலர்களின் |
| பூஜ+ஏமிசேயுனு | - | பூசனை என்ன செய்யும்? |
| கனதுர்மதுடை | - | மிகவும் மதம் பிடித்தவனாகி |
| தா | - | தான் |
| முனிகிதே | - | நீராடினால் |
| காவேரி மந்தாகினி | - | காவேரியும் கங்கையும் |
| எடுப்ரோசுனு | - | எப்படிக் காப்பாற்றும்? |
| ஸோமிதம்ம | - | சோமயாகம் புரிபவரின் மனைவி |

| | | |
|---|---|---|
| ஸொகஸு்காண்ட்ரன் | - | அழகிய இளைஞர்களை |
| கோரிதே | - | விரும்பினால் |
| ஸோமயாஜி | - | சோமயாகம்செய்பவன் |
| ஸ்வர்க+அர்ஹுடு | - | சுவர்க்கத்திற்குத் |
| +அவுனோ | | தகுதியுள்ளவன் ஆவானா? |
| காமக்ரோதுடு | - | காமகுரோதமுள்ளவன் |
| தபம்பு | - | தவம் |
| ஒனர்சிதே | - | செய்தால் |
| காசி | - | காத்து |
| ரக்ஷிஞ்சுனே | - | காக்குமா? |
| த்யாகராஜநுத | - | தியாகராசனால் வணங்கப்படுபவனே! |

## பொழிப்புரை

தியாகராசனால் வணங்கப்படுபவனே! தன் மனதை அடக்கியாளும் திறன் இல்லாதுபோனால் இனியமணி ஓசையுடன் கூடிய மலர்களாலான பூசனை செய்தும் என்ன பயன்? தான் என்ற மிகுந்த செருக்குடன் ஒருவன் நீரில் மூழ்கினால் காவேரியும் கங்கையும் தான் எங்ஙனம் காக்கும்? சோமயாகம் புரிகின்றவனின் மனைவியானவள் அழகிய இளைஞர்களுடான இன்பவாழ்வை விரும்பினால் அந்த யாகம் புரிபவன் தான் சுவர்க்கத்திற்குத் தகுதியுள்ளவனாக ஆவானா? காமகுரோத குணங்களை உடையவன் தவம் மேற் கொண்டாலும் அத்தவம்தான் காப்பாற்றுமோ? புண்ணிய பூமியான காசியும்தான் காக்குமா?



## 73. சங்கராப⁴ரணம் - ரூபகம்

பல்லவி

*மனஸு ஸ்வாதீ⁴னமைன யா க⁴னுனிகி*
*மரி மந்த்ர தந்த்ரமு லேல?* "மந"

அனுபல்லவி

*தனுவு னிதானு க³மத³னி யெஞ்சுவானிகி*
*தபஸு சேயநேல? த³சரத⁴ ப³ால!* "மந"

சரணம்

*அன்னி நீவனுசு யெஞ்சின வானிகி*
*யாச்ரம பே⁴த³முலேல?*
*கன்னுக³ட்டு மாயலனி யெஞ்சுவானிகி*
*காந்தல ப்ரமலேல? தசரத⁴ ப³ால!* "மன'

*ஆஜன்மமு துர்விஷய ரஹிதுனிகி க³*
*தாக³த மிகயேல?*
*ராஜராஜேச நிரஞ்ஜன நிருபம*
*ராஜவதன த்யாக³ராஜவிநுத* "மன'

பதவுரை

| | | |
|---|---|---|
| மனஸு | - | மனது |
| ஸ்வாதீனமு | - | தன்வசப்பட்டு |
| அயின | - | ஆன |
| கனுனிகி | - | அந்த மஹானுக்கு |
| மரி | - | இன்னும் |
| மந்த்ர தந்த்ரமுலு | - | மந்திரங்களும் தந்திரங்களும் |
| ஏல | - | எதற்கு? |
| தனுவு | - | உடம்பு |

| | | |
|---|---|---|
| தானு | - | தான |
| காது+அனி | - | அல்லவென்று |
| எஞ்சுவானிகி | - | எண்ணுகின்றவனுக்கு |
| தபஸு | - | தவம் |
| சேயனு+ஏல | - | செய்வது எதற்கு? |
| தசரதபால | - | தசரதனின் மைந்தனே! |
| அன்னி | - | அனைத்தும் |
| நீவு+அனுசு | - | நீயென்று |
| எஞ்சினவானிகி | - | எண்ணியவனுக்கு |
| ஆச்ரம | - | ஆசிரமம் (என்ற) |
| பேதமுலு+ஏல | - | வேறுபாடு எதற்கு? |
| கன்னுகட்டு மாயலு | - | கண்கட்டு வித்தைகள் |
| அனி | - | என்று |
| எஞ்சுவானிகி | - | எண்ணுபவனுக்கு |
| காந்தல | - | பெண்டிர் (முதலான) |
| தசரதபால | - | தசரதனின் மைந்தனே! |
| ஆஜன்மமு | - | பிறப்பு முதல் |
| துர்விஷய ரஹிதுனிகி | - | கெட்ட விஷயங்களை விட்டவர்களுக்கு |
| கதாகதமு | - | கடந்தகால, எதிர்காலசிந்தனை |
| இக+ஏல | - | இன்னுமெதற்கு? |
| ராஜராஜேச | - | இராஜாதிராஜர்களுக்கும் ஈசனே |
| நிரஞ்ஜன | - | களங்கமற்றவனே! |
| நிருபம | - | ஒப்பற்றவனே! |
| ராஜவதன | - | மதிமுகத்தானே! |
| த்யாகராஜவிநுத | - | தியாகராசனால் போற்றப்பட்டவனே! |

## பொழிப்புரை

தசரதனின் மைந்தனே! மனது தன்வசப்பட்ட உயர்ந்தவனுக்கு (ஞானிக்கு) இன்னும் மந்திரங்களும் தந்திரங்களும் எதற்கு? தன் உடம்புதான் அல்லவென்று எண்ணுகின்றவனுக்கு தவம் செய்வது என்பது எதற்கு? தசரதமைந்தனான இராமா! எல்லாம் நீதான் என்று

எண்ணுபவனுக்கு (பிரம்மசாரி, கிருஹஸ்தம், வானப்ரஸ்தம், சந்நியாசம் என்ற) ஆசிரமங்களின் வேறுபாடுகள் எதற்கு? (உலகம்) கண்கட்டு வித்தைகள் என்று எண்ணுகின்றவனுக்குப் பெண்டீர், பொருள் முதலான விருப்புகள் எதற்கு? பிறப்பு முதலாக கெட்ட விஷயங்களையே அறியாதவனுக்கு இறந்தகால, எதிர்காலச் சிந்தனை ஏன்? இராஜாதிராஜர்களுக்கு ஈசனே! களங்கமற்றவனே! ஒப்பற்றவனே! மதிமுகத்தானே! இத்தியாகராசனால் போற்றப்படும் தசரத மைந்தனே!.

***

## 74. ரிஷப[4]ப்ரிய - தே[3]சாதி[3]

**பல்லவி**

*மஹிம த[3]க்கிஞ்சுகோவய்ய*
*மஹினி ஸத்ய ஸ்வரூபுட[3]னு*
*மஹிராஜ ராஜேஸ்வர நீ* "ம"..

**அனுபல்லவி**

*விஹிதமார்க[3] பக்துலுகா[3] மஹாத்முலு*
*வெலயக[3] வினலேதா[3] ஸ்வகீயமகு[3]* "ம"..

**சரணம்**

*பனிகிரானி பனுலுசேஸி சரணனு*
*வாரி வெதலு தீர்ச்சி ப்[3]ரோசிதிவே*
*தனிவி தீர நம்மினாட[3]னுசு ஸ்ரீ*
*த்யாகராஜனுத தப்புலாட[3]கு* "ம"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மஹிராஜராஜேஸ்வர | - | உலக அரசர்களுக்கெல்லாம் அரசனாய் விளங்குபவனே |
| நீ | - | உனது |
| மஹிம | - | மகிமையை |
| தக்கிஞ்சுகோவய்ய | - | நிலைநிறுத்திக்கொள் ஐயனே! |
| மஹினி | - | உலகில் |
| ஸத்யஸ்வரூபுடு+அனு | - | சத்தியமே உருவாகக்கொண்டு விளங்குபவனென்ற |
| விஹித மார்க | - | மெய்யானபக்திநெறியைப் பின்பற்றும் |
| பக்துலுகா | - | சிறந்த பக்தர்களான |
| மஹாத்முலு | - | மகான்கள் |
| வெலயக | - | விளங்க |
| வினலேதா | - | கேட்கவில்லையா |
| ஸ்வகீயமகு | - | தன்னுடையதான |
| பனிகிரானி | - | பயன்படாத |
| பனலுசேஸி | - | பணிகளைச் செய்து |
| சரணு+அனு | - | சரணமென்று |
| வாரி | - | அடைந்தவர்களின் |
| வெதலு | - | துன்பங்கள் |
| தீர்சி | - | நீக்கி / தீர்த்து |
| ப்ரோசிதிவே | - | காப்பாற்றினாயே! |
| தனவிதீர | - | மனமார |
| நம்மிநாடு | - | நம்பியவன் |
| அனுசு | - | என்று |
| தப்புலாடகு | - | தவறி நடந்து கொள்ளாதே |
| த்யாகராஜநுத | - | தியாகராசனால் வணங்கப்பட்டவனே! |

**பொழிப்புரை**

உலகத்து அரசர்களுக்கு எல்லாம் அரசனாய் விளங்குகின்றவனே! உன்னுடைய பெருமையினை(மகிமையை) நிலை நிறுத்திக்கொள் ஐயனே! உலகில் சத்தியமே

உருக்கொண்டு விளங்குபவன் என்ற உன் பெருமையை நிலைநிறுத்திக்கொள். மெய்யான பக்தி நெறியைப் பின்பற்றும் சிறந்த பக்தர்களான மகான்கள் விளக்கமுற நீ கேள்விப்படவில்லையா? தன்னுடையதான, பயன் நல்காத செயல்களைப் புரிந்துவிட்டு உன்னைச் சரணமென்று வந்த அவர்களின் இன்னல்களை நீக்கிக் காப்பாற்றினாயே! இத்தியாகராசனால் வணங்கப்பட்டவனே உன்னை மனமார நம்பியவன் என்று என்னிடத்தில் தவறி நடந்து கொள்ளாதே. சத்தியமே வடிவானவன் என்ற உன் பெருமையை நிலைநாட்டிக் கொள் ஐயனே!

***

## 75. ரவிசந்த்$^{3}$ரிக - தே$^{3}$சாதி$^{3}$

**பல்லவி**

*மாகேலரா விசாரமு? - மருக$^{3}$ன்ன ஸ்ரீராமசந்த்ரா! "மா"..*

**அனுபல்லவி**

*ஸாகேத ராஜகுமார!-ஸத்ப$^{4}$க்த மந்த$^{3}$ார! ஸ்ரீகர! "மா"..*

**சரணம்**

*ஜத கூ$^{3}$ர்சி நாடக ஸூத்ரமுனு*
*ஜக$^{3}$மெல்ல மெச்சக$^{3}$ கரமுன நிடி$^{3}$*
*க$^{3}$தி தப்பக யாடிஞ்சேவு ஸாமீ!*
*நத த்யாக$^{3}$ராஜ! கிரீச விநுத; "மா"..*

பதவுரை

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ராமச்சந்த்ரா | - | மங்களகரமான இராமச்சந்திரனே! |
| மாகு+ஏலரா | - | எங்களுக்கென்ன ஐயனே! |
| விசாரமு | - | கவலை |
| மருகன்ன | - | காமனைப்பெற்ற |
| ஸாகேத ராஜகுமார | - | அயோத்தியின் மன்னர் திருமகனே |
| ஸத்பக்த மந்தார | - | மெய்யானபக்தர்களின் மனதில் குடி கொண்டிருப்பவனே! |
| ஸ்ரீ கர | - | செல்வத்தை அளிப்பவனே! |
| ஜத கூர்சி | - | இணை சேர்த்து |
| நாடக ஸூத்ரமுனு | - | (வாழ்வெனும்) நாடகச் சூத்திரக்கயிற்றை |
| ஜகமு+எல்ல | - | உலகெல்லாம் |
| மெச்சக | - | புகழும்படி |
| கரமுனன் | - | கைகளில் |
| இடி | - | பிடித்து |
| கதிதப்பக | - | நெறிதவறாது |
| ஆடிஞ்சேவு ஸாமீ | - | ஆட்டுவிக்கின்றாய் அல்லவா |
| நுத த்யாகராஜ | - | தியாகராசனால் வணங்கப்படுபவனே |
| கிரீச விநுத | - | சிவனால் போற்றப்படுபவனே |

பொழிப்புரை

காமனைப் பெற்ற மங்களகரமான இராமச்சந்திரனே! எமக்கென்ன கவலை ஐயா? அயோத்தியின் மன்னர் திருமகனே! மெய்யான பக்தர்களின் மனதில் குடிகொண்டிருப்பவனே! செல்வத்தை அளிப்பவனே! நீ உலகமக்களை இணை சேர்த்து வாழ்வென்னும் நாடகத்தின் மூலக்கயிற்றைக் கைகளில் பிடித்து உலகெல்லாம் புகழும்படி நெறி பிறழாது ஆட்டுவிக்கிறாய் அல்லவா! எனவே எமக்கு என்ன இடர்ப்பாடு? சிவனால் போற்றப்படுபவனே! இத்தியாகராசன் வணங்குபவனே! எமக்கென்ன கவலை?

# 76. ஸ்ரீரஞ்ஜனி - ஆதி$^{3}$

**பல்லவி**

*மாரு ப$^{3}$ல்ககுன்னா வேமிரா? - மா மனோரமண!"மா"..*

**அனுபல்லவி**

*ஜார சோர ப$^{4}$ஜன சேஸிதினா? - ஸாகேதஸத$^{3}$ன! "மா"..*

**சரணம்**

*தூ$^{3}$ர பா$^{4}$ரமந்து$^{3}$, நா ஹ்ருத*
*யாரவிந்த$^{3}$ மந்து$^{3}$ நெலகொன்ன*
*தா$^{3}$ரி நெரிகி$^{3}$ ஸந்தஸில்லி னட்டி*
*த்யாக$^{3}$ராஜநுத "மா"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மாரு பல்கக | - | பதில் கூறாமல் |
| உன்னாவு+எமிரா | - | இருக்கிறாயே ஏன் ஐயா? |
| மா | - | எனது |
| மனோரமண | - | மனத்திற்கினியவனே! |
| ஜார | - | பெண்பித்தர் |
| சோர | - | திருடர்களை |
| பஜன | - | போற்றுதல் |
| சேஸிதினா | - | செய்தேனா |
| ஸாகேதஸதன | - | அயோத்தியில் உறைபவனே! |
| தூர பார மந்து | - | வெகு தூரத்தில் இருப்பினும் |
| நா | - | எனது |
| ஹ்ருதய+அரவிந்தமு +அந்து | - | இதயத் தாமரையில் அமர்ந்து |
| நெலகொனு | - | நிலைத்திருக்கும் |
| தாரினி | - | வழியை |

| | | |
|---|---|---|
| எரிகி | - | அறிந்து |
| ஸந்தஸில்லினட்டி | - | மகிழ்வுற்றிருக்கும் |
| த்யாகராஜநுத | - | தியாகராசனால் வணங்கப்பெறுபவனே! |

## பொழிப்புரை

எமது மனத்திற்கு இனியவனே! ஏன் மறுமொழி கூறாமல் இருக்கின்றாய் ஐயனே? பெண் பித்தர், திருடர்கள் முதலானவர்களைப் போற்றி பஜனை செய்தேனா? அயோத்தியில் உறைபவனே! நீ வெகுதொலைவில் இருப்பினும் எனது இதயமெனும் தாமரையின் மீது (அமர்ந்து) வீற்றிருக்க உன் நெறியை அறிந்து மகிழ்வுற்றிருக்கும் எனக்கு நீ மறுமொழி கூறாமல் இருப்பது ஏன் ஐயா? தியாகராசனால் வணங்கப் பெறுபவனே!



# 77. ஹமிருகல்யாணி - ஆதி$^3$

**பல்லவி**

*மா$^3$னமு லே$^3$தா தனவாட$^3$னி அபி$^3$மானமு லேதா$^3$?"மா"..*

**அனுபல்லவி**

*கானமுரா நீ வலெ நிர்மோஹினி*
*க$^3$ானருசி தெலியு குசலவ ஜனக! "மா"..*

**சரணம்**

*நீ ஸமுக$^2$ான ரவி தனயுடு$^3$ நினு*
*பாஸலு பல்கக ரோஸமுதோ ஸிம்*
*ஹாஸனாதி$^4$பதி ஜேஸின நீகு*
*தா$^3$ஸுடை$^3$ன த்யாக$^3$ராஜ கரார்சித! "மா"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மானமு லேதா | - | வெட்கம் இல்லையா |
| தனவாடு+அனி | - | தன்னைச் சேர்ந்தவன் என்ற |
| அபிமானமு | - | அபிமானம் |
| லேதா | - | இல்லையா |
| கானமுரா | - | காண முடியாது ஐயனே! |
| நீ வலெ | - | உன்னைப் போன்ற |
| நிர்மோஹினி | - | பற்றற்றவனை |
| கானருசி தெலியு | - | இசையின் சுவை அறியும் |
| குசலவ ஜனக! | - | குச, லவர்களை பெற்றவனே! |
| நீ ஸமுகான | - | உன்னிடத்தில் |
| ரவிதனயுடு | - | சூரியமைந்தனான சுக்கிரீவன் |
| நின்னு | - | உன்னை |
| பாஸலு | - | இகழ்மொழி |
| பல்கக | - | பேசியபொழுதும் |

| | | |
|---|---|---|
| ரோஸமுதோ | - | ரோஷத்தோடு |
| ஸிம்ஹாஸன+அதிபதி | - | அரியணையில் அரசனாக |
| சேஸின | - | செய்த |
| நீகு | - | உனக்கு |
| தாஸுடைன | - | பக்தனான |
| த்யாகராஜகர+அர்சித | - | தியாகராசனின் கைகளால் அருச்சிக்கப்படுபவனே! |

பொழிப்புரை

மானமில்லையோ உனக்கு? அல்லது நான் உன்னைச் சார்ந்தவன் என்ற அபிமானமாவது இல்லையா? உன்னைப் போன்ற பற்றற்றவனை எங்கும் காணமுடியாது ஐயா! இசையின் சுவையறியும் குச. லவர்களைப் பெற்ற தந்தையே! உன் கூட்டத்தில் சூரிய மைந்தனான சுக்கிரீவன் உன்னை ரோஷத்தோடு பேசியபொழுதும் கூட அவனை அரியணை யேற்றி அரசனாக அமரச்செய்தாய். உனக்கு பக்தனான இத்தியாகராசனின் கைகளால் அருச்சிக்கப்படுபவனே! உனக்கு மானம் இல்லையா? அன்றி உன்னைச் சார்ந்தவனான என்னிடம் நம்பிக்கை இல்லையா?.



## 78. காம்போ4ஜி - தே3சாதி3

**பல்லவி**

*மாஜானகி செட்டபட்டக3ா மஹாராஜ வைதிவி" மா"..*

**அனுபல்லவி**

*ராஜ ராஜவர! ராஜீவாக்ஷ! வினு*
*ராவணாரி யனி ராஜில்லு கீர்தியு "மா"..*

**சரணம்**

*கானகேகி3 யாக்ஞ மீரக மாயா*
*கார முனிசி சிகி2 செந்தனே யுண்டி3*
*தானவுனி வெண்டனே சனி-யசோக தருமூலனுண்டி*
*வானி மாடலகு கோபகிஞ்சி கண்ட*
*வதி4யிஞ்சகனே யுண்டி3*
*ஸ்ரீ நாயக! யசமு நீகே க3ல்க3*
*ஜேயலேதா3? த்யாகராஜ பரிபால! "மா"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ராஜராஜ வர | - | மன்னர்களுக்கெல்லாம் மன்னனாக விளங்குபவனே! |
| ராஜிவாக்ஷ | - | தாமரைக் கண்ணனே! |
| வினு! | - | கேள்! |
| மாஜானகி | - | எங்கள் ஜானகியை |
| செட்டபட்டகா | - | கைப்பற்றியதால்தான் |
| மஹாராஜவு | - | மஹாராஜன் |
| அயிதிவி | - | ஆனாய் |
| ராவண+அரியனி | - | இராவணனைக் கொன்றவன் என்று |

| | |
|---|---|
| மஹாராஜவு | - சக்ரவர்த்தியென்று |
| ராஜில்லு | - விளங்கும் |
| கீர்தியு | - புகழை |
| அயதிவி | - பெற்றாய்! |
| யாக்ஞ | - ஆணை |
| கானகு+ஏகி | - காட்டிற்குச் சென்று |
| வாக்குமீரக | - (உன்) ஆணையை மீறாமல் |
| மாயாகாரமு | - மாயை உருவம் |
| உனிசி | - தரித்துக் கொண்டு |
| சிகி | - தீயின் |
| செந்தனேயுண்டி | - அருகில் இருக்கச் செய்து |
| தானவுனி | - அரக்கனுடன் |
| வெண்டனே | - கூட |
| சனி | - சென்று |
| அசோக தருமூலநுண்டி | - அசோக மரத்தடியில் இருந்து |
| வானி மாடலகு | - அவனுடைய பேச்சுக்கு |
| கோபகிஞ்சி | - கோபப்பட்டு |
| கண்ட | - கண்களால் |
| வதியிஞ்சகனே | - சுட்டெரிக்காமலேயே |
| யுண்டி | - இருந்து |
| ஸ்ரீ நாயக | - திருமகளின் தலைவனே! |
| யசமு | - புகழ் |
| நீகே | - உனக்கே |
| கல்கஜேயலேதா | - உண்டாகச் செய்தனள் இல்லையா! |
| த்யாகராஜ | - தியாகராசனை |
| பரிபால | - காத்தருள்பவனே! |

பொழிப்புரை

மன்னாதி மன்னருள் மேன்மையானவனே! தாமரைக் கண்ணனே! கேள்! எங்கள் ஜானகியைக் கைப் பற்றியதாலன்றோ நீ புகழ் பெற்றாய்! இராவணனைக் கொன்றவன் என்ற புகழுடன் விளங்கி சக்கரவர்த்தி ஆனாய்! காட்டிற்குச் சென்று ஆணையை மீறாமல் மாயையான உருவம் பூண்டு, நிஜ உருவைத் தீயிலிட்டு, அரக்கனுடன்

சென்று அசோக மரத்தடியில் இருந்து கொண்டு, அவனது பேச்சுக்குக் கோபப்பட்டு தானே தனது கண்களால் சுட்டெரித்து விடாது மேன்மையான தலைவனுக்குரிய புகழனைத்தும் உனக்கே வந்து சேரச் செய்தனள் இல்லையா! திருமகளின் தலைவனே! இத்தியாகராசனைக் காத்தருள வேண்டுகிறேன்.

***

## 79. மாயாமாளவகௌ[3]ள - தே[3]சாதி[3]

**பல்லவி**

*மேருஸமான தீ[4]ர! வரத[3]! ரகு[4]*
*வீர! ஜூதாமு ரரா! மஹா* "மே"..

**அனுபல்லவி**

*ஸாரஸார! ஒய்யாரபு நட[3]லனு*
*நீரத[3] காந்தினி, நீ டீ[2]வினி, மஹா* "மே"..

**சரணம்**

*அலகலமுத்து[3]னு, திலகபு தீருனு,*
*தளுகு செக்குலசே தனரு நெம்மோமுனு,*
*க[3]ளமுன சோபி[4]ல்லு கனக பூ[4]ஷணமுல,*
*க[3]ளித து[3]ர்மானவ! த்யாக[3]ராஜார்சித!* "மே"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மஹாமேரு | - | பெரிய மேரு மலை(க்குச்) |
| ஸமான | - | சமமான |
| தீர | - | தீரனே! |

| | |
|---|---|
| வரத | - வரங்களை அளிப்பவனே! |
| ரகுவீர | - இரகு வமிசவீரனே! |
| கூதாமு | - பார்ப்போம் |
| ராரா | - வா! வா! |
| ஸாரஸார! | - ஆதிமூலமானவனே! |
| ஒய்யாரபு | - ஒய்யாரமான |
| நடலனு | - நடைகளை(யும்) |
| நீரத காந்தினி | - நீருண்ட மேகமொத்த மேனி ஒளியை(யும்) |
| நீ டீவினி | - உனது கம்பீரமான தோற்றப் பொலிவினையும்(காண) |
| மஹா | - பெரிய |
| அலகல | - சுருண்ட குழலின் |
| முத்துனு | - அழகையும் |
| திலகபு | - நெற்றித் திலகத்தின் |
| தீருனு | - நேர்த்தியையும் |
| தளுகு | - தளதளக்கும் |
| செக்குலசே | - கன்னங்களோடு |
| தனரு | - விளங்கும் |
| நெம்மோமுனு | - முகத்தினையும் |
| களமுன | - கழுத்தில் |
| சோபில்லு | - பிரகாசிக்கும் |
| கனகபூஷணமுல | - தங்க நகைகளையும் |
| தளித துர்மானவ | - கெட்டவர்களை ஒழித்தவனே! |
| த்யாகராஜார்சித | - தியாகராசனால் துதிக்கப்பட்ட |

## பொழிப்புரை

பெரிய மேரு மலையினையொத்த அஞ்சா மனமுடையோனே! தீரனே! அடியவர்களுக்கு வரங்களை அளிப்பவனே! இரகு குல வீரனே! காண எழுந்தருளி வருகவே! அனைத்திற்கும் ஆதிமூலமாக விளங்குபவனே! ஒய்யாரமான உனது நடைகளையும், நீருண்ட மேகமொத்த உனது மேனி வண்ணத்தையும், உன் கம்பீரமான தோற்றப் பொலிவினையும் (காண எழுந்தருள்!!) உன்னுடைய சுருண்ட கருங்குழலின் அழகையும், நெற்றிப் பொட்டின் நேர்த்தியையும், தளதளக்கும்

கன்னங்களை உடையதான உனது அழகு முகத்தையும், அழகிய கழுத்தில் பூண்டுள்ள தங்க நகைகளையும் நாங்கள் கண்டுகளிக்க எழுந்தருளி வா வா! கெட்டவர்களை ஒழித்தவனே! தியாகராசனால் துதிக்கப்பட்ட மேரு மலையொத்த தீரனே! நாங்கள் காண எழுந்தருள வேண்டும்.

***

## 80. ஸௌராஷ்ட்ரம் - ரூபகம்

பல்லவி

*மேலுகோ த$^{3}$யாநிதே$^{4}$ - மேலுகோ த$^{3}$ாசரதே$^{2}$ "மே"..*

அனுபல்லவி

*மேலுகோ த$^{3}$யாநிதே$^{4}$! மித்ரோத$^{3}$யமௌ வேள "மே"..*

சரணம்

*வென்ன பா$^{3}$லு பங்கா$^{3}$ரு கின்னெலோனே நுன்சினானு*
*தின்னக$^{3}$ நாரகி$^{3}$ஞ்சி தேடகன்னுலதோ நன்னு "மே"..*

*நாரதா$^{3}$தி$^{3}$ முனுலு ஸுரலு வாரிஜ ப$^{4}$வு டி$^{3}$ந்து$^{3}$*
*களாத$^{4}$ருலு நீ ஸந்நிதி$^{4}$லோ கோரி கொலுவுகாசிநாரு "மே"..*

*ராஜ ராஜாதி திக்ராஜுலெல்ல வச்சினாரு*
*ராஜநீதி தெலிய த்யாக$^{3}$ராஜவிநுத நன்னுப்$^{3}$ரோவ "மே"..*

பதவுரை

மேலுகோ தயாநிதே - எழுந்திரு தயாநிதியே!
மேலுகோ தாஸரதே - எழுந்திரு தாஸரதி!

| | |
|---|---|
| மித்ரோதயமௌவேள | - கதிரவன் உதயமாகும் வேளையில் |
| நாரதாதிமுனுலு ஸுருலு | - நாரதர் முதலிய முனிவரும் தேவரும் |
| வாரிஜ பவுடு | - தாமரையில் தோன்றிய பிரம்மன் |
| இந்துகளா தருலு | - பிறை சூடிய சிவன் முதலியோரும் |
| நீ சந்நிதினே கோரி | - உனது சந்நிதியை விரும்பி |
| கொலுவு காசினாரு | - உன்னைக் காணக் காத்திருக்கின்றனர் |
| வென்ன, பாலு | - வெண்ணெய், பால் ஆகியவற்றை |
| பங்காரு கிண்ணெல | - பொற் கிண்ணத்தில் |
| நே நுஞ்சினானு | - வைத்திருக்கிறேன் |
| தின்னக+ஆரகிஞ்சி | - அதை நன்கு அமுது செய்து |
| தேடகன்னுலதோ நன்னுஜூடு | - தெளிந்த விழிகளால் என்னைப் பார் |
| ராஜாதிராஜ திக்ராஜுலெல்ல | - மன்னாதி மன்னர்கள், திக்பாலர்கள் அனைவரும் |
| ராஜநீதி தெலிய | - உன்னிடம் ராஜநீதியைப் பற்றித் தெரிந்து கொள்ள |
| வச்சினாரு | - வந்துள்ளனர் |
| நன்னு ப்ரோவ | - என்னைக் காத்திட |
| மேலுகோ | - எழுந்திரு |

## பொழிப்புரை

தயாநிதியே! தாஸரதியே! எழுந்திராய்! கதிரவன் உதயமாகும் வேளையானது எழுந்திராய்! தாமரையில் தோன்றிய பிரம்மன், பிறை சூடிய சிவன் ஆகியவர்கள் உன் சந்நிதியை விரும்பி உன்னைக் காணக் காத்திருக்கின்றனர். எழுந்திராய்! வெண்ணெய், பால் முதலியவற்றை பொற்கிண்ணத்தில் வைத்திருக்கிறேன். அதை நன்கு அமுது செய்து, தெளிவான விழிகளினால் என்னைக் காணவும், சக்ரவர்த்திகள், திக்பாலர்களும் இராஜநிதியைப் பற்றித்

தெரிந்து கொள்ள உன்னிடம் வந்துள்ளனர். (ஆகவே) என்னைக் காத்திட எழுந்தருளாய் தயாநிதி!

***

## 81. ஸாரமதி - ஆதி$^3$

**பல்லவி**

*மோக்ஷமு க$^3$லத$^3$ா பு$^4$விலோ*
*ஜீவன்முக்துலு காநிவாரலகு* "மோ"

**அனுபல்லவி**

*ஸாக்ஷாத்கார நீ ஸத் ப$^4$க்தி*
*ஸங்கீ$^3$த ஞானவிஹீனுலகு* "மோ"

**சரணம்**

*ப்ராணானல ஸம்யோக$^3$மு வல்ல*
*ப்ரணவநாத$^3$மு ஸப்தஸ்வரமுலை ப$^3$ரக*
*வீணாவாத$^3$ன லோலுடௌ$^3$ சிவமனோ*
*வித$^4$ மெருகரு$^3$, த்யாகராஜ விநுத!* "வ"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மோக்ஷமு | - | வீடுபேறு |
| கலதா | - | உண்டா? |
| புவிலோ | - | இப்புவியில் |
| ஜீவன்முக்துலு | - | ஜீவமுக்தி அடைந்தோர் |
| காநி | - | அன்றி |
| வாரலகு | - | மற்றவர்களுக்கு |

| | |
|---|---|
| ஸாக்ஷாத்கார | - காட்சிதரும் அருளாளனே! |
| நீ | - உன் (மீது) |
| ஸத் பக்தி | - உண்மையான பக்தி |
| ஸங்கீதஞான | - இசை அறிவு |
| விஹீனுலகு | - இல்லாதவர்களுக்கு |
| ப்ராண+அனல | - உயிர்க்காற்றும் நெருப்பும் |
| ஸம்யோகமுவல்ல | - சேர்க்கையில் உண்டான |
| ப்ரணவநாதமு | - பிரணவ நாதம் |
| ஸப்தஸ்வரமுலை | - ஏழு சுரங்களாகி |
| பரக | - பரவ |
| வீணாவாதனலோலுடௌ | - வீணை வாசிப்பதில் மூழ்கியவன் |
| சிவ | - சிவபெருமான் |
| மனோவிதமு | - மனப்போக்கை |
| எருகரு | - அறியமாட்டார்கள் |
| த்யாகராஜவிநுத | - தியாகராசனால் போற்றப்படுபவனே! |

பொழிப்புரை

வீடுபேறு வாய்க்குமா? இப்புவியில் ஜீவமுக்தி அடைந்தோர்களுக்கன்றி மற்றவர்களுக்கு வீடு பேறு உண்டா? காட்சி தரும் அருளாளனே! உன்மீதான மெய்யான பக்தியும் சங்கீத அறிவும் இல்லாதவர்களுக்கு (எங்ஙனம் வீடுபேறு வாய்க்கும்?) இத்தியாகராசனால் போற்றப்படுவனே! உயிர், காற்றும், நெருப்பும் இணைந்த சேர்க்கையிலுண்டான ஓங்கார நாதமாகிய ஏழு சுரங்களாகப் பெருக, வீணைவாசிப்பதில் மூழ்கி நாத உபாசனை செய்யும் சிவபெருமானின் மனப்போக்கை அறிந்து கொள்ள முடியாதவர்களுக்கு வீடுபேறு உண்டோ?

***

# 82. ஜயமனோஹரி - ஆதி[3]

பல்லவி

*யஜ்ஞாது[3]லு ஸுக[2] மனுவாரிகி ஸம*
*மஜ்ஞானுலு கலரா? ஓ மனஸா!* "ய"..

அநுபல்லவி

*ஸுஜ்ஞான த[3]ரித்[3]ர பரம்பருல*
*ஸுரசித்துலு ஜீவாத்ம ஹிம்ஸக[3]ல* "ய"..

சரணம்

*ப[3]ஹு ஜன்மம்பு[3]ல வாஸன யுதுலை,*
*அஹி விஷ ஸம விஷயாக்ருஷ்டுலை;*
*ப[3]ஹிரானனுலை, த்யாக[3]ராஜு*
*ப[4]ஜியிஞ்சே ஸ்ரீ ராமுனி தெலியக[3]* "ய"..

பதவுரை

| | | |
|---|---|---|
| ஓ மனஸா | - | ஓ மனமே! |
| யஜ்ஞாதுலு | - | வேள்விகள் |
| ஸுகமு | - | சுகமானவை |
| அனுவாரிகி | - | எனக் கூறுபவர்களுக்கு |
| ஸமுலு | - | சமமானவர்கள் |
| அஜ்ஞானுலு | - | அஞ்ஞானிகள் |
| கலரா | - | உள்ளனரா? |
| ஸுஜ்ஞான தரித்ர | - | ஞானசூன்யமானவர்கள் |
| பரம்பருல | - | பரம்பரையாக |
| அஸுரசித்துலு | - | அரக்கர் உள்ளத்துடன் |
| ஜீவாத்ம ஹிம்ஸகல | - | உயிர்களைத் துன்புறுத்தும் |
| பஹுஜன்மம்புல | - | அனேக பிறவிகளின் |
| வாஸனயுதுலை | - | தொடர்ச்சியுடன் |

| | | |
|---|---|---|
| அஹிவிஷ ஸம | - | பாம்பின் விஷத்திற்குச்சமமான |
| விஷய+ஆக்ருஷ்டுலை | - | புலனின்பங்களால் இழுக்கப்பட்டு |
| பஹிரானனுலை | - | புறப்பொருட்களின் மீது விருப்பம் உடையவர்களாகி |
| த்யாகராஜு | - | தியாகராசன் |
| பஜியிஞ்செ | - | போற்றி வரும் |
| ஸ்ரீ ராமுனி | - | ஸ்ரீ இராமனை |
| தெலியக | - | அறியாமல் |

## பொழிப்புரை

ஓ மனமே! வேள்விகள் (யாகங்கள்) செய்வதே நல்லது எனக் கூறுபவர்களுக்கு இணையான அறிவில்லாதவர்கள் (அஞ்ஞானிகள்) இருக்கின்றனரா? பரம்பரையாகவே அறிவிலிகளாய் அரக்கருள்ளம் கொண்டு உயிர்க்கொலை புரியும் (*சீவாத்துமாக்களை இம்சை செய்தல்*) தன்மையதான வேள்விகளைக் செய்வதே நலமெனச் சொல்பவர்களுக்கு இணையான அறிவிலிகள் உண்டோ? அனேக பிறப்புகளின் தொடர்ச்சியுடன் பாம்பின் விடத்திற்கொப்பான புலனின்பங்களால் இழுக்கப்பட்டு, புறப் பொருட்களிடத்தே விருப்பம் உடையவர்களாகி, தியாகராசன் போற்றி வணங்கும் ஸ்ரீ இராமனை (இராமதத்துவத்தை) அறிந்து கொள்ளாமல் வேள்விகள் செய்வதே சுகமெனக் கூறுகின்றவர்களுக்கு இணையான அறிவிலிகள் உள்ளனரா?.



## 83. த[3]ர்பா[3]ரு - ஆதி[3]

**பல்லவி**

*யோசனா கமல லோசனா! நன்னுப்[3]ரோவ "யோ"..*

**அனுபல்லவி**

*ஸூசன தெ[3]லியக நொருல*
*யாசன ஜேதுநனுசு நீகு*
*தோசெனா? த்[3]யுதி விஜிதாயுத வி*
*ரோசன! நன்னு ப்[3]ரோவ நிங்க 'யோ".*

**சரணம்**

*கேசன நிஜ ப[4]க்த நிசய பாப வி*
*மோசன க[3]ல பி[3]ருதுலெல்ல கொனி ந*
*னனேசனா? க்ருத விபினசர வராபி[4]*
*ஷேசனா! த்யாக[3]ராஜ பூஜித! "யோ"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| கமல லோசன | - | தாமரைக் கண்ணனே! |
| நன்னு ப்ரோவ | - | என்னைக் காத்தருள |
| யோசனா | - | யோசனையா? |
| ஸூசன | - | குறிப்பு |
| தெலியகனு | - | தெரியாமல் |
| ஒருல | - | பிறரை |
| யாசன | - | யாசித்தல் |
| சேதுனு+அனுசு | - | செய்வேன் என்று |
| நீகு | - | உனக்கு |
| தோசெனா? | - | தோன்றியதா? |
| த்யுதி விஜிதாயுத விரோசன | - | பத்தாயிரம் சூரியர்களை வெல்லும் ஒளிமயமானவனே! |

| | | |
|---|---|---|
| நன்னு | - | என்னை |
| ப்ரோவனு | - | காத்தருள |
| இங்க | - | இன்னும் |
| கேசன | - | சில |
| நிஜபக்த | - | மெய்யான பக்தர்களின் |
| நிசய | - | பெருத்த, கூட்டமான |
| பாபவிமோசன | - | பாவங்களை ஒழித்தவன்(என்று) |
| கல | - | விளங்கும் |
| பிருதுலு+எல்ல கொனி | - | விருதுகள் எல்லாம் கொண்டு |
| நன்னு | - | என்னை |
| ஏசனா | - | துன்புறுத்தலாமா? |
| விபினசரவர | - | காட்டில் உலவும் வானரர்களில் சிறந்தவனான சுக்கிரீவனுக்கு |
| அபிஷேசனா | - | முடிசூட்டி |
| க்ருத | - | செய்தவனே! |
| த்யாகராஜ பூஜித | - | தியாகராசன் பூஜிக்கும் தெய்வமே! |

பொழிப்புரை

தாமரையொத்த கண்களை உடையவனே! என்னைக் காத்தருள யோசனையா? குறிப்பறியாமல் மற்றொருவரை அனுகி இருப்பேன் என்று உனக்குத் தோன்றியதோ? பத்தாயிரம் சூரியர்களையும் வெல்லும் ஒளியோடு விளங்குபவனே! என்னைக் காக்க இன்னும் என்ன யோசனை? சில மெய்யான பக்தர்களின் பெருத்த பாவச் சுமைகளையெல்லாம் ஒழித்தவன் என்ற விருதுகளைக் கொண்டு விளங்கும் நீ என்னை வருத்தலாமா? காட்டிடையே உலவுகின்ற வானரர்களில் சிறந்த சுக்கிரீவனுக்குப் பட்டம்கட்டி முடிசூட்டி வைத்தவனே! இத்தியாகராசன் பூசனை செய்யும் தெய்வமே! என்னைக் காத்தருள இன்னும் யோசனையோ?

***

# 84. ஹம்ஸத்$^4$வனி - தே$^3$சாதி$^3$

**பல்லவி**

*ரகுநாயக! நீபாத$^3$யுக$^3$*
*ராஜீவமுல நே விட$^3$ஜால; ஸ்ரீ* "ர"..

**அனுபல்லவி**

*அகஜாலமுல பாரதோலினன்*
*னாத$^3$ரிம்ப நீவேக$^3$தி காத$^3$ா? ஸ்ரீ* "ர"..

**சரணம்**

*ப$^4$வஸாகரமு த$^3$ாடலேக நே*
*ப$^3$ஹுகா$^3$ஸி ப$^3$டி$^3$ நீ மறுகு$^3$ ஜேரிதினி*
*அவனிஜாதி$^4$பா! ச்ரித ரக்ஷக!*
*ஆனந்த$^3$கர! ஸ்ரீ த்யாக$^3$ராஜநுத!* "வ"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ரகுநாயகா! | - | சீர்மிகு இரகுகுல நாயகனே! |
| நீ | - | உன் |
| பாதயுக ராஜீவமுல | - | திருவடித்தாமரைகளை |
| நே | - | நான் |
| விடஜால | - | விடமாட்டேன் |
| அகஜாலமுல | - | பெருத்த பாவங்களை |
| பாரதோலி | - | அகற்றி |
| நன்னு | - | என்னை |
| ஆதரிஞ்ச | - | காக்க |
| நீவே கதி காதா | - | நீயே கதி அல்லவா? |
| பவஸாகரமு | - | சம்சாரக்கடல் |
| தாடலேக | - | தாண்டமுடியாமல் |
| நே | - | நான் |

| | | |
|---|---|---|
| பஹுகாஸிபடி | - | மிகவும் துன்பமடைந்து |
| நீ மறுகு | - | உன் அருகில் |
| சேரிதினி | - | சேர்ந்தேன் |
| அவனிஜ + அதிப | - | சீதாதேவியின் தலைவனே |
| ஆச்ரித ரக்ஷக! | - | அடைக்கலம் அடைந்தோரைக் காப்பவனே! |
| ஆனந்தகர! | - | பேரின்பம் கொடுப்பவனே! |
| ஸ்ரீத்யாகராஜ நுத! | - | தியாகராசனால் வணங்கப்படுபவனே! |

## பொழிப்புரை

ஸ்ரீ இரகுகுல நாயகனே! உனது திருவடித் தாமரைகளை நான் விட்டுவிட மாட்டேன். பெருத்த என் பாவங்களை நீக்கி என்னைக் காக்கவல்ல கதி நீயே அன்றோ! சம்சாரக்கடலைக் கடக்க முடியாமல் நான் பெருந்துன்பம் அடைந்து உன் அருகே வந்தடைந்தேன். சீதையின் தலைவா! அடைக்கலம் அடைந்தவரைக் காக்கும் காவலனே! சீர்மிகு தியாகராசனால் வணங்கப்படுபவனே! பேரின்பம் அளிப்பவனே! எனக்கு நீயே கதி.



## 85. க$^{2}$ரஹரப்ரிய - ரூபகம்

**பல்லவி**

*ரகு$^{4}$வீர! ரணதீர! ராரா, ராஜகுமார!* "ரகு"..

**அனுபல்லவி**

*ப்$^{4}$ருகுஸூனு! மத$^{3}$வித$^{3}$ார! ப்ருந்தா$^{3}$ரகாதா$^{4}$ர!* "ரகு"..

**சரணம்**

*ராவண க$^{4}$டகர்ண ப$^{3}$லாராதி ரிபுநக$^{3}$நகா$^{3}$ரி!*
*ஸ்தாவர ஜங்கமரூப! த்யாக$^{3}$ராஜ ஹ்ருச்சாரி!* "ரகு"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ரகுவீர | - | இரகு வீரனே! |
| ரணதீர | - | போரில் தீரனே! |
| ராரா | - | வா ஐயனே! |
| ராஜகுமார | - | இராஜகுமாரனே! |
| ப்ருகுஸூனு | - | பரசுராமனின் |
| மதவிதாரா | - | மதத்தை அடக்கியவனே! |
| ப்ருந்தாரக+ஆதார | - | தேவர்களுக்கு ஆதாரமானவனே! |
| ராவண,கடகர்ண,பலாராதி | - | இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்து முதலான |
| ரிபு | - | பகைவர்கள் |
| நக | - | மலைகள் |
| நகாரி | - | இந்திரனை வென்றவனே |
| ஸ்தாவரஜங்கமரூப | - | சராசரங்களை உருவமாகக் கொண்டவனே! |
| த்யாகரஜ ஹ்ருச்சாரி | - | தியாகராசன் உள்ளத்தில் நடமாடிக் கொண்டிருப்பவனே! |

பொழிப்புரை

இரகு வீரனே! போரில் தீரனே! இராஜகுமாரனே! வருக ஐயனே! பரசுராமனின் மதத்தை அடக்கியவனே! தேவர்களுக்கெல்லாம் ஆதாரமாய் விளங்குபவனே! இராவணன், கும்பகருணன், இந்திரசித்து முதலான பகைவர்களையும் மலைகளையும் இந்திரனையும் வென்று திகழ்பவனே! சராசரங்களையே உருவாகக் கொண்டவனே! தியாகராசன் உள்ளத்தில் நடமாடிக் கொண்டிருப்பவனே!

***

## 86. ஆந்தோ$^{3}$ளிக - தே$^{1}$சாதி$^{3}$

பல்லவி

*ராக$^{3}$ ஸுதா$^{4}$ரஸ பானமு சேஸி*
*ராஜில்லவே; ஓ மனஸா! "ராக"*

அனுபல்லவி

*யாக$^{3}$ யோக$^{3}$ த்யாக$^{3}$போ$^{4}$க$^{3}$ ப$^{2}$லமொஸங்கே$^{3}$ "ராக"*

சரணம்

*சதா$^{3}$சிவமயமகு$^{3}$ நாதோ$^{3}$ங்காரஸ்வர*
*விது$^{3}$லு ஜீவன்முக்துலனி த்யாக$^{3}$ராஜுதெலியு "ராக".*

பதவுரை

ஓ மனஸா - ஓ மனமே!
ராக - இராகம் (என்ற)

| | | |
|---|---|---|
| ஸுதாரஸ | - | அமுதரசத்தை |
| பானமு சேஸி | - | பருகி |
| ராஜில்லவே! | - | விளங்குவாயாக! |
| யாக | - | யாகம் |
| த்யாகபோகபலமு | - | தானம், இன்பங்களின் பயன் |
| ஒஸங்கே | - | கொடுக்கும் |
| ஸதாசிவ மயமகு | - | சதாசிவனின் வடிவான |
| நாத | - | நாதம் |
| ஓங்கார | - | ஓங்காரம் |
| ஸ்வர | - | சுரம் |
| விதுலு | - | அறிந்தவர்கள் |
| ஜீவன்முக்துலு | - | ஜீவமுக்தர்கள் |
| அனி | - | என்று |
| த்யாகராஜவினுத | - | தியாகராசன் அறியும் |

## பொழிப்புரை

ஓ மனமே! இராகம் என்ற அமுதரசத்தைப் பருகி விளங்குவாயாக! வேள்வி, யோகாசனப் பயிற்சி, தானம், இன்பங்கள் முதலியவற்றால் உண்டாகும் பயனைக் கொடுக்கும் இராகமென்ற அமிர்தரசத்தைப் பருகி மனமே நீ விளங்குவாய்! சதாசிவனின் வடிவான நாதமும், ஓங்காரமும், சுரமும் அறிந்தவர்களே ஜீவன்முக்தர்கள் என்று இத்தியாகராசன் அறியும் இராகம் என்னும் அமிர்த ரசத்தை ஓ மனமே! பருக.



# 87. டக்க - ஆதி'

**பல்லவி**

*ராகாசசிவத'ன! இங்க பராகா?* ''ரா''..

**அநுபல்லவி**

*நீ கா கு'ணமு காரா; த'வனீகாந்தா!*
*கருணாஸ்வாந்த!* ''ரா''..

**சரணம்**

*நம்மியுன்ன நிஜதா'ஸுலகு-நம்மிகல நொஸகி 'மரதுரா?*
*தம்மிகனுலநொகபாரி நனு-த'யஜூட'ராத'ா?மரியாத'' ''ரா'*

*பாரிபாரி நின்னனுதி'னமு-கோ'ரிகோ'ரினவாரினி யீ*
*தா'ரி ப்ரோசிதிவா? மாயாத'ாரி! ராரா எலுகோரா* ''ரா'

*நீவே தெலிஸி கோந்துவனுசனு-பாவிஞ்சக நேனு*
*நீபத3ஸேவ ஜேஸிதி மஹானுபா'வ!த்யாகராஜுனிபை!*
''ரா'

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ராகாசசிவதன | - | முழுநிலவொத்த முகம் உடையவனே! |
| இங்க | - | இனியும் |
| பராகா | - | (என்மீது) பாராமுகமா? |
| நீகு | - | உனக்கு |
| ஆ குணமு | - | அந்த குணம் |
| காராது | - | வரலாகாது |
| அவனீகாந்த | - | பூமித்தேவியின் தலைவா! |
| கருணா ஸ்வாந்தா | - | கருணைபொழியும் உள்ளத்தவனே! |
| நம்மியுன்ன | - | நம்பிக்கொண்டிருக்கின்ற |

| | |
|---|---|
| நிஜதாஸுலகு | - அடியவர்களுக்கு |
| நம்மிகலனு | - நம்பிக்கைகளை |
| ஒஸகி | - அளித்து (நல்கி) |
| மரதுரா | - மறப்பாயோ? |
| தம்மிகனுலனு | - (உன்) தாமரைக் கண்களால் |
| ஒகபாரி | - ஒரு தடவை |
| நனு | - என்னை |
| தயஜூடராதா | - தயவுடன் பார்க்கலாகாதா? |
| பாரிபாரி | - பலதடவை |
| நின்னு | - உன்னை |
| அனுதினமு | - தினந்தோறும் |
| கோரி | - விரும்பி |
| கோரிநவாரினி | - வேண்டிக்கொள்பவரை |
| ஈதாரி | - இவ்விதமாக |
| ப்ரோசிதிவா | - காப்பாற்றுவாயோ? |
| மாயாதாரி | - மாயோனே! |
| ராரா | - வருக வருக |
| ஏலுகோரா | - ஏற்றுக்கொள் ஐயனே! |
| நீவே | - நீயே |
| தெலிஸிகொந்துவு | - தெரிந்து கொள்வாய் |
| அனுசுனு | - என்று |
| பாவிஞ்சுசு | - எண்ணிக் கொண்டு |
| நேனு | - நான் |
| நீ பதஸேவஜேஸிதி | - உன் திருவடிச்சேவை புரிந்தேன் |
| மஹானுபாவ | - உயர்ந்தோனே! |
| த்யாகராஜுனிபை | - தியாகராசன் மீது (பாராமுகமேன்?) |

## பொழிப்புரை

முழுநிலவொத்த முகமுடையானே! இன்னும் என்மீது பாராமுகமா? உனக்கு இந்தக்குணம் வரலாகாது. பூமித்தேவியின் தலைவா! கருணைமழை பொழியும் உள்ளம் கொண்டவனே! உன்னையே நம்பிக் கொண்டிருக்கின்ற அடியவர்களுக்கு நம்பிக்கைகளை அளித்துவிட்டு (பின்

அவற்றை) மறந்துவிடுவனையோ! உன் தாமரை போன்ற கண்களால் என்னை ஒருமுறை கருணையுடன் பார்க்கலாகாதா? தினந்தோறும் பல தடவை விருப்பமுடன் உன்னை வேண்டிக் கொண்டவர்களை இவ்விதமாகத்தான் காத்தருளுவாயோ? மாயோனே! வருக! வருக! வந்து என்னை ஏற்றுக்கொள் ஐயனே! நீயே தெரிந்து கொள்வாய் என்று ாண்ணி நான் உன் திருவடிச் சேவை புரிந்தேன். டயர்ந்தோனே! இத்தியாகராசன் மீது இன்னும் பாராமுகம் ரன்?

***

## 88. ஹரிகாம்போ⁴ஜி - ரூபகமு

பல்வி

*ாம நன்னு ப்³ரோவரா-வேமொகோ? லோகாபி⁴ "ரா"..*

அபல்லவி

*ஂலோ ப்ரம்ஹலோ சிவகேசவாது³லலோ*
*ரேமமீரவெலுகு³ சுண்டே³பி³ருது³ வஹிஞ்சினஸீதா"ரா"*

சரம்

*ஂப்புலகை கன்னதாவு நப்புப³ட³க விர்றவீகி³*
*'புபனுலு லேக யுண்டு³-த்யாக³ராஜவிநுத ஸீதா"ரா"..*

பதுரை

ாகாபிராம - உலகத்தோரின்
மனங்கவர்ந்த இராமா!

| | | |
|---|---|---|
| நன்னு | - | என்னை |
| ப்ரோவ | - | காத்தருள |
| ராவோ+ஏமொகோ | - | வரமாட்டாயோ என்னவோ' |
| சீமலோ | - | எறும்பில் |
| *ப்ரம்ஹலோ* | - | பிரம்மனிடத்தில் |
| சிவகேசவ+ஆதுலலோ | - | சிவன் முதலானவரிடத்தில் |
| ப்ரேமமீர | - | அன்புடனே |
| மெலகுசுண்டே | - | நடமாடிக் கொண்டிருக்கும் |
| பிருதுவஹிஞ்சின | - | விருதுபெற்ற |
| ஸீதா ராம | - | *சீ*தா இராமனே! |
| மெப்புலகு+அயி | - | பகட்டிற்காக வேண்டி |
| கன்னதாவு | - | கண்டவிடத்தில் (பிறந்த இடத்தில்) |
| அப்பு படக | - | கடன்வாங்காமல் |
| விர்றவீகி | - | மதங்கொண்டு |
| தப்புபனுலு | - | கெட்ட செயல்கள் |
| லேகயுண்டே | - | செய்யாதிருக்கும் |
| த்யாகராஜவினுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |
| ஸீதா ராம | - | *சீ*தா இராமனே! |

## பொழிப்புரை

உலக மக்கள் அனைவரின் மனங்கவர்ந்த இரா! என்னைக் காத்தருள வரமாட்டாயோ? எறும்பு முதல் பிரமா வரை அனைத்து உயிர்களிடத்தும், சிவன், விஷ்ணு முதலானவரிடத்தும் அன்புடன் நடமாடிக் கொண்டிரும் விருதுபெற்ற *சீ*தா இராமனே! பகட்டிற்காகப் பலரிடம் கடன் வாங்காமலும் மதங்கொண்டு தீயசெயல்களைப் புரியாமலும் இருக்கும் இத்தியாகராசனைக் காத்தருள வரமாட்டாயோ என்னவோ? தியாகராசனால் துதிப் படுபவனாகிய *சீ*தா இராமா! என்னைக் காத்தருள நீயேர வேண்டும்.

***

## 89. சுத்த3ப3ங்கா1ள - ஆதி1

**பல்லவி**

*ராமப4க்தி ஸாம்ராஜ்யமே மானவுல*
*கப்3பெ3னோ? மனஸா!* "ரா"

**அனுபல்லவி**

*ஆ மானவுல ஸந்த3ர்ஸன*
*மத்யந்த ப்ரஹ்மானந்த3மே;* "ரா"

**சரணம்**

*ஈலாக3னி விவரிம்பலேனு;*
*சாலா ஸ்வானுப4வ வேத்யமே;*
*லீலா ஸ்ருஷ்டி ஜகத்ரயமுலோ*
*கோலாஹல த்யாக3ராஜ நுதுட3கு3* "ரா"

**பதவுரை**

| | |
|---|---|
| ஓ மனஸா | - ஓ மனமே! |
| ராமபக்தி | - இராமன்மீதான பக்தி |
| ஸாம்ராஜ்யமு | - சாம்ராஜ்யம் (பேரரசு) |
| ஏ மானவுலகு | - எம் மனிதர்களுக்கு |
| அப்பெனோ | - அகப்பட்டதோ |
| ஆ மானவுல | - அம்மானிடர்களின் |
| ஸந்தர்ஸனமு | - தரிசனம் |
| அத்யந்த | - எல்லையில்லா |
| ப்ரஹ்மானந்தமே | - பேரின்பமே |
| ஈலாக+அனி | - இவ்விதமென |
| விவரிம்பலேனு | - விளக்க இயலாது |
| சாலா | - மிகவும் |
| ஸ்வ+அனுபவ | - அவரவர் அனுபவத்தால் |

| | | |
|---|---|---|
| வேத்யமே | - | அறிந்து கொள்ளவேண்டியதே |
| லீலா | - | விளையாட்டாக |
| ஸ்ருஷ்டி | - | படைத்த |
| ஜகத்ரயமு+அனே | - | உலகம் மூன்றென்ற |
| கோலாஹல | - | இன்பப்பெருக்கை உடையவன் |
| த்யாகராஜநுதுடு+அகு | - | தியாகராசனால் துதிக்கப்பட்டவனுமான |

## பொழிப்புரை

ஓ மனமே! இராமபக்தி என்ற பேரரசு எம்மானிடருக்குக் கிடைக்கப்பெற்றதோ அம்மானிடரின் தரிசனமே எல்லையற்ற பேரின்பமாகும். அவ்வின்பத்தை இவ்விதமென விவரித்துக் காட்ட இயலாது. அவரவர் மிகுந்த அனுபவத்தால் அறிந்துகொள்ள வேண்டியதே ஆகும். விளையாட்டாய் படைத்த உலகம் மூன்றென்ற இன்பப்பெருக்கை உடையவனும், தியாகராசனால் துதிக்கப்பட்டவனுமான இராமன் மீதான பக்தி என்ற சாம்ராஜ்யம் வாய்க்கப்பெற்றவரைக் காண்பதே பேரின்பமாம்.



# 90. நாராயணி - ஆதி[1]

பல்லவி

*ராமா நீவேகா[3]னி நன்னு-ரக்ஷிஞ்சே வாரெவ்வரே? "ரா"*

அநுபல்லவி

*ஸோம சூர்யலோசன!-சுந்த[3]ரவத[3]ன! ஸ்ரீ "ரா"*

சரணம்

*தாதவசன பரிபால! புருஹூதாத்[3]யமர பாரி*
*ஜாத! ஸௌமித்ரிதோ-ஸீதா ரமணிதோ வெலஸின "ரா"*

*தா[4]ராத[4]ராப சரீர! - தசரத[4] ஸூநு*
*மார! ஸாகேதபுர விஹார! நன்னேலுகோர "ரா"*

*நாக[3]சயன! முனி யாக[3] பாலன! ப[4]க்த*
*ப[4]ாகதே[4]ய! பாவன!-ஸ்ரீ த்யாக[3]ராஜ ஸன்னுத! "ரா"*

பதவுரை

| | | |
|---|---|---|
| ஸ்ரீ | - | மங்களகரமான |
| ராமா | - | ஓ இராமா |
| நீவே கானி | - | உன்னையன்றி |
| நன்னு | - | என்னை |
| ரக்ஷிஞ்சேவாரு | - | காப்பாற்றுவார்கள் |
| எவரே | - | எவர்? |
| ஸோம | - | சந்திரன் |
| சூர்ய | - | சூரியன் |
| லோசன | - | கண்களாக |
| சுந்தரவதன | - | அழகுமுகம் கொண்டவனே |
| தாதவசன | - | தந்தை சொல்லை |
| பரிபால | - | காத்தவனே! |

| | | |
|---|---|---|
| புருஹூதாதி | - | இந்திரன் முதலான |
| அமர | - | தேவர்களில் |
| பாரிஜாத | - | பாரிஜாதமலர் போன்றவனே! |
| ஸௌமித்ரிதோ | - | இலக்குவனனோடும் |
| சீதா ரமணிதோ | - | சீதாப்பிராட்டியுடனும் |
| வெலஸின | - | விளங்குபவனே! |
| தாராதராப சரீர | - | கார்முகில் வண்ணனே! |
| பாவஜ | - | மன்மதனைப் போன்ற |
| ஸுகுமார | - | அழகு நிறைந்தவனே! |
| ஸாகேதபுர | - | அயோத்தியில் |
| விஹார | - | உறைபவனே! |
| நன்னு | - | என்னை |
| ஏலுகோரா | - | ஏற்றுக்கொள்ளடா! |
| நாக சயன | - | பாம்பணையில் துயில்வோனே! |
| முனியாக | - | முனிவர்களின் வேள்விகளை |
| பாலன | - | காப்பவனே! |
| பக்தபாகதேய | - | பக்தர்களின்பேறானவனே! |
| பாவன | - | தூய்மையானவனே! |
| த்யாகராஜவிநுத | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |

## பொழிப்புரை

ஓ மங்களகரமான இராமா! உன்னையன்றி என்னைக் காப்பவர் எவருளர்? சந்திர சூரியர்களைக் கண்களாகக் கொண்ட அழகுமுகத்தானே! தந்தையின் சொல்லைக் காப்பாற்றியவனே! இந்திரன் முதலான தேவர்களில் பாரிஜாதமலர் போன்றவனே! இலக்குவனுடனும் சீதாப் பிராட்டியாருடனும் விளங்கும் இராமா! உன்னையன்றி என்னைக் காப்பவர் எவர்? கார்முகில் வண்ணனே! மன்மதனைப் போன்று அழகு நிறையப் பெற்றவனே! அயோத்தி மாநகரில் உறைபவனே! (உன்னையன்றி என்னைக் காப்பவர் யார்?).

***

## 91. த⁴ன்யாஸி - ஆதி¹

### பல்லவி

*ராமாபி⁴ராம! மனஸு ரஞ்ஜில்ல பல்கக³ராதா³? ரா..*

### அனுபல்லவி

*ஈமஹினி வெலஸினதே³மோ? ஸத³ா நாதோ "ரா"..*

### சரணம்

*பங்க³ாரு மேடி பான்புபை ப⁴ாமாமணி ஜானகி*
*ச்ருங்காரிஞ்சுகொனி செலுவொந்த³க³ நின்னு க³னி*
*பொங்குசு மல்லெலவிருல பூஜிஞ்சுவேள, ஸ்ரீஹரி*
*ஸங்கீதமு பாடுமனி ஸ்வாமி த்யாக³ராஜுநிதோ "ரா"..*

### பதவுரை

| | | |
|---|---|---|
| ராமாபிராம | - | இராமா! மனங்கவர்ந்தோனே |
| மநஸு | - | உள்ளம் |
| ரஞ்ஜில்ல | - | மகிழும்படி |
| பல்கராதா | - | பேசக்கூடாதா? |
| ஈமஹினி | - | இந்த உலகில் |
| வெலஸினதி | - | விளங்குவது |
| ஏமி | - | என்ன |
| ஸதா | - | எப்பொழுதும் |
| நாதோ | - | என்னிடம் |
| பங்காருமேடி | - | பொன்னால் அழகாக செய்யப்பட்ட |
| பான்புபை | - | மஞ்சத்தின்மேல் |
| பாமாமணி | - | பெண்களுள் மணியாய்த்திகழும் |
| ஜானகி | - | சீதாப்பிராட்டி |

| | | |
|---|---|---|
| ச்ருங்காரிஞ்சுகொனி | - | அலங்கரித்துக்கொண்டு |
| செலுவொந்த | - | ஒப்பற்ற அழகுடன் |
| நின்னு கனி | - | உன்னைக் கண்டு |
| பொங்குசு | - | பூரித்து |
| மல்லெவிருல | - | மல்லிகை மலர்களால் |
| பூஜிஞ்சுவேள | - | பூசனைசெய்யும் பொழுது |
| ஸ்ரீ ஹரி | - | மங்களகரமான அரியே! |
| ஸங்கீதமு | - | இசை |
| பாடுமு+அனு | - | பாடு என்று |
| ஸ்வாமி | - | சுவாமி! |
| த்யாகராஜுநிதோ | - | தியாகராசனிடம் |

## பொழிப்புரை

இராமா! அனைவரின் மனங்கவர்வோனே! என் உள்ளம் மகிழும்படிப் பேசக்கூடாதா? இவ்வுலகில் நீயன்றி விளங்கியிருத்தல் வேறென்ன? எப்பொழுதும் என்னிடம் நீ உள்ளம் மகிழப் பேசலாகாதா? தங்கமிழைக்கப்பட்ட மஞ்சத்தின்மேல் (நீ வீற்றிருக்க) பெண்களுள் மணியாய்த் திகழும் சீதாப்பிராட்டி அலங்கரித்துக் கொண்டு ஒப்பற்ற அழகுடன் உன்னைக் கண்டு உள்ளம் பூரித்து மல்லிகை முதலான மலர்களால் பூசனை செய்ய, மங்களகரமான அரியே! சுவாமி! இத்தியாகராசனிடம் "இசைபாடு" என்று கூறலாகாதா?



## 92. மணிரங்கு3 - ஆதி3

**பல்லவி**

*ரானிதி3 ராது3 ஸுராஸுருலகைன ''ரா'*

**அனுபல்லவி**

*போனிதி3 போது3 பூ4ஸுருலகைன ''ரா'*

**சரணம்**

*தே3வேந்த்3ருனிகி ஸுதே3ஹமு பூர்வ*
*தே3வுல கம்ருத மபா4வமே கா3னி*
*ஆ வனசர பா3த4 லா முனுலகே கா3னி*
*பாவன! த்யாக3ராஜ பா4க்யமா! ஸ்ரீ ராம ''ரா'*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ராம | - | மங்களகரமான இராமா! |
| ரானிதி | - | வராதவை |
| ராது | - | வரமாட்டாது |
| ஸுர+அஸுரலகு+அயி( | - | தேவர்களுக்காயினும், அசுரர்களுக்காயினும் |
| போனிதி | - | போகாதவை |
| போது | - | போகமாட்டாது |
| பூஸுருலகு+அயின | - | பிராமணர்களாயினும் |
| தேவேந்த்ருனிகி | - | தேவேந்திரனுக்கு |
| ஸுதேஹமு | - | நல்ல உடல் |
| பூர்வ தேவுலகு | - | ஆதியில் தேவர்களுக்கும் |
| அம்ருதமு | - | அமுதம் |
| அபாவமே | - | கிடைக்காதனவே |
| ஆ வனசர | - | அந்த அரக்கரின் |
| பாதலு | - | துன்பங்கள் |

| | | |
|---|---|---|
| ஆ முனுலகே | - | அந்த முனிவர்களுக்கே |
| பாவன | - | தூய்மையானவனே! |
| த்யாகராஜ பாக்யமா | - | தியாகராசனின் பாக்கியமே! |

*பொழிப்புரை*

மங்களகரமான இராமனே! தேவர்களுக்காயினும் அசுரர்களுக்காயினும் வராதன வரமாட்டா. பிராமணர் களாயினும் போகாதன போகமாட்டா. தேவேந்திரனுக்குத் (திரும்பவும்) நல்ல உடலமைப்பும், ஆதியில் தேவர்களுக்கு அமுதமும் கிடைக்காதனவே ஆகும். அரக்கர்களால் முனிவர்களுக்கு இழைக்கப்படும் துன்பங்களும் அப்படியே ஆகும். தூயோனே! இத்தியாகராசனின் பாக்கியமே! பாக்கியம்!.

***

## 93. நீலாம்ப³ரி - ரூபகம்

**பல்லவி**

*லாலி யூக³வே மா பாலிதை³வமா "லா"..*

**அனுபல்லவி**

*லாலி யூகவே நுனு கா³லிதி³ண்டு³ பான்புபைனி"லா"..*

**சரணம்**

*பம்மின வேடு³கமீர தம்முல தோனு*
*கம்மனி விடெ³மொஸகு³ யாஜனகாத்மஜதோனு*
*பொம்மதேவரதண்ட்ரி பூமிசுல தோட³னு*
*ஸம்மதமுன த்யாகராஜ ஸந்நுதி ஸேயக³ "லா"..*

| | | |
|---|---|---|
| மா பாலிதைவமா | - | எங்களைக்காத்தருளும் தெய்வமே! |
| லாலி | - | ஊஞ்சல் |
| ஊகவே | - | ஆடிடுக |
| நுனு | - | மென்மையான |
| காலிதிண்டு | - | காற்றைப் புகுத்ததலையணையின் |
| பான்பு பைன | - | படுக்கையின் மீதமர்ந்து |
| பம்மின | - | மிகுந்த இன்பமுடன் |
| வேடுகமீர | - | வேடிக்கை விளையாட்டுகளுடன் |
| தம்முலதோனு | - | தம்பிகளுடன் கூடி |
| கம்மனி | - | மணமுள்ள |
| விடெமு | - | தாம்பூலம் |
| ஒஸகு | - | அளித்துக் கொண்டிருக்கும் |
| ஆ | - | அந்த |
| ஜனகாத்மஜதோனு | - | ஜனகனின் மகளுடன் (சீதையுடன்) கூடி |
| லாலி யூகவே | - | ஊஞ்சலில் ஆடிடுக! |
| பொம்மதேவரதண்ட்ரி | - | நான்முகனின் தந்தையே! |
| பூமிசுலதோடனு | - | பூமியில் சிறந்து விளங்கும் அந்தணர்களுடன் கூடி |
| ஸம்மதமுன | - | இஷ்டத்தோடு |
| த்யாகராஜு | - | தியாகராசன் |
| ஸந்நுதி ஸேயக | - | துதித்துக் கொண்டிருக்க |

## பொழிப்புரை

எங்களைக் காக்கும் தெய்வமே! ஸ்ரீ இராமா! ஊஞ்சலில் ஆடிடுக! மென்மையான பாம்பணையாகிய படுக்கையின் மீதிருந்து ஊஞ்சலாடுக! மிகுந்த இன்பமுடன் வேடிக்கை விளையாட்டுகளுடன் தம்பியருடன் கூடி மணமும் ருசியும் மிக்க தாம்பூலத்தை அளித்துக் கொண்டிருக்கும் ஜனகனின் குலக்கொடியான சீதா தேவியுடன் சேர்ந்து ஊஞ்சலில்

ஆடுவாயாக! நான்முகனின் தந்தையே! பூமியில் சிறந்து விளங்கும் அந்தணர்களுடன் கூடி இன்பமுடன் இஷ்டத்தோடு இத்தியாகராசன் (உன்னைத்) துதித்துக் கொண்டிருக்க ஊஞ்சலில் ஆடிடுக! தெய்வமே! ஸ்ரீ இராமா!.

***

## 94. ஷண்முக2ப்ரிய - ஆதி3

**பல்லவி**

*வத்த3னே வாருலேரு "வ"..*
*அத்த3ம்பு மோமுனு ஜூட3னே*
*நனய மங்கலார்சிதே ஜூசி "வ"..*

**அனுபல்லவி**

*கோரிக விலலோ தி3விலோ*
*கொஞ்சமைன லேனி நா மனஸு*

**சரணம்**

*தா3ரி தெலியு தை3வமு நீவு ஸுமி*
*த்யாக3ராஜ ஹ்ருத்பூ4ஷண! நினு வினா! "வ"..*

**பதவுரை**

| | | |
|---|---|---|
| அத்தம்பு மோமுனு | - | பளிங்குக் கண்ணாடி போன்று விளங்கும் முகத்தை |
| கூட | - | பார்க்க |
| நேனு | - | நான் |
| அனயமு | - | எப்பொழுதும் |

| | | |
|---|---|---|
| அங்கலார்சிபேத | - | அங்கலாய்த்துக் கொண்டிருந்த போதிலும் |
| ஜூசி | - | பார்த்து |
| வத்து | - | வேண்டாம் |
| அனேவாரு | - | எனக்கூறுவார் |
| லேரு | - | இல்லை |
| கோரிகலு | - | விருப்பங்கள் |
| இலலோ | - | இப்புவியிலும் |
| திவிலோ | - | மேலுலகிலும் |
| கொஞ்சமு+அயின | - | கொஞ்சமாவது |
| லேனி | - | இல்லாத |
| நா | - | எனது |
| மனஸூதாரி | - | மனநிலையை |
| தெலியு | - | தெரிந்து கொண்டுள்ள |
| தைவமு | - | தெய்வம் |
| நீவு ஸாமி | - | நீதான் |
| த்யாகராஜ | - | தியாகராசனின் |
| ஹ்ருத்பூஷண | - | இதயத் தாமரையை இருப்பிடமாகக்கொண்டவனே! |
| நினு வினா | - | உன்னைவிட்டால் |

## பொழிப்புரை

தியாகராசனுடைய இதயமெனும் தாமரையினை இருப்பிடமாகக் கொண்டவனே! பளிங்குக் கண்ணாடியினைப் போன்று விளங்கும் உனது எழில் முகத்தைக் காண, நான் எப்பொழுதும் அங்கலாய்த்துக் (வருத்தப்பட்டுக்) கொண்டிருந்த போதிலும் என்னைப் பார்த்து வருத்தம் கொள்ள வேண்டாமென என் நிலையறிந்து தேற்றுவார் எவருமில்லை. இவ்வுலகிலும் மேலுலகிலும் (இக, பர சுகங்கள்) விருப்பங்கள் சிறிதுமில்லாத என் மனநிலைமையினைத் தெரிந்து கொண்ட தெய்வம் நீதான். எனவே உன்னையன்றி என்னை வருத்தம் கொள்ள வேண்டாம் எனக் கூறுவார் யாருமில்லை!

***

# 95. ஜனரஞ்ஜனி - ஆதி3

**பல்லவி**

*விட3ஜாலது3ரா; நா மனஸு - வினரா "வி".*

**அனுபல்லவி**

*அடியாஸலசே தகி3லி நே-னார்திப3டின பத3ம்புலனு "வி".*

**சரணம்**

*தனுவேபனுலகு சனினா மரி-கனரானிதி3 கனுகொனினா*
*நினுகா3 பா4விஞ்சி ஸந்தஸில்லிதி-ஸ்ரீ த்யாக3ராஜனுத "வி".*

**பதவுரை**

| | |
|---|---|
| வினரா | - கேள் ஐயனே! |
| நா | - என் |
| மனஸு | - உள்ளம் |
| விடஜாலதுரா | - விடமுடியாது ஐயா! |
| அடியாஸலசே | - பேராசை கொண்டு |
| தகிலி | - சிக்கி |
| நேனு | - நான் |
| ஆர்த்திபடின | - துன்பத்தில் வீழ்ந்தாலும் |
| பதம்புலனு | - (உனது) திருவடிகளை |
| தனுவு | - உடல் |
| ஏ | - எந்த |
| பனுலகு | - பணிகளுக்கு |
| சனினா | - ஈடுபட்டாலும் |
| மரி | - மேலும் |
| கனரானிதி | - பார்க்கக் கூடாதவற்றை |
| கனுகொனினா | - பார்த்தாலும் |
| நினுகா | - (அனைத்து) நீயேயென்று |

| | | |
|---|---|---|
| பாவிஞ்சி | - | எண்ணி |
| ஸந்தஸில்லின | - | மகிழ்வடைந்த |
| ஸ்ரீ த்யாகராஜநுத | - | மங்களகரமான தியாகராசனால் வணங்கப்படுபவனே! |

பொழிப்புரை

ஐயனே! கேட்பாயாக! என் உள்ளம் உன்னுடைய திருவடிகளை என்றும் விட்டுவிடாது பேராசைகளில் ஈடுபட்டு (தீய ஆசைகளில்) சிக்கி நான் துன்பத்தால் இளைத்தாலும் உன் திருவடிகளை என்னால் விடமுடியாது ஐயனே! என்னுடல் எந்தப் பணிகளைச் செய்தாலும்; புலன்கள் பார்க்கக் கூடாதவற்றைப் பார்த்தாலும்; அனைத்தும் நீயே என்று எண்ணி மகிழ்வடையும் என் உள்ளம், உன் திருவடிகளை என்றும் விடாது. மங்களகர தியாகராசனால் வணங்கப் படுபவனே!

***

## 96. விவர்த$^4$னி - ரூபகம்

பல்லவி

*வினவே, ஓ மனஸா!-விவரம்பு$^3$க நே தெ$^3$ல்பெத$^3$ "வி"..*

அனுபல்லவி

*மனஸெரிங்கி$^3$ குமார்க$^3$முன-மரிபொரலுக செட$^3$வலதெ$^3$ "வி'*

சரணம்

*ஈநட$^3$தலு பனிகிராது$^3$-ஈச்வர க்ருப கலுக$^3$ போ$^3$து$^3$;*
*த்$^4$யான ப$^4$ஜன ஸேயவெ; வர-த்யாக$^3$ராஜு° மனவி "வி"..*

ஓ மனஸா - ஓ மனமே!
வினவே - கேட்பாயாக
விவரம்புக - விரிவாக
நே - நான்
தெல்பெத - தெரியப்படுத்துகிறேன்
மனஸு எரிங்கி - மனம்அறிந்துகொண்டு
குமார்கமுன - கெட்ட வழியில்
மரி - மேலும்
பொரலுசு - புரண்டு (உருண்டு)
செடவலதே - கெட்டுப் போகாதே
ஈ - இந்த
நடதலு - நடவடிக்கைகள்
பனிகிராது - பயன்படாது
ஈச்வரக்ருப - தெய்வ அருள்
கலுகபோது - உண்டாக வாய்ப்பில்லை
த்யான - தியானம்
பஜன - பஜனை (வழிபாடு)
ஸேயவே - செய்வாயாக!
வரத்யாகராஜ - சிறந்த தியாகராசனின்
மனவி - வேண்டுதலை

## பொழிப்புரை

ஓ மனமே! நான் விரிவாகத் தெரியப்படுத்துவதைக் கேட்பாயாக! மனம் அறிந்து மேலும் தீயவழியில் உருண்டு புரண்டு கெட்டுப்போகாதே! இத்தகைய நடவடிக்கைகளால் யாதொரு பயனுமில்லை. தெய்வ அருளும் கிடைத்தற்கு வாய்ப்பில்லை. மனமே, ஈஸ்வரனை நினைத்து தியானித்தும் வழிபட்டும் வருவாயாக. சிறந்த இத்தியாகராசனின் விண்ணப்பத்தைக் கேட்பாயாக.

***

# 97. கல்க[1]ட[1] - ஆதி[1]

**பல்லவி**

*ஸமயமு ஏமரகே, மனஸா!* "ஸம"..

**அனுபல்லவி**

*ஸுமதுலௌ நருலனு சேரி நிஜ*
*ஸுகமனுபவிஞ்சுடகு நீகிதே[3]* "ஸம"..

**சரணம்**

*அந்தரங்க[3]முன கலுகு[3] அப[2]யமுன*
*ஆந்தரிகப[4]க்தி மார்க[3]மு தெலிஸி*
*த[4]ாந்த ஸம்ரக்ஷகுடை[3]ன ஸ்ரீ*
*த்யாக[3]ராஜ ஸந்நுதுனி ஜூட[3]* "ஸம"..

**பதவுரை**

| | | |
|---|---|---|
| மனஸா | - | ஓ மனமே! |
| ஸமயமு | - | நேரத்தை |
| ஏமரகே | - | மறந்துவிடாதே!(பாழாக்காதே!) |
| ஸுமதுலௌ | - | நல்லறிவு படைத்தவரான |
| நருலனு | - | மனிதர்களிடத்து |
| சேரி | - | இணைந்து |
| நிஜஸுகம் | - | மெய்யான இன்பம் |
| அனுபவிஞ்சுடகு | - | அனுபவிப்பதற்கு |
| நீகு | - | உனக்கு |
| இதே | - | இதுவேதான் |
| அந்தரங்கமுனகலுகு | - | உள்ளத்தில் உருவாகும் |
| அபயமுன | - | அபயத்தால் |
| ஆந்தரிக | - | உள்ளிருக்கும் |
| பக்திமார்க்மு | - | பக்திநெறியை |

| | | |
|---|---|---|
| தெலிஸி | - | தெரிந்துகொண்டு |
| தாந்த | - | புலனடக்கம் கொண்ட ஞானியரை |
| ஸம்ரக்ஷகுடு+அயின | - | காத்து அருள்பவனான |
| ஸ்ரீத்யாகராஜ ஸந்நுதுனி | - | தியாகராசனால் துதிக்கப்படுபவனே! |
| ஜூட | - | காண்பதற்கு |

## பொழிப்புரை

ஓ மனமே! நேரத்தை மறந்துவிடாதே! நல்லறிவு படைத்த பெரியோர்களோடு இணைந்து மெய்யான இன்பத்தைத் துய்ப்பதற்கு இதுவேதான் உனக்குச் சரியான நேரம். உள்ளத்தில் உருவாகும் அச்சத்திடை மனதின் ஓரத்தில் உள்ள (உள்ளிருக்கும்) பக்தி நெறியை அறிந்துகொண்டு தவத்தை மேற்கொள்வதில் உண்டாகின்ற துன்பங்களைப் பொறுத்துக் கொண்டதிறத்தாரை (புலனடக்கம் கொண்டிலங்கும் ஞானியரை) காத்தருள்பவனான ஸ்ரீதியாகராசனால் துதிக்கப் படுபவனைக் காண்பதற்கு இதுவேதான் நற்பொழுது. (எனவே) ஓ மனமே! நேரத்தை மறந்துவிடாதே!.



# 98. கோகிலவராளி - தே$^{3}$சாதி$^{3}$

**பல்லவி**

*ஸமுக$^{2}$ான நில்வ க$^{3}$ல்கு$^{3}$னா? கமலானன!* "ஸ"

**அனுபல்லவி**

*க்ஷமக$^{3}$ல்கு$^{3}$ பூ$^{4}$ தனய ல*
*க்ஷ்மணாதி$^{3}$ மஹாத்முலகே க$^{3}$ானி, அன்யுலகு* "ஸ"

**சரணம்**

*கமலாஸனா த்$^{3}$யமர தி$^{3}$க்பதுலு*
*கலஸவாரிதி$^{4}$லோ கூட$^{3}$ நேரக*
*கு$^{3}$மிகூ$^{3}$டி$^{3}$ மொரலிட$^{3}$ கார்யமுலு*
*கொன ஸாகெனட த்யாக$^{3}$ராஜ விநுத* "ஸ"

**பதவுரை**

| | | |
|---|---|---|
| கமலானன | - | தாமரை முகத்தானே! |
| ஸமுகான | - | உன் இடத்தில் |
| நில்வகல்குனா | - | நிற்க முடியுமா? |
| க்ஷமகல்கு | - | பொறுமைக் குணமுடைய |
| பூ தனய | - | பூமித்தாயின் மகளாகிய சீதை |
| லக்ஷ்மண+ஆதி | - | இலக்குவன் முதலான |
| மஹாத்முலகேகானி | - | மகா புண்ணியர்களுக்கே அன்றி |
| அன்யுலகு | - | மற்றவர்களுக்கு |
| கமலாஸனா+ஆதி | - | பிரம்மா முதலிய |
| அமர | - | தேவர்கள் |
| திக்பதுலு | - | திக்குபாலர்கள் |
| கலஸவாரிதிலோ | - | திருப்பாற்கடலில் |

| | | |
|---|---|---|
| கூடனேரக | - | பகவானைப் பார்க்க முடியாமல் |
| குமிகூடி | - | ஒன்றுசேர்ந்து |
| மொரலு+இட | - | முறையிட்ட வேளை |
| கார்யமுலு | - | பணிகள் |
| கொனஸாகெனட | - | துவங்கியவனல்லவா |
| த்யாகராஜவிநுத | - | தியாகராசனால் வணங்கப்பட்டவனே! |

## பொழிப்புரை

தாமரை முகத்தவனே! உன் அருகில் நிற்க முடியுமா? பொறுமைக் குணமுடைய நில மடந்தையின் மகளாகிய சீதாப்பிராட்டி, இலக்குவன், முதலான மகா புண்ணியர்களுக்கே அன்றி மற்றவர்கள் உன்னருகில் நிற்க இயலுமா? பிரம்மா முதலான தேவர்களும் திக்குபாலர்களும் (அமுதம் விளைந்த) திருப்பாற்கடலில் உன்னைப் பார்க்க முடியாமல் ஒன்றுகூடி முறையிட்ட வேளையிலேயே அவர்களது பணிகள் துவங்கின அல்லவா! தியாகராசனால் வணங்கப்படுபவனே உன்னருகில் நிற்க முடியுமா?



# 99. ஸ்ரீரஞ்ஜனி - தே[1]சாதி[1]

**பல்லவி**

*ஸரி யெவ்வரே? ஸ்ரீ ஜானகி! நீ* ''ஸ'

**அனுபல்லவி**

*பரமாத்முனிகை க[3]டி[3]தே[3]ரி ஸதா[1]*
*ஸிருலிச்சுடகு சேரி கொலிசின நீ* ''ஸ'

**சரணம்**

*வனமந்து[3] பயங்கரமைன தா*
*வுன நில்துனனி மனஸு தெ[3]லிஸி*
*கனகாங்கி[3]! யந்த[3]ந்து[3]ன ராஜஸுகம்பு[3]னு*
*க[3]ல்க[3] ஜேஸிதிவே, த்யாக[3]ராஜனுத* ''ஸ'

**பதவுரை**

| | | |
|---|---|---|
| ஸ்ரீ ஜானகி | - | மங்களகரமாய் விளங்கும் ஜானகியே! |
| நீ | - | உனக்கு |
| ஸரி யெவ்வரே | - | நிகர் எவரோ? |
| பரமாத்முனிகி+அயி | - | இராமனுக்காக |
| கடிதேரி | - | மிக்க நேர்த்தியுடன் |
| ஸதா | - | எப்பொழுதும் |
| ஸிருலு+இச்சுடகு | - | செல்வத்தை கொடுக்க |
| சேரி | - | (இராமனைச்) சேர்ந்து |
| கொலிசின | - | சேவைபுரிந்த |
| நீ | - | உனக்கு |
| வனமந்து | - | காட்டில் |
| பயங்கரமைன | - | பயங்கரமான |
| தாவுன | - | இடங்களில் |

| | | |
|---|---|---|
| நில்துனு+அனி | - | நிலைகொள்ளவேண்டி வருமென்று |
| மனஸு | - | உள்ளத்தில் |
| தெலிஸி | - | உணர்ந்தும் |
| கனகாங்கி | - | பொன்னிகர்த்த மேனியுடையவளே! |
| அந்து+அந்துன | - | அந்தந்த இடத்தில் |
| ராஜஸுகம்புனு | - | சிறப்பான, மிகு இன்பத்தை |
| கல்கஜேஸிதிவெ | - | உண்டாகும்படி செய்தனையே! |
| த்யாகராஜநுத | - | தியாகராசனால்போற்றித் துதிக்கப்படுபவளே! |

## பொழிப்புரை

மங்களகரமாய் விளங்கும் ஜானகி அன்னையே! உனக்கு நிகரானவர் எவர்? பரமாத்மாவான இராமனுக்காக வேண்டி மிகுந்த நேர்த்தியுடன் எப்பொழுதும் (புகழையும் செல்வத்தையும்) திருவை அளிக்க இராமனைச் சேர்ந்து, சேவைபுரிந்த உனக்கு ஈடு எவரோ? காட்டிடத்தே அஞ்சக்கொள்ளத்தக்க இடங்களிலும் நிலைகொள்ள நேரிடுமென்று உள்ளத்துள் உணர்ந்தும் அந்தந்த இடத்தினிலே சிறந்தமுறையில் மிகுந்த இன்பத்தை உண்டாகும்படி செய்தனையே! பொன்னிகர்த்த ஒளியுடை மேனியளே! இத்தியாகராசனால் போற்றித் துதிக்கப்படுபவளே!

## 100. ராமமனோஹரி - ஆதி1

### பல்லவி

*ஸீதா மனோஹர! ச்ருங்க3ாரசேக2ர!* "ஸீ"..

### அனுபல்லவி

*வாதாஸநாரிவர வாஹன!-வாரிஜாஸனாதி3 வந்தி3தபத3!*
"ஸீ"..

### சரணம்

*தொலி ஜன்மமுலனு சேஸின பூஜா*
*ப2லமோ? லேக நீது3 கடாக்ஷ*
*ப3லமோ? நீவாட3னு நேனனி லோகுலு*
*பல்ககா3 த4ன்யுட3 னைதினி* "ஸீ"..

*தீ3னலோக சம்ரக்ஷக! தை3வா*
*தீ4னமு கா3னி நீ ரூபமு நாது3*
*மானஸாப்3ஜமுன நாடியுண்ட3க3 நே*
*நெந்தடி பா4க்ய சாலினோ?* "ஸீ"..

*தி3ட்டதனமுனனு பக்தி ஸ்தி3ரமௌ*
*நட்டுக3ா ஸ்ரீராம என்னடிகி*
*க3ட்டிக3ானு த்யாக3ராஜுனி சேயி*
*ப3ட்டி ரக்ஷிஞ்சி ஏலுகோவய்ய* "ஸீ"..

### பதவுரை

| | | |
|---|---|---|
| ஸீதா மனோஹர | - | சீதாப்பிராட்டியின் மனங்கவர்ந்தவனே! |
| ச்ருங்கார சேகரா | - | சிங்காரத்தின் நிதியானவனே! |
| வாத | - | காற்று |

ஆஸன - உட்கொள்ளும்
அரி - கருடனை
வாகன - வாகனமாக உடையவனே
வாரிஜாஸனாதி - பிரம்மன் முதலியவர்களால்
வந்திதபத - துதிக்கப்படும் திருவடிகளை உடையவனே!
தொலி ஜன்மமுலனு - முற்பிறப்புகளில்
சேஸின - (நான்) செய்த
பூஜா பலமு - பூசையின் பலனோ
லேக - (அன்றி) அல்லது
நீது - உனது
கடாக்ஷ பலமோ - அருள்பார்வையின் பலனோ
நீ வாடனு - உனக்கு வேண்டியவன்
நேனு - நான்
அனி - என்று
லோகுலு - மக்கள்
பல்கேருகா - கூறுகிறார்கள்
தன்யுடனு+அயிதினி - பாக்கியசாலியானேன்
தீன லோக - காப்பாற்றுபவனே!
சம்ரக்ஷக - எளியவர்கள்
தைவாதீனமுகா - கடவுளின் அருளால்
நீரூபமு - உனது வடிவு
நாது - எனது
மானஸாப்ஜமுன - உள்ளத்தாமரையில்
நாடியுண்டக - நிலைத்து இருப்பதற்கு
நேனு - நான்
எந்தடி - எத்துணை
பாக்யசாலினோ - பாக்கியம் பெற்றவனோ!
ஸ்ரீ ராம - ஸ்ரீ இராமனே!
பக்திஸ்திரமு+ஔநட்டுகா - பக்தி நிலைத்து நிற்கும்படியாக
திட்டதனமுனனு - உறுதியாக
என்னடிகி - எப்பொழுதும்
கட்டிகானு - உறுதியாக
த்யாகராஜுனி - (இத்) தியாகராசனுடைய
சேயிபட்டி - கைப்பிடித்து

ரக்ஷிஞ்சி - காப்பாற்றி
ஏலுகோவய்யு - ஏற்றுக்கொள் ஐயனே!

பொழிப்புரை

சீதாப்பிராட்டியின் மனங்கவர்ந்தவனே! அழகு நிதியாய் விளங்குபவனே! மேன்மையான கருடனை வாகனமாகப் பெற்றவனே! பிரம்மன் முதலியவர்களால் துதிக்கப்படுகின்ற திருவடிகளை உடையானே! முற்பிறப்புகளில் (நான்) செய்த புண்ணியின் பலனோ அன்றி உனது அருள் பார்வையின் பலனோ, நான் உனக்கு வேண்டப்பட்டவன் என மக்கள் கூறுகிறார்கள் அன்றோ! (எனவே) நான் பேறு பெற்றவனானேன். எளியவர்களைக் காப்பவனே! தெய்வ அருளால் உனது வடிவு என்னுடைய உள்ளத்தாமரையில் நிலைத்திருப்பதற்கு நான் எத்துணை பேறு பெற்றவனோ? ஸ்ரீ இராமனே! நிலையான பக்தி எந்நாளும் நிலைத்திருக்கும் வண்ணம் இத் தியாகராஜனுடைய கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் காப்பாற்றி ஏற்றுக்கொள் ஐயனே!

